பிலவ, மார்கழி 23

# கல்கி



## பொருளடக்கம்

ஜனவரி 7, 1962



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.






சிகரெட் உற்பத்திக்கான ஆள்பலம், நிதி, பொருள் நிறைவு ஆகிய எவ்வளவோ வசதிகள் நம் நாட்டுக்கு உள்ளன. எனினும் பாரதத்திலே, சிகரெட்டுத் தொழில் தனக்குரிய உயர்நிலையை இன்னும் எய்த முடியவில்லையென்றால், அது இந்திய மூலதனம் சுணங்கிப்போயிருக்கிறது என்பதனாலோ, அல்லது தேர்ச்சிவாய்ந்த தொழிலினம் இல்லாமையாலோ அல்ல. ஆனால் இந்தியாவில் வாணிபக் கூட்டுறவு அமைத்த அந்நியர்களின் ஏகபோக உரிமையாட்சியினால்தான்.

## புகையிலையின் வரலாறு... 9







பம்பாய்—57.

# பனாமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது

GT.709 TM

Greens' Advtg.



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 23

# புத்தாண்டுப் பிரமாணம்

ராஜாஜி

“எல்லா ஜீவராசிகளின் இதயத்திலும் இறைவன் வசிக்கிறான். சூத்திரக்காரன் பொம்மைகளை ஆட்டிவைப்பதுபோல் மக்களையெல்லாம் அவன்தான் தனது மாயையால் ஆட்டி வைக்கிறான். பார்த்தனே! முழு மனத்தோடு உள்ளத்திலிருக்கும் ஈசனிடம் சரண்புகுவாய்” என்றான் கீதாசாரியன். “என்னிடம் சித்தத்தை வைத்தவர்களின் தடைகளையெல்லாம் நான் தகர்த்தருளுகிறேன்” என்றும் உறுதி கூறினான்.

உள்ளத்துக்குள் உறைவதாகக் கீதை கூறும் ஆண்டவனைத்தான் ‘மனச்சாட்சி’ என்று சிலர் சொல்கிறார்கள். ‘என்னுடைய மனச்சாட்சி இப்படிச் சொல்லிற்று’ என்று சொல்லும்போது அவர்கள் ஆண்டவனின் குரலைத்தான் குறிப்பிடுகிறார்கள். தவறான மார்க்கத்தில் அடி எடுத்து வைக்கும்போதெல்லாம் ஆண்டவன் பேசுவான். ‘இந்த வழியில் போகலாமா?’ என்று எழுகிற கேள்வி நாளடைவில் தேய்ந்து போகும் சாதாரண சந்தேகம் அல்ல; நம்மை ரட்சிப்பதற்காக இறைவனே குறுக்கிட்டுப் பேசும் குரல் அது. ஆசையும், வெறுப்பும், கோபமும் மனத்தை இழுத்துச் செல்லும்போது அந்தத் தெய்வ வாக்கை ஏற்கவேண்டும். நம் உடலுக்கு இரத்தம்போல உள்ளத்துக்கு ஆண்டவன். அவனை என்ன பெயர் சொல்லி அழைத்தாலும், ‘மனச்சாட்சி’ என்று குறிப்பிட்டாலும் இதயத்திலிருந்து அவன் பேசிக்கொண்டே இருக்கிறான். நாம் அவனை ஒப்புக்கொண்டாலும் ஒப்புக்கொள்ளா விட்டாலும் நம்மை நல்ல வழிக்கு அழைத்துச் செல்ல அவன் நம் உள்ளத்திலிருக்கிறான்.

உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமன் என்றும்
உளன் கண்டாய் உள்ளுவார் உள்ளத்து உளன்கண்டாய்
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தில் உள்ளானென்று ஓர்

என்று முதலாழ்வாரும் இதையேதான் பாடுகிறார். ரங்கநாதனாகவும், ஸ்ரீநிவாசனாகவும் இன்னும் பலவிதமாகவும் நாம் வழிபடும் பரம்பொருள் நம் இதயத்திலேயே இருந்து நம்மை ரட்சிக்கிறான் என்று பாடுகிறார்.

மனச்சாட்சி என்பது உணர்ச்சிகள் ஒன்றோடொன்று மோதும்போது எழுகிற சந்தேகங்களில் ஒன்றுதான் என்று எண்ணவேண்டாம். அது இறைவனின் இரகசியக் குரல். தேவைப்படும்போதெல்லாம் நமக்கு நன்மை சொல்லும் அந்தக் கடவுளுக்கு நாம் செவி சாய்ப்போமாக. அதேபோல் உடன் வாழும் மக்களை நல்ல வழிக்குத் திருப்புவதற்காக அவர்கள் இதயத்திலுமுள்ள ஆண்டவனுக்கு முறையிடுவோம். அவர்களுக்குள்ளும் இருக்கும் ஆண்டவனை சரண் அடைவோம். ஆண்டவன் சொல்லை நாமும் கேட்கவேண்டும்; மற்றவர்களுக்குள்ளும் அவன் இருக்கிறான் என்பதை மதிக்க வேண்டும். மக்கள் எல்லாரும் கெட்டுப்போய் வரும் இன்றைய துர்ப்பாக்கிய நிலையிலிருந்து நாட்டைக் காப்பாற்ற வேண்டுமானால் இந்தச் சங்கல்பம் மிகவும் அவசியம். ஆண்டவன் ஆணையை நாம் மதித்து, மற்றவரும் மதிக்குமாறு செய்வதுதான் உலகம் முழுவதிலும் அமைதியை ஏற்படுத்துவதற்கும் ஒரே வழியாகும். ஆண்டவனைச் சரண் அடைந்தாலொழிய வழியில்லை.

இந்தப் பணியை முக்கியமாக, மக்களின் விதிகளை நிர்ணயிக்கவும் உலக அமைதியை நிலைநாட்டவும் சக்தி படைத்த ஆட்சியாளர்கள் செய்ய வேண்டும்.

இதைத்தான் சமீபத்தில் போப் ஆண்டவர் தமது ஸ்ரீமுகத்தில் அழகாகச் சொன்னார். 'ஆட்சி செய்கிறவர்களுக்குக் கடவுளின் முன் எவ்வளவு பெரிய பொறுப்பு இருக்கிறது? அதே போல் மனித குலத்தின் முன் அவர்கள் ஆற்ற வேண்டிய பொறுப்பும் எவ்வளவு பெரியது? மனித குலத்தை யுத்தப் பேயிடமிருந்து விடுவிக்கா விட்டால் சரித்திரம் அவர்களைப் பற்றி மிகவும் கடுமையாகத் தீர்ப்பு கூறும்' என்கிறார் போப் ஆண்டவர்.

'தேவதைகளின் கானக் குரலைக் கேளுங்கள்' என்கிற பிரார்த்தனைப் பாட்டைத்தான் ஆங்கில அரசியார் எலிஸபெத்தும் தமது கிறிஸ்துமஸ் செய்தியில் நினைவு படுத்தியிருக்கிறார். 'நம்பிக்கையாலும், அன்பாலும், சேவையாலும் அடைய முடியாதது எதுவும் பூவுலகம் வானுலகம் இரண்டிலும் கிடையாது. இதை நிரூபித்துக் காட்டியதால்தான் இயேசுநாதரின் எளிய ஜனனத்தையும் போற்றிக் கொண்டாடுகிறோம்' என்கிறார் அவர். காரணமற்ற விருப்பு வெறுப்புக்களை அடக்கி ஆண்டு, எதிர்ப்புக்கள் உள்ளபோதும் இலட்சியங்களைத் திடமாகப் பின்பற்றி சக ஜீவர்களுக்காகத் தியாகம் செய்வோருக்கெல்லாம் தம் வாழ்த்துக்களைத் தெரிவிக்கிறார் அரசியார். அதாவது ஆண்டவனின் கட்டளைப்படி, அல்லது 'மனச்சாட்சி'ப்படி நடப்பவர்களுக்கு வாழ்த்துக் கூறுகிறார்.

நம்முடைய பிரதமரவர்கள் தம் நண்பர்களுக்கு அனுப்பியிருக்கும் புத்தாண்டு வாழ்த்துக் கடிதத்தில் ஒரு மேற்கோள் காட்டியிருக்கிறார். 'துவேஷம் துவேஷத்தைத்தான் வளர்க்கும்; அன்போ மற்றவர்களின் அன்பையும் பெற்றுத் தருகிறது' என்ற புத்தரின் பொன் மொழிதான் அது. இந்த அன்பு வளர வேண்டுமானால் ஒவ்வொருவர் அகத்திலும் குடி கொண்டுள்ள ஆண்டவனை நம்பி அவனிடம் முறையிடுவதே உபாயம். 'நான் கொடுத்த வாக்குக்கிணங்க எல்லாத் தடைகளையும் நீக்கி அருளுவான் கண்ணன். அவனுடைய இந்த உபதேசத்தை ஏற்காவிட்டால் நாம் அழிந்து போவோம். 'அகங்காரம் கொண்டு என் வார்த்தையைக் கேட்காமல் போனால் நாசமடைவாய்' என்று அவனே எச்சரிக்கை செய்திருக்கிறான். இதிலிருந்து நாம் நல்லறிவு பெறுவோமாக.

# சலுகை ஆட்சியும் சட்டத்தின் ஆட்சியும்

போட்டா போட்டியுள்ள தனியார் தொழிலைப் பேணி வளர்க்க வேண்டும்; அப்போதுதான் தரமான பொருள்கள் நியாயமான விலைக்குக் கிடைக்கும் என்று சுதந்திரக் கட்சி கூறி வருகிறது. இன்று காங்கிரஸ் ஆட்சியும் தொழில் துறையினரிடையே வேறொரு விதத்தில் போட்டா போட்டியை வளர்த்துத்தான் வருகிறது: ஆனால் இதன் காரணமாக இன்று நம்முடைய பொருளாதாரமும், அதோடு தர்ம உணர்ச்சியும் மேலும் இழிநிலைதான் அடைந்து வருகின்றன. காங்கிரஸ் வளர்க்கும் போட்டா போட்டிக்கும், சுதந்திரக் கட்சி விரும்பும் போட்டா போட்டிக்கும் பெரிய வித்தியாசம். முதலீடு செய்வதற்கும், வியாபாரம் நடத்துவதற்கும் தொழில் துறையினருக்குச் சுதந்திரமளித்தால் அவர்கள் போட்டி போட்டுக் கொண்டு நல்ல முறையில் மக்கள் வாங்கும்படியான பொருட்களைத் தயாரிப்பார்கள்; எனவே அவர்களைச் சுயேச்சையாகப்போட்டியிட அநுமதிக்க வேண்டும் என்கிறது சுதந்திரக் கட்சி. ஆனால் சுதந்திரத் தொழிலுரிமையைப் பறித்து அதற்குப் பதில் பெர்மிட்-லைசென்ஸ் - கோட்டா முறையைப் புகுத்தியுள்ள காங்கிரஸ் கட்சி இந்தச் சலுகைகளைப் பெறுவதிலேயே தொழில் துறையைச் சேர்ந்தவர்களுக்குள் பலத்த போட்டியை ஏற்படுத்தி யிருக்கிறது!

தொழில் தொடங்கவும், தொடர்ந்து நடத்தவும், விஸ்தரிக்கவும் சர்க்காருடைய அநுமதியைப் பெறுமாறு செய்திருக்கிறது காங்கிரஸ். இந்த அநுமதியைப் பெறுவதற்கு எல்லோரும் முண்டியடித்துக் கொண்டு வருகிறார்கள். சிலருக்கு மட்டும் யோகம் அடிக்கிறது. இவர்கள் நன்றிக்காக இல்லாவிட்டாலும், இந்தத் தயவு நீடிக்க வேண்டும் என்பதற்காகவாவது காங்கிரஸுக்குக் காணிக்கை செலுத்துகிறார்கள். மற்றத் துரதிருஷ்டசாலிகளும் இன்றைக்கு இல்லா விட்டாலும் என்றோ ஒரு நாளாவது சலுகை பெற வேண்டுமானால் ஆளும் கட்சியைச் சரிக்கட்டி வைக்க வேண்டாமா? சர்க்காரின் கருணைக்காகக்



பம்பாய்த் தொழில்துறைப் பிரமுகர் திரு ஏ. வி. ராமலிங்கம் அவர்களின் மருமகள் சௌ. ராதாமணிக்கும் ஹிந்துஸ்தான் கெமிக்கல்ஸைச் சேர்ந்த திரு மாணிக்கத்துக்கும் பம்பாயில் வெகு விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது. திருமணத்துக்கு நண்பர்களும், உறவினர்களும் வந்திருந்து சிறப்பித்தனர். வாழ்க மணமக்கள்!

---

காத்துக் கிடக்கும் மாபெரும் 'க்யூ'வில் நிற்கும் இவர்கள் சீக்கிரம் 'டிக்கெட்' பெற வேண்டாமா? எனவே, தொழில் துறையில் சலுகை பெற்றவர், பெறுபவர் எல்லாருமே காங்கிரஸ் மகாசபையின் கஜானாவை நிரப்பப் போட்டி யிடுகிறார்கள்.

தொழில் நடத்தும் அனுமதியைத் தர வேண்டியது சர்க்கார் தான். அந்தச் சர்க்காரோடு ஆளும் கட்சி அத்துவைதமாகக் கலந்து விட்டபடியால் கட்சிக்குப் பணம் சேகரித்துக் கொண்டே சர்க்காருடைய அனுமதியைத் தருகிறது காங்கிரஸ். பிற ஜீவராசிகளின் ஜீவசத்தை உறிஞ்சியே உயிர் வாழும் ஒட்டுண்ணிகளைப்போல் தொழில் துறைக்காரர்களின் ஒட்டுண்ணி ஸ்தாபனமாகி விட்டது இன்றைய காங்கிரஸ்.

'புது ஷேர்களுக்கு விளம்பரம் போட்டு மூலதனத்தைப் பெருக்கப் போகிறீர்களா? அதற்காகச் சர்க்காருக்கு விண்ணப்பம் செய்திருக்கிறீர்களா? இதோ வரமளிக்கப்படும். நைவேத்தியம் மட்டும் பலமாக இருக்க வேண்டும்' என்கிறது காங்கிரஸ். உடனே அதன் பொக்கிஷம் செழிக்கிறது. தனது தொழிலை வளர்த்து, அதன் மூலம் உற்பத்தியைப் பெருக்கும் ஒரு தொழில் நிறுவனம் இதற்காகச் சர்க்காரிடம் அனுமதி பெற வேண்டும் என்பதே அக்கிரமம் என்றால், ஆட்சியிலுள்ள கட்சிக்குப் பணம் செலுத்த வேண்டுமென்பது அதைவிட அக்கிரமம். தேசத்திலுள்ள எல்லாச் சொத்துக்களுக்கும் சேமிப்புக்களுக்கும் காங்கிரஸ் கட்சியே உரிமையாளராகி விட்டதா என்ன? தேச நலனுக்காகச் சர்க்கார் வரி போடுவது போலவே, கட்சியை வளர்ப்பதற்கும் சர்வ சகஜமாகக் காணிக்கைகள் விதித்துப் பெற்றுக் கொள்கிறது அது. பெரிய பெரிய கம்பெனி டைரக்டர்களிலிருந்து ஒரே ஒரு லாரி வைத்து ஓட்டுபவர் வரை எல்லோரிடமிருந்தும் அதிகார பலத்தைக் கொண்டு வரிகளைப் போல் பணம் வசூலிக்கிறது.

தொழிலில் ஈடுபட்டவர்கள் எல்லோரும் சர்க்காரை நம்பி வாழும்படி செய்துவிட்ட மகத்தான ராஜதந்திரத்தால்தான் இந்த அநியாயம் தங்கு தடையில்லாமல் நடக்கிறது. இந்தத் தந்திரத்தை ஒவ்வொரு ராஜ்யத்திலும் முன் நின்று நடத்தி வைப்பவர்கள் அந்தந்த ராஜ்ய முதன் மந்திரிகள் தாம். இவர்களுக்கெல்லாம் மேலே தேசத்துக்கே ஒருவராக டில்லியில் உள்ள பெரிய மந்திரி—மகா பெரியவரான நேரு அவர்கள் — இந்த முறை எவ்வளவு கச்சிதமாக வேலை செய்கிறது என்பதைக் கண்டு பூரிக்கிறார். இந்த வேலை முறை முழுவதும் அவர் மிகவும் நன்றாக அறிந்த விஷயம் தான். அவருக்குத் தெரியாமல் இப்படி நடக்கிறது என்று யாரும் சந்தேகப்பட வேண்டாம். நேரு அவர்களின் பெயரைச் சொல்லித் தாங்கள் பெயரெடுப்பதற்காக மற்ற சில்லறைத் தேவதைகள் அவருக்கு ஆமாம் பூசாரி போடுவது போலவே, தம்மைத் தலைமையில் வைத்திருப்பதற்காக நேரு அவர்களும் கீழ் மட்டத்திலுள்ளவர்கள் செயலுக்கெல்லாம் 'ததாஸ்து' பாடி வருகிறார். ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்காக உபயோகிக்கும் ஆயுதங்களிடமே அவற்றைத் தாங்கி யிருப்பவன் சரண் புகும் விசித்திரமான செயல் போக்கு இது. இந்த ஆயுதங்களின் வெற்றியைத் தமது வெற்றியாக எண்ணி மகிழ்கிறார் பிரதமர்.

உயர் மட்டங்களில் யோக்கியதை குன்றிப்போனால் நாட்டில் யார் தர்ம வாழ்வு வாழ்வார்கள்? தர்ம சக்கரம் பொறித்த கொடியை வீசிக்கொண்டே அதர்மத்தில் தலைதெறிக்கச் செல்கிறார்கள் காங்கிரஸ்காரர்கள். சுதந்திரத்துக்காகவும் நியாயமான போட்டிக்காகவும் போரிடுபவர்கள்தான் அவர்களுடைய விரோதிகள். சர்க்காரின் சலுகைகளைப் பெற்ற செல்லப் பிள்ளைகளும் அவற்றுக்காகப் பாடுபடும் மற்றவர்களும் காங்கிரஸ்காரர்களோடு சேர்ந்து கொள்கிறார்கள். எதிர்காலத்

தைக் காணத் தவறுவதால் தற்கால நலனை மட்டுமே பெரிதாக நினைத்து மயங்குகிறார்கள் தொழில் துறையினர். காங்கிரஸ் காட்டும் தேன் தடவிய விஷ மாத்திரையைத் தேடிச் செல்கிறார்கள். எதிர்காலத்தில் தங்களையே அழிக்கப் போகும் முறை இந்தக் கண்ட்ரோல் ராஜ்யம் என்பதை மறந்து அதற்கு ஊட்டம் அளிக்கிறார்கள். தீர்க்க தரிசனமும், தரும உணர்ச்சியும், தேச பக்தியும் உள்ள ஒரு சில தொழிலதிபர்கள் சுதந்திரக் கட்சிக்கு உதவ முன்வந்தால் அந்தத் தைரியமும் விவேகமும் தேவையில்லாதவை என்று கருதி அவர்களை அடக்கப் பார்க்கிறார்கள்.

இதனால் தேசத்தின் நன்னெறியே குலைந்து போகிறது. மக்களில் ஒவ்வொருவரும் தாங்களாக நேர்மையை இழந்துவிட்டதால் இவ்வாறு நிகழவில்லை; நாம் வாழும் ஆட்சி முறையிலுள்ள நேர்மைக் குறைவு காரணமாகத் தான் மக்களும் தர்மத்தைக் கை விட வேண்டி வந்து விட்டது. இந்தச் சர்க்காரின் அதிகாரங்கள் குறைய வேண்டும். அப்போதுதான் கட்சிச் சலுகையும், சலுகைக்காக நடக்கும் போட்டியும், போட்டியிடுபவர்களின் தார்மீகச் சீரழிவும் நிற்கும். சலுகைகளை அளித்துக் கட்சிக்குப் பலம் தேடிக் கொள்வதற்காகவே பெருத்த அதிகாரங்களை சிருஷ்டித்துக் கொண்டுள்ள காங்கிரஸை ஆட்சியிலிருந்து இறக்குவதொன்றுதான் நாட்டின் அறவாழ்வைக் காப்பாற்ற முடியும். சலுகை ஆட்சி ஒழிந்து சட்டத்தின் ஆட்சி ஏற்பட வேண்டுமென்று விரும்புகிறவர் யாவரும் சுதந்திரக் கட்சிக்கே ஆதரவு தர வேண்டும்.

# உசிதமற்ற ‘சமயோசிதம்’

பெர்முடாவில் கூடிப் பேசிய பிரிட்டிஷ் பிரதமர் மாக்மில்லனும், அமெரிக்க ஜனாதிபதி கென்னடியும் உலக முழுவதையும் விஷமண்டலத்தால் மூடுவது என்ற ‘சமயோசிதமான’ முடிவுக்கு வந்திருக்கிறார்கள். அமெரிக்காவும் பிரிட்டனும் அணுகுண்டு பரிசோதனையைத் தொடங்கவேண்டும் என்ற இவர்களது முடிவு ருஷியாவின் அணு ஆயுதச் சோதனைகளை முறியடிப்பதற்காகவே ‘சமயோசிதமாக’ வெளியானது என்று கூறிக் கொண்டிருக்கிறார்கள். உலகத்தில் விஷச் சத்துக்களை வாரியிறைப்பது எப்படிப் பார்த்தாலும் உசிதமற்ற செயல் என்பதை அவர்கள் மறந்து போனது ஒரு பெரும் விந்தையே யாகும்!

ருஷியா அண்டார்க்டிக் சமுத்திரத்தில் குண்டுகளை வெடித்தால் மேலை வல்லரசுகள் இரண்டும் பசிபிக் கடலில் சோதனை நடத்தப் போகின்றனவாம். இடம் எதுவானால் என்ன? இதிலிருந்து விளையும் கதிரியக்கம் உலகம் முழுவதிலும் பரவத்தான் போகிறது. குண்டு வெடிக்கும் நாட்டு மக்களையும் பாதிக்கப் போகிறது.

இதைத் தடுத்து நிறுத்துவதற்கு இன்று ஒரு நாடும் இல்லை. இந்தியா மேல் நாடுகளின் வெறுப்பைத் தேடிக் கொண்டிருப்பதோடு மட்டுமின்றி, சோதனை நிறுத்தத்தைவிடப் பூரண படை பலக் குறைப்பையே அதுபெரிதாகக் கருதி வருகிறது. ருஷியா வற்புறுத்தி வருவதும் இதுதான். பூரணப் படை பலக் குறைப்பு நடைமுறைக்கு வருவது எளிதான காரியமல்ல. உடனடி ஆபத்து — எளிதில் தடுக்கக் கூடிய ஆபத்து — அணுச் சோதனைதான். இந்த ஆபத்தை விளைவிக்க இன்று இரு எதிரிடை கோஷ்டிகளும் முனைந்திருப்பது புத்தாண்டின் உதய வேளையில் ஒரு கரிய மேகமாகவே தோன்றுகிறது.

# குருடாக்க வேண்டாம்

தமிழ்மொழியை நம்முடைய இதயம் என்று சொன்னால் ஆங்கிலத்தையும், வடமொழியையும் நமது இரு கண்கள் என்று கொள்ளலாம். அறிவியல் நூல்கள், உலக நடப்பு குறித்த ஞானம் இவற்றை அளித்துப் பொதுவில் இவ்வுலக வாழ்வுக்கு வசதி கூட்டுவது ஆங்கிலம். வேதாந்தம், தத்துவ விசாரம் இவற்றில் ஞானம் பெற்றும், தெய்வ பக்தியை வளர்த்துக் கொண்டும் அமர வாழ்வுக்கு வழி வகுத்துக்கொள்ள வடமொழி முக்கியமாக உதவுகிறது. இவ்விரண்டு கண்களுக்கும் ஊறு விளைவிப்பதாகவே அமைந்துள்ளன தற்போது தேசிய ரீதியிலும் அந்தந்த ராஜ்யங்களின் அடிப்படையிலும் நடைபெறும் காரியங்கள்.

சில காலத்துக்கு முன்பு ராஜ்யங்களின் முதன் மந்திரிகள் ஒன்றுகூடிக் கல்விக்காக மும்மொழிக் கொள்கை என்பதாக ஒன்றை வகுத்தார்கள். இதை ஆமோதித்திருக்கிறது சமீபத்தில் வெளியாகியுள்ள ஒருமைப்பாட்டுக் குழுவின் அறிக்கை. இந்தி பேசப்படாத ராஜ்யங்களில் தாய்மொழி, இந்தி, ஆங்கிலம் மூன்றையும் போதிக்க வேண்டும்; இந்தி பேசப்படும் ராஜ்யங்களில் இந்தி, ஏதேனுமொரு தென் மொழி, ஆங்கிலம் இவற்றைக் கற்றுக் கொடுக்க வேண்டும் என்பதாகச் சிபாரிசு செய்திருக்கிறது ஒருமைப்பாட்டுக் குழு.

தாய்மொழி, ஆங்கிலம் இரண்டையும் படித்தேயாக வேண்டுமென்பதில் இரண்டாவதுகருத்துக்கு இடமே இல்லை. ஆனால் இந்தி மொழியை ஆரம்ப வகுப்புக்கள் முடிந்ததிலிருந்து கல்லூரிப் படிப்பு முடியும்வரை போதிக்க வேண்டியது அவசியந்தானா என்றவினாஎழுகிறது. இலக்கியத்திலோ, விஞ்ஞானத்திலோ அவ்வளவாக முன்னேறியில்லாத ஒரு மொழியை இவ்வளவு நீண்டகாலம் கற்க வேண்டுமென்ற யோசனை நியாயமற்றதாகும். இந்த மும்மொழிக் கொள்கையால் வடமொழி அடியோடு புறக்கணிக்கப்பட்டிருக்கிறது. எனவே சில ஆண்டு இந்திப் பயிற்சிக்குப் பின்னராவது வடமொழி கற்க வசதி செய்து தரவேண்டியது அவசியமாகும். ஏனெனில் இன்றைய யோசனை அமுலானால் வடமொழிப் பயிற்சிக்கென்றே உள்ள தனிப்பட்ட கல்வி நிலையங்களில் படிப்பவர்கள் தவிர மற்ற மாணவர்கள் ஆன்மீகச் செல்வக் கருவூலமான வடமொழியிலிருந்து ஒரு சிறிதும் பயன்பெற முடியாது. தர்மம், தர்மத்துக்கு அடிப்படையான பக்தி, சமய சிந்தனை, தத்துவ ஆராய்ச்சி இவற்றையெல்லாம் கூறும் ஒரு பெருமொழியை—தொன்று தொட்டு நாட்டு மக்களை இணைத்து வந்த ஒரு ஐக்கிய சக்தியை — அலட்சியப் படுத்திவிட்டுத் தேசிய ஒருமைப்பாட்டுக்காகப் பாடுபடுவது சுவரை இடித்துவிட்டுச் சித்திரம் எழுத முயலுவது போன்ற மடமையேயாகும். மாணவர்கள் யாவரும் ஒரே மாதிரி உடை அணிவதாலோ, ஆறு மாதத்துக்கொரு முறை தேச விசுவாசப் பிரதிக்ஞை எடுத்துக் கொள்வதாலோ, தினந்தோறும் தேசிய கீதம் பாடுவதாலோ ஐக்கியம் வளரும் என்று ஒருமைப்பாட்டுக் குழுவினர் எண்ணுகிறார்கள். ஏன், தாங்கள் ஐக்கியத்தைப் பற்றி அறிக்கை தயாரித்து விட்டதாலேயே நாட்டில் ஒற்றுமை ஏற்பட்டு விட்டது என்றுகூட நினைத்து இவர்கள் திருப்திப்பட்டு விடலாம். அனைவரையும் சகோதரர்களாகப் பிணைத்து வைக்கும் தெய்வத்தைக் கல்வி நிலையங்களிலிருந்து அறவே ஒதுக்கி வைத்து விட்டு ஐக்கியம் பற்றிக் கனவு காண்கிறார்கள். அதோடு ஆஸ்திக, ஆன்மீக சம்பந்தம் அதிகமுள்ள ஒரு மொழியையும் வெளியேற்றி யிருக்கிறார்கள்.

ஆங்கிலத்தைக் குறித்த இவர்களது உட்கருத்தும் நம்பிக்கைக்கு ஒவ்வாததாகும். கல்லூரிகளில் ஆங்கிலம் போதனை மொழியாக இருக்கக் கூடாது; தற்போதைக்குப் பிராந்திய மொழிகளில் போதனை நடைபெற்று இறுதியில் இந்தியிலேயே கல்லூரிப் போதனை நடை-

**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
**மயிலாப்பூர், சென்னை-4**

சுவாமி விவேகானந்தரின் நூல்கள் யாவற்றையும் தமிழில் மொழிபெயர்க்கவும், செப்பம் செய்யவும் தேர்ந்த தகுதி வாய்ந்த முழு நேர கூட்டுப் பொறு ஆசிரியர் உடனடியாகத் தேவை. அபேட்சகர் எம். ஏ. பட்டதாரியாகவும், ஆங்கிலத்திலும் இலக்கியத் தமிழிலும் ஆழ்ந்த ஞானமுள்ளவராகவும், மதக் கிரந்தங்களிலும் சமய சாஸ்திர சொற்றொடர்களிலும் விவேகானந்தர் இலக்கியத்திலும் நல்ல பரிசயமுள்ளவராகவும் இருக்க வேண்டும். அநுபவஸ்தர்கள் மட்டுமே, தாங்கள் விரும்பும் குறைந்த பட்ச ஊதியத்தைக் குறிப்பிட்டு 1962 ஜனவரி 10-ந் தேதிக்கு முன்னதாக மானேஜருக்கு மனுப் போடவும்.

பெற வேண்டும் என்பதே வட இந்தியர்களின் அந்தரங்க ஆசை. உலக முழுவதிலும் நடைபெறும் விஞ்ஞான, கலை வளர்ச்சியை உடனுக்குடன் பிரதிபலிப்பதுதான் ஆங்கிலத்தின் தனிச் சிறப்பாகும். ஆனால் ஒருமைப்பாட்டுக் குழு நுட்பச் சொற்கள் உட்பட பிராந்திய மொழியிலேயே விஞ்ஞான போதனை நடக்க வேண்டும்; 'பொது' அறிவுக்காக ஆங்கிலமும் கற்கவேண்டும் என்று விதித்திருக்கிறது. மொழிப்பித்து பிடித்த சில ராஜ்ய சர்க்கார்களோ இந்த அளவுக்குக்கூட ஆங்கிலத்துக்கு இடமளிக்குமா என்பதே சந்தேகம். இந்தியிலேயே படித்துப் பட்டம் பெற்றவர்கள் ஏராளமாக இருக்கிறார்கள் என்பதால் தமிழில் படித்துப் பட்டம் பெற்றவர்களையும் உற்பத்தி செய்யத் தமிழக சர்க்கார் முயன்று வருகிறது. கல்வியின் தரத்தைப்பற்றியோ, கல்வி கற்றவர்கள் நாடெங்கும் சென்று பணிபுரிய இயலுமா என்பது பற்றியோ அக்கறை காட்டாமல் பிடிவாதமாகத் தன்போக்கிலேயே செல்கிறது அது.

இப்போது நாட்டின் பல்வேறு பகுதிகளிலுமுள்ள பல்கலைக் கழகங்களில் ஆங்கிலத்தில் போதனை நடைபெறுவதால்தான் படிப்பாளிகள் யாவரும் இந்தியாவெங்கும் பணி புரியவும், பழகி வாழவும் இயலுகிறது; ஆங்கிலத்தினால்தான் இன்று நாட்டு நலனைப் பற்றிய அக்கறையும், விஷய ஞானமும் உள்ளவர்கள் தொடர்பு கொண்டு வாழ்கிறார்கள். பிராந்திய மொழிகள் கல்லூரி போதனை மொழியானால் சர்வதேசச் சாளரமான ஆங்கிலம் மூடப்படுவதோடு படிப்பாளிகளுக்கு இடையே உள்நாட்டில் நிலவி வந்த ஐக்கிய பாவமும் இருந்த இடம் தெரியாமல் போய்விடும். அறிவாளிகள் குறிப்பிட்ட பகுதிகளில் தேங்கி வாழ நேரிட்டால் அதன் பின் ஒரு நாடு மேம்பாடு பெற வழியே இடையாது. எனவே ஆங்கிலம் நமது பழைய எஜமானர்களின் மொழி என்பதை மறப்போம். அவர்கள் அமைத்துக் கொடுத்த ரயில் பாதையும், தபால் இலாகாவும், அணைகளும் இன்று எப்படி நம் சொத்தாக உள்ளனவோ அதேபோல் அவர்கள் இங்கு கொண்டு வந்து சேர்த்த ஆங்கிலத்தையும் இந்தியா ஸ்வீகாரம் செய்து கொள்ள வேண்டும் என்று உணர்வோம்; உணர்ந்து ஆட்சியிலும், கல்வியிலும் அதற்குரிய இடத்தைத் தருவோம்.

# பல்கலைக்கழகத்தில் 'கல்கி'

பேரிலக்கியம் படைத்த 'கல்கி' அவர்களைப் பேராசிரியர் என்றே நாம் போற்றி வந்திருக்கிறோம். இந்தப் பேராசிரியர் நம் சென்னைப் பல்கலைக் கழகத்தின் ஓய்வுபெறாத பேராசிரியராக என்றும் நிலைத்து வாழப்போகிறார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். 'கல்கி' அவர்களின் நினைவில் சென்னைப் பல்கலைக் கழகத்தில் ஒரு நிதி நிறுவப்பட்டுள்ளது. இதனின்று ஆண்டு தோறும் தமிழ்மொழி குறித்தும், இலக்கியம் குறித்தும் பல்கலைக் கழகத்தில் பேருரைகள் நிகழ்த்த ஏற்பாடு செய்யப்படும் என்று அறிவித்திருக்கிறார்கள்.

'கல்கி' அவர்களின் நினைவைப் போற்றுவதற்காக நிதி சேகரித்த குழுவினர் அந்த நிதியைப் பல்கலைக் கழகத்தில் ஒப்புவித்து இந்த அருமையான காரியத்துக்குக் காரணபுருஷர்களாகி யிருக்கிறார்கள். அவர்கள் யாவருக்கும் நம்முடைய மனமார்ந்த பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்கிறோம். நாளும் கலை வளர்த்த 'கல்கி' அவர்களின் நினைவுக்கு இதைவிடச் சிறப்பாக அஞ்சலி செலுத்த முடியாது. 'கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி ஞாபகார்த்த நிதி' பல அரிய உரைகளும், ஆராய்ச்சிகளும் தோன்றக் காரணமாக இருக்கும் என்று நம்புகிறோம். பேராசிரியருக்கும், பல்கலைக் கழகத்துக்கும், தமிழுக்கும் ஒருங்கே கிட்டியுள்ள இந்தப் புகழில் நாமும் பங்கு பற்றிப் பெருமிதம் அடைகிறோம்.

# என்ன சேதி?

## நல்ல முடிவு

இந்திய வைத்தியக் கல்லூரி ஒன்றை 1962-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் நிறுவுவதாக அரசாங்கம் முடிவு செய்துள்ளது. சென்னையிலேயே இந்தக் கல்லூரி அமைக்கப்படும் என்றும் கல்லூரியுடன் ஆஸ்பத்திரியும் இணைக்கப் படுமென்றும் தெரிகிறது. மத்திய சர்க்காரின் சுகாதார இலாகாவைச் சேர்ந்த ஆயுர்வேத ஆராய்ச்சிக் குழுவினர் வகுத்துள்ள பாட திட்டத்தை அநுசரித்து இக் கல்லூரியில் போதனை நடக்கும். ஆகவே இந்தத் திட்டப்படி பயிற்சி பெறுபவர்களுக்கு அகில இந்திய தரத்தில் ஆக்கமும் ஊக்கமும் இந்திய சர்க்காரிடமிருந்து கிடைக்கும். அவசியமான அளவுக்கு நவீன வைத்திய முறைகளிலும் பயிற்சி அளிப்பார்கள். இந்திய வைத்திய முறைகளில் ஆராய்ச்சிகள் நடத்தவும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இந்த யோசனைகளை நடைமுறை யாக்குவதற்கு ஒரு நிபுணர் குழு அமைக்கப் பட விருக்கிறது. மகிழ்ச்சி அடைய வேண்டிய விஷயம். ஆங்கில வைத்திய முறையிலிருந்து நாம் பயன் பெறலாம். எனினும் பல்லாயிரம் ஆண்டுகளாக நம் மக்களின் தனிப்பட்ட உடல்-உள்ள அமைப்புக்களை அறிந்து பிணி தீர்த்து வந்துள்ள உள்நாட்டு மருத்துவக் கலை புத்துயிர் பெற வேண்டியதும் அவசியமே அல்லவா?

## பெற்ற தாயினை மறந்த மகவு!

'எனக்கு அப்பாவும் வேண்டாம், அம்மாவும் வேண்டாம்; என்னைப் பாதுகாப்பதெல்லாம் சர்க்கார்தானே?' என்று ஐந்து வயதான ஒரு ருஷ்யச் சிறுவன் மாஸ்கோவில் கூறினானாம். இளம் உள்ளத்தில் கம்யூனிஸத்தைப் பயிர் செய்யும் 2,700 நிபுணர்கள் இதைக் கேட்டு அகமகிழ்ந்து போனார்களாம். ஆண்டவனை ஒதுக்கிவிட்டதோடு மட்டுமல்லாமல், குடும்பத்தையும் அழித்து விட்டது கம்யூனிஸம். உள்ளத்துக்கு ஒருவித உணவுமில்லாத பாலைவன வாழ்க்கையே கம்யூனிஸம். கம்யூனிஸ நாடுகளில் உடலுக்குக் கிடைக்கும் ஊட்டமும் சர்க்கார் தயவைப் பொறுத்ததுதான். ஆடுமாடுகளைப்போல் எல்லோரும் வித்தியாசமின்றி அடிமைத் தொழிலாளராக வாழும் சுவர்க்கம்தான் கம்யூனிஸம். பாசமும், பரிவும், அன்பும், அறமும் செறிந்த பாரதத்தின் வாழ்க்கையில் நேரடியாகவும், மறைமுகமாகவும் கம்யூனிஸத்தைப் புகுத்துவது எவ்வளவு ஆபத்தானதென்பதற்கு இந்தச் சம்பவம் ஒன்றே போதும்.

## டாக்டர் நியமதுல்லா மறைவு

முன்னாள் சென்னை மேயர் டாக்டர் நியமதுல்லா அவர்களின் மறைவு நகரத்தின் ஒரு பேரிழப்பாகும். இருபதாண்டுகளுக்கு நகராண்மைக் கழக அங்கத்தினராக அவர் பணி புரிந்திருக்கிறார். யூனானி வைத்திய நிபுணராகிய அவர், சென்னை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களிலும் தொண்டாற்றி யிருக்கிறார். அவரது பிரிவால் இன்று வருந்தும் பல சமூக ஸ்தாபனங்களே அவரது பொது நலப் பணிக்கு ஒரு புகழ்மாலையாகும்.

## இசைக் கலைஞர்களுக்கோர் அருளாணை

இசையினால் அற்புதங்களை நிகழ்த்த முடியும் என்று நம்புபவர்கள் நாம். இதற்கேற்ப ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் எட்டுக் கிரகங்களின் சேர்க்கையினால் ஏற்படக்கூடிய தீங்கைத் தவிர்ப்பதில் இசைக் கலைஞர்களுக்கு ஒரு பங்கினை அளித்திருக்கிறார்கள். இந்த ஆண்டு தைமாதம் முதல் தேதி, அதாவது மகர ஸங்க்ராந்தியன்று ஆரம்பித்து, அந்த மாதம் 23ந் தேதி முடிய சங்கீத அப்பியாசமுள்ள எல்லோரும் - விசேஷமாக சங்கீத வித்வான்கள் - ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் அவர்களின் நவக்கிரஹக் கீர்த்தனங்களைக் கோவில்களிலோ அல்லது அவரவர்கள் வீடுகளிலோ கானம் செய்ய வேண்டுமென்று ஸ்ரீ பெரியவர்கள் திருவுள்ளம் கொண்டிருக்கிறார்கள். இவ்விதம் கானம் செய்பவர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதினால் ஆசாரிய சுவாமிகள் அநுக்கிரஹத்துடன் கூடிய அக்ஷதை அனுப்பி வைக்கப்படும்: மானேஜர், காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் ஸ்ரீமடம், இளையாத்தங்குடி முகாம், ராமநாதபுரம் ஜில்லா.



# மேட்டூர் கெமிக்கல்ஸ் வெள்ளி விழா

ஐந்தாண்டுத் திட்டங்களின் உற்சாகத்தினால் பல புதுப் புதுத் தொழில்கள் இப்போது தோன்றிக் கொண்டு வருகின்றன. இவை சகஜமாகவே கருதப்படுகின்ற அளவுக்கு நமக்குப் பழகிப் போய்விட்டன. ஆனால் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் இந்தியா சுதந்திரம் அடையாமல் இருந்த காலத்தில், பிரிட்டிஷ் ஆதிக்கம் நாட்டின் பொருளாதாரத்தைத் தனது பிடியில் வைத்துக் கொண்டிருந்த காலத்தில், திட்டங்கள் வகுப்பது என்பதே கனவிலும் கருதப் படாத சூழ்நிலையில் ஒரு புதுத் தொழிலை ஏற்று வெற்றிகரமாக நடத்த வேண்டுமானால், மிகுந்த சாமர்த்தியமும், தீர்க்கதரிசனமும், தொழில் ஆர்வமும் மட்டும் இருந்தால் போதவில்லை; மிகுந்த மனோதைரியமும், தன்னம்பிக்கையும் தேவைப்பட்டன. அப்படிப்பட்டவர்கள் அந்தக் காலத்திலேயே இருந்தனர் என்பதற்கு மேட்டூர் ரசாயனத் தொழிற்சாலை ஓர் எடுத்துக்காட்டு.

இந்தக் கம்பெனியின் சரித்திரம் இருபத்தைந்து ஆண்டுகளே கொண்டது என்றாலும், தென்னகத்துத் தொழில் துறையில் மிகவும் ரசமானது. கல்கத்தாவில் பல தொழில்களில் ஈடுபட்டிருந்த தயாராம் அண்டு ஸன்ஸ் கம்பெனியாரால் 1936ம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட இக் கம்பெனி நாளொன்றுக்கு ஐந்து டன் காஸ்டிக் ஸோடா உற்பத்தி செய்ய நிறுவப்பட்டது. ஆனால் அப்போதிருந்த சூழ்நிலையில் அவர்களால் இத் தொழிற்சாலையை நடத்த முடியாமல்போகவே, இதைத் தென்னாட்டுத் தொழிலதிபர்களான சேஷசாயி பிரதர்ஸ் கம்பெனியார் தங்கள் நிர்வாகத்திற்கு மாற்றிக் கொண்டு, நடத்த முன்வந்தனர். அதற்காகத் தேவைப்பட்ட மூலதனம் மிகக் குறைவுதான் - ஆறு லட்சம் தான்.- ஆனால் சிறிய தொகைகள்கூட அக்காலத்தில் திரட்டுவது கஷ்டமாகவே இருந்தது. தமது செல்வாக்கினாலும், தம்மிடத்தில் மற்றவர்கள் வைத்திருந்த அபார நம்பிக்கையினாலும், சேஷசாயி கம்பெனியின் முக்கியஸ்தரான ஸ்ரீ வி. சேஷசாயி போதிய மூலதனத்தைச் சேகரித்ததும் அல்லாமல், இந்தத் தொழிற்சாலையைக் கொஞ்சம் கொஞ்சமாக அபிவிருத்தி செய்து பல புதிய பொருள்களை உற்பத்தி செய்து இந்த ஸ்தாபனத்தை நாட்டில் முதல் வரிசையில் இடம் பெறும்படி செய்துவிட்டார். இக் கம்பெனியின் மூலதனம் பத்து லட்சத்திலிருந்து இன்றைக்கு ஒரு கோடி ரூபாயாகப் பெருகியுள்ளது. இம்மூலதனத்தை வழங்கியுள்ள சுமார் 3500 தனி நபர்களும் ஸ்தாபனங்களும் பணக்காரர்கள் அல்ல. பெரும்பாலும் மத்திய தர வருமானமுள்ளவர்கள். டாக்டர்கள், வக்கீல்கள், உபாத்தியாயர்கள், வர்த்தகர்கள், குமாஸ்தாக்கள் முதலிய சாதாரண மக்கள் இக்கம்பெனியின் பங்குதாரர்களில் எண்பது சதவீதம் இருக்கின்றனர். ஜனநாயக முறை தொழில் துறையில் செயல்படுகிறது என்பதற்கு இக்கம்பெனியின் பங்குதாரர்கள் ஓர் உதாரணம். ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பரேஷன்தான் இக்கம்பெனியில் அதிகமாகப் பங்குகள் வைத்துள்ள ஸ்தாபனம்.



வி. சேஷசாயி

ஆரம்ப காலத்தில் காஸ்டிக் ஸோடா மட்டுமே தயாரிக்கப்பட்டது. இதர தொழில்களுக்கு எஃகு எப்படி ஆதாரப் பொருளோ அதேபோல ரசாயனத் துறையில் காஸ்டிக் ஸோடா ஓர் ஆதாரப் பொருள். நூற்பு ஆலைகளிலும், சோப்பு உற்பத்தியிலும், காகிதத் தயாரிப்பிலும் மற்றும் பல்வேறு துறைகளிலும் அதிகமாகத் தேவைப்படும் பொருள் இது. நாளொன்றுக்கு 5 டன்னிலிருந்து படிப்படியாக உயர்ந்து 40 டன் உற்பத்தி செய்யும் நிலைக்கு இந்தத்



திரு சித்ரா நாராயணசாமி



திரு பி. எஸ். லோகநாதன்



திரு கே. கே. ராமன்

தொழிற்சாலை இப்போது வந்துள்ளது. ஆனால் நாளுக்கு நாள் தேவை வளர்ந்து கொண்டே போவதால், நாளொன்றுக்கு 100 டன் வீதம் உற்பத்தியைப் பெருக்கத் திட்டம் தயாரிக்கப்பட்டு அதற்குச் சர்க்காரின் அனுமதியும் அளிக்கப்பட்டுவிட்டது.

பிளீச்சிங் பவுடர் என்ற மற்றொரு முக்கியமான பொருளையும் இக்கம்பெனி தயாரிப்பதுடன் காமதேனு வனஸ்பதியும், சோப்புகளும் தயாரித்து மக்களுக்கு வழங்கி வருகிறது. தர நிர்ணயம் ஏற்படுத்திக் கொண்டு முதன் முதலாக நம் நாட்டில் பிளீச்சிங் பவுடர் உற்பத்தியில் பிரபலமாக விளங்குவது இக்கம்பெனிதான்.

இவ்வாறு இக்கம்பெனியைக் கண்காணித்து ஊக்கமுடன் வளர்த்து இன்று வெள்ளி விழா கொண்டாடும் நிலைமைக்குக் கொண்டு விட்ட பெருமை இக்கம்பெனியின் நிர்வாகிகளைச் சாரும். காலஞ்சென்ற வி. சேஷசாயி அவர்களுக்கு இதில் முதலிடம் உண்டு. அவருக்குப் பின் அவருடைய ஊக்கமும், மனோதிடமும் ஆர்வமும் குன்றாதபடி பார்த்துக் கொண்டு வருபவர் திரு கே. கே. ராமன். இக்கம்பெனியின் நிர்வாக ஏஜெண்டு அவரே. சமீபத்தில் இவரும் இவருக்கு உறுதுணை போல நிற்கும் தொழிற்சாலை சூபரின்டெண்டெண்டு திரு எஸ். ராமஸ்வாமியும், ஐரோப்பா, அமெரிக்கா, கிழக்கு நாடுகள் முதலிய பல நாடுகளில் சுற்றுப் பிரயாணம் செய்து திரும்பி யுள்ளனர். இக்கம்பெனியின் வருங்கால முன்னேற்றத்திற்கு இவர்களுடைய அயல் நாட்டு அனுபவம் மிகவும் உதவுமென்று எதிர்பார்க்கலாம்.

இக்கம்பெனியின் வெள்ளி விழா டிசம்பர் 29, 30, 31 ஆகிய மூன்று நாட்கள் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

முதல் நாள் விழா கம்பெனியின் பங்குதாரர்கள் தினமாகச் சென்னை கவர்னர் திரு விஷ்ணு ராம் மேதி தலைமையில் கொண்டாடப்பட்டது. அதுசமயம் மத்திய சர்க்கார் தொழில் அமைச்சர் திரு கே. வி. ரெட்டி, நாற்பது டன் காஸ்டிக் ஸோடா விஸ்தரிப்புத் தொழிற்சாலையைத் தொடங்கி வைத்து இத்தொழிற்சாலையின் எதிர்காலத்தைப் பற்றி நம்பிக்கையுடனும் உற்சாகத்துடனும் பேசினார். கவர்னர் தம்பதியினரையும், திரு கே. வி. ரெட்டி அவர்களையும் வரவேற்றுப் பேசிய கம்பெனியின் தலைவர் டாக்டர் பி. எஸ். லோகநாதன், இக்கம்பெனியின் வளர்ச்சியைப்பற்றி விரிவாகப் பேசினார். டைரக்டர்களுக்கெல்லாம் வெள்ளி விழா ஞாபகார்த்தப் பரிசுகள் வழங்கப் பட்டன. திரு சித்ரா நாராயணஸ்வாமி வந்தனோபசாரம் கூறுகையில் அரசாங்கம் தொழில்களை வளர்ப்பதில் அனுதாபத்துடன் நடந்து கொள்ள வேண்டும் என்பதைச் சற்று அழுத்தமாகவே வலியுறுத்திக் கூடியிருந்தவர்களின் கரகோஷத்தைப் பெற்றுக் கொண்டார். ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மியின் இன்னிசையுடன் முதல் நாள் விழா இனிது முடிந்தது.

இரண்டாவது தினக் கொண்டாட்டம் ஊழியர் தினமாகக் கருதி, சென்னை தொழில் அமைச்சர் திரு ஆர். வெங்கடராமன் தலைமையில் நடத்தப்பட்டது. மேட்டூர் அணைத் திட்டத்தை நிறைவேற்றி மின்சார வசதி ஏற்படுத்திக் கொடுத்து இத்தொழிற்சாலை ஏற்பட வாய்ப்புச் செய்து கொடுத்த டாக்டர் வி. பி. ராமஸ்வாமி அய்யர் இவ்விழாவில் பங்கு கொண்டது மிகவும் பொருத்தமாக இருந்தது.

மூன்றாவது தினக் கொண்டாட்டம் அமைச்சர் திரு பக்தவத்சலம் அவர்கள் தலைமையில் இக்கம்பெனியின் பொருள்களை விநியோகிப்பவர்களுக்கும், உபயோகிப்பவர்களுக்கும் ஒதுக்கப்பட்டுச் சிறிய முறையில் நடைபெற்றது.

இரண்டாவது மூன்றாவது நாட்களில் குமாரி உஷா, சித்ரா, கீதா, மாலா ஆகியோரது ஓரியண்டல் நடன விருந்தும், நாமகிரிப்பேட்டை கிருஷ்ணனின் நாகஸ்வரமும், மேட்டூர் கெமிக்கல் ஊழியர்கள், மாதர் சங்கத்தின் கதம்ப நிகழ்ச்சிகளும் நடைபெற்றன. வெள்ளி விழாக் கொண்டாட்டத்தின் ஞாபகார்த்தமாக 'ஸில்வர் சிப்ஸ்' என்று சோப்புத் தூள்களையும் உற்பத்தி செய்து அளிக்க ஆரம்பித்துள்ளனர் இக்கம்பெனியார்.

வெள்ளி விழாக் கொண்டாடிய இக்கம்பெனி படிப்படியாக மேலும் முன்னேறிப் பொன் விழா, வைர விழா, பிளாட்டினம் விழா போன்ற பெரு விழாக்களையும் கொண்டாடவேண்டுமென்று வாழ்த்துகிறோம்.



# எண்ணெய் எடுப்போம் ஏற்றமடைவோம்

கி. ராஜேந்திரன்

[சென்ற வாரத் தொடர்ச்சி]

டிராம்பேயிலுள்ள 'பர்மா-ஷெல்' ரிபைன ரியைச் சென்றடைந்த பிறகுதான் எனக்கு ஒரு பேருண்மை புலனாயிற்று. அதாவது என் ணெய் சுத்திகரிப்பு நிலையத்தில் பார்ப்ப தற்கு ஒன்றுமில்லை என்பதுதான்!

எந்தப் பக்கம் திரும்பினாலும் ஒரே குழாய் கள் மயமாக இருந்தன. எண்ணெய் பாய்ந்து ஓடும் பெரிய குழாய்கள், சிறிய குழாய்கள், நடுத்தரமான அளவுள்ள குழாய்கள். எண்ணெயைச் சேமித்து வைக்கும் சிறிய டாங்குகள், பெரிய டாங்குகள் இவற்றைத் தான் அங்கே காண முடியுமே தவிர எண்ணெ யையோ அல்லது அந்த எண்ணெய்க்கு என்ன நேருகிறது என்பதையோ பார்க்க இயலாது.

காரணம் பெட்ரோலியத்தில் அடங்கியுள்ள பல திரவங்கள் எளிதில் வாயுவாகிக் காற்று டன் கலந்துவிடக் கூடியன. அத்துடன் மிகச் சுலபமாய்த் தீப்பிடித்துக் கொள்ளும் குணம் படைத்தவை. ஆகவே ஒரு சொட்டு என் ணெய் கூட வெளியே கசியாதபடி குருடாயி லிலுள்ள எல்லா எண்ணெய்களும் இந்தப் பல்வேறு குழாய்களினூடே பாயும் போது பிரித்தெடுக்கப்பட்டுச் சுத்தமடைகின்றன.

எப்படி?

திரவமாயிருக்கும் பொருள் குறிப்பிட்ட உஷ்ணத்தில் வாயுவாக மாறுவது இயற்கை நியதி. அந்த வாயுவைக் குளிர்வித்தால் அது மீண்டும் திரவமாகிறது. பெட்ரோலியத்தில் அடங்கியுள்ள கெரோஸின், டீஸல் ஆயில், பெட்ரோல் முதலியவைகளுக்குத் தனித் தனி கொதிநிலை உண்டு. இந்தத் தத்துவமே குருடா யில் கலவையைப் பிரிக்கப் பயன்படுகிறது.

பைசா நகரத்துச் சாய்ந்த கோபுரத்தை நேராக நிறுத்தி வைத்தது போன்ற ஓர் அமைப்பு. குருடாயிலை 300 டிகிரி சென்டி கிரேட் வரை உஷ்ணப்படுத்தி நூற்று முப்பது அடி உயரமுள்ள இந்த உருளையான கோபுரத் தின் அடிவாரத்துக்கு அனுப்பி வைக்கி றார்கள். மிக அதிகமான கொதி நிலை கொண்ட பொருள்களைத் தவிர மற்றவை யெல்லாம் ஆவியாகிக் கோபுரத்தினுள்ளே மேலே எழும்புகின்றன. கோபுரத்தின் அடி வாரம் உஷ்ணமாயிருந்த போதிலும் உயரச் செல்லச் செல்லப் படிப்படியாக வெப்பம் குறைந்து கொண்டே வந்து உச்சி குளிர்ந்திருக் கிறது! ஆங்காங்கே வெவ்வேறு வெப்ப நிலை களுக்குத் தக்கவாறு மேலே எழும்பும் வெவ் வேறு ஆவிகளும் குளிர்ந்து திரவமாகின்றன. மிக மிகக் குறைந்த வெப்பத்திலும் ஆவி யாகவே இருக்கும் பெட்ரோல் கோபுரத்தின் உச்சி வரையில் சென்ற பிறகுதான் குளிர்ச்சி யடைந்து திரவமாகிறது. அதற்குக் கீழே சற்று அதிகமான உஷ்ணத்திலேயே கெரோ ஸின் ஆவி திரவமாகி வெளிப்படுகிறது. இன் னும் கீழே டீஸல் ஆயில், பிறகு லூப்ரிகேட்டிங் ஆயில், அடிவாரத்தில் கறுப்புத் தார்.

ரொம்பவும் சுலபமான காரியமாகத் தோன்றுகிறதல்லவா? இந்த ரிபைனரியை அமைக்கப் பதினாயிரம் மக்கள் உழைத் தார்கள். லட்சக்கணக்கான ரூபாய் செலவில் இதனை எழுப்பினார்கள். அறுபதினாயிரம் டன் எடையுள்ள இரும்பை இங்கே உபயோகப் படுத்தியிருக்கிறார்கள். நூற்றி அறுபது மைல் நீளத்துக்குக் குழாய்களையும், பன்னி ரண்டு மைல் நீளத்துக்குச் சாலைகளையும் சமைத்திருக்கிறார்கள் என்பதை யெல்லாம் உணரும் போது அப்படி யொன்றும் சுலப மான விஷயமல்ல என்பதும் பிரும்மாண்ட மான காரியம்தான் என்பதும் புரியும்.

1955-ம் வருஷம் மார்ச் மாதம் கட்டி முடிக்கப்பட்ட இந்த ரிபைனரிக்கான குருடா யிலைக் கப்பல்கள் ஈரானிலிருந்தும் குவெய்ட்டி லிருந்தும் கொண்டு வருகின்றன. எண்ணெய் ஏற்றிச் செல்வதற்கென்றே நிர்மாணிக்கப் பட்ட இந்த 'டாங்கர்' கப்பல்கள் பம்பா ய் நகரத் துறைமுகத்துக்கே வராமல் அருகே உள்ள ஒரு சிறிய தீவைச் சென்றடைகின்றன. அந்தத் தீவினையும் இந்த ரிபைனரியையும் இணைக்கும் பெரிய பெரிய குழாய்கள் சமுத் திரத்தின் அடிவாரத்தில் போடப்பட்டுள் ளன. கப்பல்களிலிருந்து எண்ணெய் இக் குழாய்கள் வழியே ரிபைனரியை அடைகிறது.

''இரவு நேரத்தில் எல்லா விளக்குகளும் எரியும் போது இந்த ரிபைனரி ஜகஜ்ஜோதி யாக, சொப்பன புரியாகக் காட்சியளிக்கும்!'' என்றார்கள்.

''இருட்டுகிற வரையில் காத்திருக்க முடி யாது. இரவில் எடுத்த ஒரு போட்டோ இருந் தால் காட்டுங்கள், பார்த்துக் கொள்கிறேன். இப்போதைக்கு இருளடைந்து பயங்கரமாகக் காட்சி தரும் சில பிரச்னைகளுக்கு வெளிச்சம் போட்டு அவற்றின் உண்மைச் சொரூபத்தைக் காட்டுங்கள்!'' என்றேன்.

''என்ன வேண்டுமோ கேளுங்கள்.''

''உலகம் முழுதும் (ருஷ்யா அமெரிக்கா நீங்கலாக) எண்ணெயின் விலை மொத்தமாக வாங்கினாலும் சில்லறையாக வாங்கினாலும் ஒரே மாதிரியாக இருப்பதன் காரணமென்ன? பெரிய எண்ணெய்க் கம்பெனிக்காரர்கள் சிலர் தங்களுக்குள் ரகசிய உடன்படிக்கை செய்து கொண்டு அந்த விலைக்குக் குறையாமல் விற் கிறார்கள் என்ற பேச்சில் பொருளுண்டா?''

''கிடையவே கிடையாது. கோடிக்கணக் கான ரூபாய்கள் முதலீடுசெய்து நடத்தப்படும்



தொழிலானாலும் மக்கள் முதல் போட்ட பெருந்தனக்காரர்களை ஒரு மாதிரியாகப் பார்ப்பது இயல்பாக இருக்கலாம். ஆனால் உலகம் முழுதும் வியாபாரமாகும் ஒரு பொருளானாலும் பருத்தி, செம்பு, ரப்பர் ஆகியவற்றைப் போல இதற்கும் உலக மார்க்கெட் விலை ஏற்பட்டிருக்கிறது. உலக மார்க்கெட் விலையில் அவ்வப்போது உண்டாகக் கூடிய ஏற்றத் தாழ்வுகள் பல்வேறு நாடுகளின் தேவையையும் எண்ணெய் உற்பத்தியின் அளவையும் பொருத்தவை. உள்நாட்டுச் சில்லறை விற்பனையின் போதும் போட்டி மனப்பான்மை இல்லாததினால் தான் பல கம்பெனிகளின் விற்பனை விலையும் ஒரே மாதிரியாக இருக்கிறதெனத் தவறாக எண்ணுகிறார்கள். போட்டி மனப்பான்மை நிறைய இருப்பதினாலேயே விலையும் ஒரே மாதிரியாக இருக்கிறதென்பதைக் கொஞ்சம் யோசித்தால் புரிந்து கொள்வீர்கள். ஒரு காலன் பெட்ரோல் அல்லது ஒரு புட்டி கெரோசின் விற்பனையாகும் போது கம்பெனிக்குக் கிடைக்கும் லாபம் மிக மிகக் குறைவுதான். தேசம் முழுதும் லட்சக் கணக்கான காலன்கள் விற்பனையாவதிலே தான் கணிசமான லாபம் கிட்டுகிறது. அதே போல் ஒரு காலன் பெட்ரோலின் விலையைச் சிறிதளவு குறைத்தாலும் மொத்தத்தில் கம்பெனி இழக்க வேண்டிய தொகை ஏராளமாகி விடும். அதே சமயத்தில் ஒரு கம்பெனி பெட்ரோலின் விலையை ஒரு பைசாவோ இரண்டு பைசாவோ குறைத்து விட்டது என்பதனால் மோட்டார் சொந்தக்காரர் மனம் மாறி இத்தனை நாட்களாகத் தாம் காருக்குப் போட்டுக் கொண்டிருந்த பெட்ரோலை விட்டு விட்டுக் குறைந்த விலைக்குக் கொடுப்பவரிடம் போய்விடப் போவதில்லை. ஒரு பைசாவோ இரண்டு பைசாவோ பெரிய விஷயமல்ல அவருக்கு.

''கடந்த பல வருஷங்களில் பொதுவாக மற்றப் பண்டங்களில் ஏற்பட்டிருக்கும் விலை ஏற்றத்துடன் ஒப்பிடும்போது போட்டா போட்டியின் காரணமாகவே எண்ணெய்ப் பொருள்களின் விலைகள் மட்டும் மிகக்குறைந்த அளவுக்கே உயர்ந்திருப்பது தெரிய வரும். அதோடு பெட்ரோலியத்திலிருந்து கிடைக்கும் பல எண்ணெய்களுக்கும் சர்க்கார் போட்டிருக்கும் வரிகளைப் போல் — அந்த அளவுக்கு — அத்தியாவசியத் தேவைப் பொருள்களில் வேறு எதற்குமே வரி விதிக்கப்படவில்லை என்பதையும் மறக்கக் கூடாது.''

''மத்திய கிழக்கு நாடுகளிலிருந்து நீங்கள் பெட்ரோலியம் எண்ணெயை வாங்குவதுடன் சுத்திகரிப்பு செய்யப்பட்ட எண்ணெய்களையும் தருவிக்கிறீர்களல்லவா?''

''ஆமாம்.''

''குரூடாயிலை நீங்கள் அங்கே அறிவிக்கப்படும் விலைக்கு வாங்குவதில்லையே. விலையில் கொஞ்சம் தள்ளுபடி செய்துதானே தருகிறார்கள்?''

''அதுவும் உண்மைதான்.''

''அதே போல் சுத்திகரிப்பு செய்யப்பட்ட பொருள்களுக்கும் தள்ளுபடி கொடுக்க வேண்டுமென்று நீங்கள் ஏன் அவர்களைக் கேட்கக் கூடாது?''

''அதைத்தான் பாரத சர்க்கார் ஏற்படுத்திய டாம்லே கமிட்டியும் கேட்டது. மத்திய கிழக்கு நாடுகளில் குரூடாயில் நிறையக் கிடைக்கிறது. வாங்குபவர்களின் தேவைக்கு அதிகமாகவே இருப்பதால் தள்ளுபடி செய்து தரத் தயாராயிருக்கிறார்கள். ஆனால் சுத்திகரிப்பு செய்யப்பட்ட எண்ணெய்கள் தேவைக்குக் கம்மியாகவே உள்ளன. அதனால் அதற்கு 'மவுசு' அதிகமாகிறது. தள்ளுபடி செய்து தருவாரில்லை. அதை நாங்கள் டாம்லே கமிட்டியினரிடம் தெரிவித்திருக்கிறோம்.''

''அப்படி நீங்கள் சொல்கிறீர்கள். மந்திரி ஸ்ரீ மாளவியாவோ நீங்கள் முழு உண்மைகளையும் வெளியிட மறுக்கிறீர்கள் என்று குற்றம் சாட்டியிருக்கிறாரே?''

''அது நேருஜி அமெரிக்கா சென்றிருந்த போது. அவர் திரும்பிய சில நாட்களுக்குப் பிறகு அதே மந்திரி ஸ்ரீமாளவியா எண்ணெய்க் கம்பெனிக்காரர்கள் எங்களுடன் ஒத்துழைக்கிறார்கள் என்று கூறியிருக்கிறாரல்லவா?''

''ருஷ்யர்கள், குரூடாயிலாகட்டும் மற்ற எண்ணெய்களாகட்டும் இந்நாட்டுக்குக் குறைந்த விலைக்கு விற்கத் தயாராயிருக்கிறார்களே?''

''அது அரசியல் விஷயம். அங்கே சர்க்காரே எண்ணெய் எடுக்கிறார்கள், சர்க்காரே சுத்திகரிப்புச் செய்கிறார்கள், சர்க்காரே விற்கிறார்கள். 'அரசியல் வெற்றி' பெற்றால் போதும் அவர்களுக்கு. லாப நஷ்டக் கணக்கு பற்றி அதிகமாகக் கவலைப்பட மாட்டார்கள். அதோடு இன்னொரு விஷயமும் கவனிக்க வேண்டும். கம்யூனிஸ்ட்டு சார்புள்ள நாடுகளுக்கு ருஷ்ய எண்ணெய் அதிக விலைக்குத் தான் கிடைக்கிறது. கம்யூனிஸ்ட்டு ஆட்சி இல்லாத நாடுகளுக்கு மட்டும்தான் குறைந்த விலைக்குத் தருகிறார்கள்.

ஓர் அமெரிக்கக் காலன் ருஷ்ய எண்ணெயின் சராசரி விலை (சென்டுகளில்)

| | கம்யூனிஸ்ட் நாடுகள் | மற்ற நாடுகள் |
|---|---|---|
| குரூடாயில் | 7.21 | 4.50 |
| கெரோஸின் | 10.26 | 8.20 |
| பெட்ரோல் | 11.00 | 10.50 |
| டீஸலாயில் | 10.45 | 8.05 |
| ஒரு பீப்பாய் பியூயல் ஆயில் (Fuel oil) விலை (டாலர்களில்) | 2.46 | 1.68 |

"இதைவிட அவர்களுடைய உள் நோக்கத்துக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?"

"அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்த நீங்கள் என்ன மாற்று யோசனை கூறுகிறீர்கள்?"

"குருடாயில் எங்களுக்குத் தள்ளுபடி விலையில் கிடைக்கிறது. ஆகவே அதனை அதிகமாகத் தருவித்து இந்த ரிபைனரியில் சுத்திகரிப்புச் செய்யலாம். அதன் மூலம் தள்ளுபடி கிடைக்காத சுத்திகரிப்பு செய்த எண்ணெய்களின் இறக்குமதியைக் கணிசமாகக் குறைக்கலாம். ஆனால் இதற்குச் சர்க்காரின் அனுமதி கிடைக்கவில்லை. இந்த ரிபைனரியில் குறிப்பிட்ட அளவுக்குத்தான் எண்ணெய் சுத்திகரிப்புச் செய்யலாம் என்ற கட்டுப்பாடு இருக்கிறது. இப்போது லூப்ரிகேட்டிங் எண்ணெய்கள் அனைத்தையும் அயல் நாடுகளிலிருந்து தருவிக்கிறோம். இந்த ரிபைனரியில் சிற்சில மாறுதல்களைச் செய்து அவற்றையும் இங்கேயே தயாரிக்கலாம். இதற்கும் அரசாங்கம் அனுமதியளிக்க மறுக்கிறது."

"காம்பே, அன்கலேஷ்வர் ஆகிய இடங்களில் எண்ணெய் கிடைக்குமா என்று ஆராய்ச்சிகள் நடந்தனவே சர்க்கார் துறையில் — அவற்றின் முடிவு?"

"காம்பே எண்ணெயைப் பற்றித் திருப்தியடைவதற்கில்லை. அன்கலேஷ்வரிலிருந்தும் எங்களுக்கு எண்ணெய் வருகிறது. சுத்திகரிப்பு தொடங்கித் தொடர்ந்து நடத்தக்கூடிய அளவுக்கு இன்னும் வர ஆரம்பிக்கவில்லை."

"அன்கலேஷ்வர் எண்ணெயை நீங்கள் ஆராய்ந்தீர்களா?"

"ஆராய்ந்து கண்டறிந்த விஷயங்கள் மகிழ்ச்சியளிப்பனவாக இல்லை. மெழுகும் பெட்ரோலும் அதில் அதிகமாக அடங்கியிருப்பதே காரணம். பெட்ரோலுக்கு உள் நாட்டில் நாங்கள் எதிர்பார்த்த அளவுக்குத் தேவை அதிகரிக்கவில்லை. ஓரளவுக்கு இங்கிருந்து ஏற்றுமதி செய்கிறோம்.. இருந்தபோதிலும் என்ன? உலக மார்க்கெட்டே இப்போது மோட்டார் பெட்ரோலுக்கு ஏற்றதாயில்லையே...?"

"காரணம்?"

"டீஸல் எண்ணெய்தான்.. பஸ்கள், லாரிகள், டிராக்டர்கள் எல்லாவற்றிலும் இப்போதெல்லாம் டீஸல் என்ஜின்தான் பொருத்துகிறார்கள். பெட்ரோலின் தேவை அதிகரிக்கவில்லை என்பதோடு குறைந்தே யிருக்கிறது. இந்நிலையில் அன்கலேஷ்வர் குருடாயில் வேறு எந்த நாட்டுப் பெட்ரோலியத்திலும் இல்லாத அளவுக்கு முப்பது சத விகிதத்துக்கும் அதிகமாகப் பெட்ரோல் இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு என்ன செய்ய? யார் தலையில் கட்டுவது?"

"இப்படித் தவிப்பானேன்? என்னிடம் கொடுங்களேன்; எடுத்துப் போகிறேன்" என்று கூறியபடியே நாற்காலியிலிருந்து எழுந்தேன். விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டேன்.

நாளுக்கு நாள் மண்ணெண்ணெய்ப் பொருள்களின் தேவை அதிகமாகிக் கொண்டே இருக்கும் இந்தச் சமயத்தில், அந்நியச் செலாவணி நெருக்கடி பெருகிக் கொண்டே போகும் தருணத்தில் குறுகிய நோக்கங்களும் அற்ப புத்திகளும் மறைய வேண்டும். அப்போதுதான் நாடு சுபிட்சமடையும்; உன்னத நிலைக்கு உயரும்.

எண்ணெய்க் கம்பெனிகளின் நடவடிக்கைகளை அரசாங்கம் சந்தேகிப்பதுபோலக் காண்பித்துக் கொண்டால் மக்களுக்கு எப்படி அவர்களிடம் நம்பிக்கை பிறக்கும்? அயல் நாடுகளிலிருந்து தாங்கள் சுத்திகரிப்பு செய்யப்பட்ட எண்ணெய் தருவிக்கும் முறையில் ஒளிவுமறைவுக்கே இடமில்லை என்பதை மேலும் தெளிவாக்க வேண்டும் அவர்கள். அதோடு அவர்களுடைய மூலதன அமைப்பை மாற்றி இந்தியர்களுக்கும் அதில் இடமளித்தால் மக்களின் நன்மதிப்பைப் பெறுவது எளிதாகும்.

பர்மா ஷெல், ஸ்டான்வாக் போன்ற கம்பெனிகள் நம் நாட்டில் உருவாகியிருக்கும் விநியோக முறை வியக்கத் தக்க அளவில் வளர்ச்சியுற்றிருக்கிறது. குக்கிராமத்துக்குத் தேவையான மண்ணெண்ணெய் முதல் குபேர பட்டணத்துக்குத் தேவைப்படும் விமானப் பெட்ரோல் வரையில் எந்த நாளும் எந்த நேரத்திலும் தங்கு தடையின்றி, தாராளமாய்க் கிடைக்கச் செய்திருப்பது ஓர் அற்புத சாதனையாகும். நன்றியோடு அதனை நினைவிருத்திக்கொள்ள வேண்டும் நாம்.

பெட்ரோலியம் தொழில் சண்டிப்பாய்ச் சர்க்கார்த் துறையில் முன்னேற்றம் காண வேண்டியதுதான். எண்ணெய் எடுப்போம்; ஏற்றமடைவோம். யாரும் மறுக்கவில்லை. ஆனால் அதே நேரத்தில் அந்நியர் நடத்தும் கம்பெனிகள் என்பதால் அரசாங்கத்தின் கெடுபிடிகளையும் ஜபர்தஸ்துகளையும் அதிகமாக்கி ஆட்டிப் படைக்கலாம் என்ற கருத்து ஆபத்தாக முடியும். தொழில் வளம் பெருகி வரும் இந்தியாவில் இரு துறையினருமே சிறப்பாக இயங்கிவர இடமிருக்கிறது. அவசியமுமிருக்கிறதல்லவா ?

டாம்லே கமிட்டியின் ஆலோசனைப்படி சீர்திருத்தங்கள் கொணர்ந்தால் வருஷத்துக்குப் பதினைந்து கோடி ரூபாய் மிச்சமாகும் என்பது உண்மையானாலும் இதனால் பெட்ரோலியப் பொருள்களை டின்களிலும் புட்டிகளிலும் வாங்கப் போகிறார்களே, அந்தப் பொது மக்களுக்கு ஒரு நயா பைசா கூட லாபமில்லை. அத்தனையையும் அரசாங்கமேதான் விழுங்கி விடப் போகிறது.

"அதனாலென்ன? நம் அரசாங்கம்தானே?" என்று முன்பு அலட்சியமாகக் கேட்டவர்கள், 'நம் நலனில் அக்கறை கொண்ட நேர்மையான அரசாட்சிதானா' என்றும் இன்று ஆராயத் தொடங்கியிருக்கிறார்கள். (முற்றும்)



**கா**லனின் தூதுவன் போல் ஒரு போலீஸ்காரன் அந்தக் காலனிக்குள் வந்து ஒவ்வொரு வீடாகக் கேட்டான்: கேட்டானா?....அவன் தன் நெஞ்சம் உடலும் பதை பதைக்க ஒவ்வொரு வீட்டின் முன்பும் நின்று, '' அம்மா....உங்க வீட்டிலே ஏதாவது கொளந்தை, ஆம்பளேக் கொளந்தை, பத்து வயசு இருக்கும், காக்கி நிசாரும் வெள்ளைச் சட்டையும் போட்டுக்கிட்டு உண்டுங்களா ?'' என்று இணறினன் போலீஸ்காரன்.

வீட்டுக் கொடியில் துணி உலர்த்திக் கொண்டிருந்த அந்த அம்மாளைப் பார்க்கும்போது அவன் கண்கள் கலங்கின.

# சுமைதாங்கி



அவள் போலீஸ்காரனைப் பார்த்து, ''ஏன்?.....இருக்கான். என்ன விஷயம்? எலே ஐயா இங்கே வா'' என்றதும் உள்ளிருந்து ஒரு பையன் ஓடி வந்து, போலீஸ்காரனின் தலையைக் கண்டதும் ''நான் வரமாட்டேன்'' என்று பயந்து உள்ளே ஓடி ஒளிந்து கொண்டான்.

''எதுக்குடாய்யா பயப்படறே? ஒண்ணும் பண்ண மாட்டாரு வா'' என்று பையனை அழைத்தாள் தாயார்.

போலீஸ்காரன் பெருமூச்சு விட்டான். ''கூப்பிடாதிங்கம்மா...இருக்கட்டும்! தோ, அங்கே-ஓவர்பிரிட்ஜுகிட்டே லாரியிலே சிக்கி ஒரு பையன் போயிட்டாம்மா. மண்டெ செதறிப் போச்சு'' என்று சொல்ல முடியாமல் சற்று நேரத்துக்கு முன் தன் பாபம் செய்த விழிகளால் கண்டதை எண்ணும்போதே போலீஸ்காரனின் உடம்பு சிலிர்த்தது.

''ஐயோ, தெய்வமே: அப்பறம் என்ன ஆச்சு? புள்ளே உசிருக்கு...'' என்று அவள் கேட்டு முடிக்குமுன் மற்றொரு பெருமூச்சையே பதிலாகச் சொல்லி விட்டு நகர்ந்தான் போலீஸ்காரன்;

அங்கிருந்து போகும்போது, ''இந்தக் காலனியிலே இருக்கிற புள்ளைதான்னு சொன்னுங்க......... புள்ளைங்களை ஜாக்கிரதையாப் பாத்துக்குங்கம்மா'' என்று சொல்லிவிட்டு அடுத்த வீட்டின் முன் நின்று, ஒரு பெரிய சோகத்தை எதிர் பார்த்த நெஞ்சை இறுக்கிப் பிடித்துக் கொண்டே, ''அம்மா உங்க வீட்டிலே ஏதாவது கொளந்தை.......'' என்று ஆரம்பித்தான் போலீஸ்காரன்.

''எங்க வீட்டிலே கொழந்தையே கெடையாதே'' என்ருள் வீட்டுக்குள்ளிருந்து வந்தவள்.

''அம்மா! நீ புண்ணியவதி'' என்று மனசால் அந்தப் பெருதவளை எண்ணிப் பெருமைப் பட்டவாறே, 'பெற்று வளர்த்து இன்று தெருவிலே ரத்தமும் சதையுமாய்த் தன் செல்வத்தைச் சூறையிட்டு விட்ட குழந்தைக் குரிய 'பாவி'யைத் தேடிச் சென்ருன் போலீஸ்காரன்.

## 2

ஒவ்வொரு வீட்டின் முன் நிற்கும் போதும், 'அது இந்த வீடாய் இருக்கக் கூடாது' என்று அவன் மனம் பிரார்த்தித்தது. ஒவ்வொரு பெண்ணைப் பார்க்கும்போதும் 'ஐயோ! இவள் அந்தத் தாயாய் இருக்க வேண்டாம்' என்று அவன் இதயம் கெஞ்சியது. எப்படி இருந்த போதிலும் இந்தக் காலனிக்குள் ஏதோ ஒரு வீட்டில் யாரோ ஒரு தாயின் இதயத்தில் அந்த 'டைம் பாம்' நேரம் வந்ததும் வெடித்துச் சிதறத்தான் போகிறது என்ற நினைப்பு வந்ததும் போலீஸ்காரன் தயங்கி நின்று திரும்பிப் போய் விடலாமா என்று யோசித்தான். அந்தச் சோகத்தைத் தன்னுல் தாங்க இயலாது, அந்தப் பாபத்தைத் தன் கண்களால் பார்க்க முடியாது என்ற நினைப்பிலேயே அந்தக் காட்சி அவன் மனசில் உருவாகி உடம்பும் முகமும் வேர்த்து, நாக்கு வறண்டது.

ஒரு வீட்டின் திண்ணைமேல் 'உஸ்' என்ற ஆஸ்வாசப் பெருமூச்சுடன் உட்கார்ந்து தொப்பியைக் கழற்றி, கர்ச்சிப்பால் முகத்தையும் கழுத்தையும் துடைத்துக் கொண்டான்.

'திரும்பிப் போய்விட்டால் என்ன?' என்று மனசு மீண்டும் உறுதியற்றுக் குழம்பியது.

'நான் போய் விட்டால், அதனுல் அந்தக் குழந்தைக்கு ஒரு தாய் இல்லாமல் போய் விடுவாளா? ஐயோ, அது தாயில்லாக் குழந்தையாய் இருக்கக் கூடாதா? ஒருத்தி பத்து மாசம் சுமந்து பெத்த குழந்தையை இப்படிக் கேள்வி முறையில்லாம எடுத்துக்கக் கடவுளுக்குத் தான் என்ன நியாயம்?....சீசீ, கடவுள் தான் உயிருங்களை உண்டாக்குறர்...: இந்த யமன் தான்....யமனை உண்டாக்கினது யாரு?...அவன் இப்படி அக்குரும்பு பண்ண இந்தக் கடவுள் எப்படிச் சம்மதிக்கிருரு?...அந்தக் கடவுளே பத்து மாசம் சொமந்து பெத்திருந்தா தெரியும்....: எப்படித்தான் தாங்கப் போவுதோ அந்தப் பெத்த வயிறு?.......மனுசன் சாகறது பெரிய சோகமில்லே. அதைப் பாத்து மத்தவங்க, துடிக்கிற கோல மிருக்கே, அட கடவுளே........

'ஊரிலேதான் ஒவ்வொருத்தியும் ஒண்ணுக்குப் பத்து பெத்து வெச்சி இருக்காளே.....ஒண்ணுபோனு என்னு? ஐயோ!....அப்படியும் நினைக்க முடியுமா?....முடியாது. முடியாது. பெருத என்னுலேயே, பிள்ளைப்பாசம்னு என்னுன்னு தெரியாத என்னுலேயே, யாருதோ போச்சி நமக்கென்னுன்னு இருக்க முடியாத மனுஷ மனசு, தன்னுடைதே போச்சின்னு?—நேரமும் காலமும் வந்து கெட்டபாக் கெடந்து போனுலும் பரவாயில்லே.....இப்படித் திடீர்க் கொள்ளையிலே அள்ளிக் குடுக்கப் பெத்த மனசு தாங்குமா? 'ஐயோ'ன்னு ஒரே அலறல்லே அவ உசிரும் போயிடுமே! அட தெய்வமே, சாவுன்னு ஒண்ணு இருக்கும்போது பாசம்னு ஒண்ணையும் ஏண்டாப்பா உண்டாக்கினே?....கொஞ்ச நாழிக்கு முன்னே, சிட்டுக் குருவிமாதிரி ஒரே சந்தோஷமாப் பறந்துக் கிட்டிருந்திருப்பான்.....

கையிலே ஐஸ்கிரீம் குச்சியைப் புடிச்சுக்கிட்டு ஓடியாந்தான். நான் தான் பாவி பாத்துக்கிட்டு நிக்கிறேனே.....அது நடக்கப் போவுதுன்னு தெரியுது....விதிதான் என் கையைக் காலை வாயையெல்லாம் கட்டிக் கண்ணை மட்டும் தெறக்கவச்சி எவ்வளவு கோர மான விளையாட்டை நடத்திக் காட்டிடுச்சி?...பையன் கத்தினுனு?..ஊஹூம்! அதுக்கு நேரம் இல்லே...வாங்கின ஐஸ் கிரீமைத் திங்கலே...அதுக்குள்ளே வந்திடுச்சே சாவு? போற உசிரு ஐஸ்கிரீமுக்காக, இல்லே தவியாத் தவிச்சிருக்கும்!..: சாவுலே இருக்கற கோரமே அதான். திடீர்னு வந்து சாதாரண அல்ப ஆசையைப் பெரிசாக்கி ஏமாத்திடும்.

இன்னம் ஒரு நிமிஷந்தான்னு முன் னெச்சரிக்கை கொடுத்து வந்திச்சின்னு மனுசன் சந்தோஷமா

ஜெயகாந்தன்



செத்திடுவானே, அது பொறுக்குமா அந்தக் கொலைகாரத் தெய்வத்துக்கு?

'சாவும்போது எல்லா உசிருங்களுக்கும் ஒரு ஏமாத்தம்தான் மிஞ்சி இருக்கும்... ஆமா...இருக்கும்போது எவ்வளவு அநுபவிச்சாலும் சாகும்போது கெடைக்கப் போறது ஒரு ஏமாத்தம்தான்.. சீசீ, என்ன வாழ்க்கை?...

'அந்த மாதிரிதான் அன்னக்கி ஒரு நாளு—டேசன்லே ஒரு சிட்டுக் குருவி 'கீச் கீச்'னு கத்திக்கிட்டு, பொட்டையோட ஒரே சேட்டை பண்ணிக்கிட்டுத் திரியறதப்பல்லாம் இனிஸ்பெக்டரு ஐயாகூட வேடிக்கை பாத்துக்கிட்டு இருப்பாரு....பொட்டை மேலே இது திமுர்னு எங்கிருந்தோ விசுக்குனு பறந்து வந்து தாவி ஏறினப்போ, அந்தக் கழுதை 'காச் மூச்'னு கத்திக்கிட்டு எதிர்ச் சுவத்திலே இருந்த பொந்திலே போயி உக்காந்துக்கிட்டுக் 'கிரீச்' 'கிரீச்'னு கத்தி ஏச்சம் காட்டிச்சி. அந்த ஆணுக்கு ஏமாந்த



வெறியிலே படபடன்னு நெஞ்சு அடிச்சிக்குது. உடம்பைச் சிலுப்பிக்கிட்டு ஒரு நிமிஷம் பொட்டையை மொறைச்சிப் பார்த்துது. அந்தப் பார்வையிலேயே பொட்டைக்கு மனசு மாறிப் போச்சி. மனசு மாறினப்பறம் இந்தக் கழுதையே ஆணுக்கிட்டப் போயிருக்கக் கூடாதா? பொல்லாக் கழுதை மவளுது.....இந்தப் பொந்திலேயே வெக்கப்பட்டுக்கிட்டுத் திரும்பி உக்காந்துக்கிடுச்சி. அது திரும்பினது தான் தாமஸம். விருட்டுனு ஒரு பாய்ச்சல் பாஞ்சது ஆணு...நானும் இனிஸ்பெக்டரும் நடக்கப் போற காரியத்தைப் பார்க்கறத்துக்குத் தயாராத் திரும்பினோம்; இனிஸ்பெக்டரு என்னைப் பாத்துக் கண்ணைச் சிமிட்டினாரு.

'அதுக்கென்னுங்க, எல்லா உசிர்ங்களுக்கும் உள்ளதுதானே'ன்னேன். நான் சொல்லி வாய் மூடல்லே. 'கிரீச்'சினு ஒரு சத்தம்! ஆண் குருவி 'பொட்'டுனு என் காலடியிலே வ..து விழுந்துது. தலை பூரா 'செவ செவ'ன்னு ஒரு ரத்தக் களறி...ஐயோ கடவுளேன்னு அண்ணாந்தேன். 'கட கட........கட கட'ன்னு சாவோட சிரிப்புமாதிரி அந்தப் பழைய காலத்து 'பேன்' சுத்திக்கிட்டு இருக்குது:

இனிஸ்பெக்டரு எந்திருச்சி ஓடியாந்து அதைக் கையிலே எடுத்தாரு.....

'ம்......போயிடுச்சு ஐயா!......நீ சொன்னியே இப்ப எல்லா உசிருங்களுக்கும் உள்ளதுதான்னு சாவைப் பத்தியும்தானே சொன்னே?'ன்னு கேட்டுக்கிட்டே சன்னல் வழியா வெளியே அதைத் தூக்கிப் போட்டார்.

'அந்த ஆண் குருவி 'பேன்'லே அடிபட்டுச் செத்தது ஒண்ணும் பெரிய விஷயமில்லே. ஆனா....அந்தப் பொட்டை - எதையோ எதிர்பார்த்துக் காத்திருந்த பொட்டை தவிச்ச தவிப்பு இருக்கே...: ஐயோ, ஐயோ....... அப்பத்தான் தோணிச்சு, கடவுள் ரொம்பக் கேவலமான கொலைகாரன் மாத்திரமில்லே, கடைகெட்ட அரக்கனுக்கு மில்லாத, சித்திரவதையை ரசிக்கிற குரூர மனசு படைச்சவன்னு. இல்லேன்னு, சாவுன்னு ஒண்ணு இருக்கும்போது பாசம்னும் ஒண்ணை உண்டாக்குவானா?...

'வாங்கின ஐஸ்கிரீமைத் தின்னு முடிக்கறத்துக்குள்ளே ஒரு கொழந்தைக்குச் சாவு வரலாமா? அட, இரக்கமில்லாத் தெய்வமே! உன்னைத்தான் கேக்கறேன்.....வரலாமா சாவு? அவ்வளவு அவசரமா?...குழந்தை கையிலேருந்து விழுந்த ஐஸ்கிரீம் கரையறத்துக்குள்ளே உசிர் போயிடுச்சே.....மனசு என்னென்னவோ எண்ணி யெண்ணித் தவிக்கத் திண்ணையிலேயே வெகு நேரம் உட்கார்ந்திருந்த போலீஸ்காரன் எழுந்தான் ஒரு பெருமூச்சுடன்.

கழற்றி வைத்திருந்த தொப்பியைத் தலையில் வைத்துக் கொண்டு நிமிரும்போது பார்வை அகஸ்மாத்தாக அந்த வீட்டுக்குள் திரும்பியபோது ஒரு பெண்-இளம் பெண் - குழந்தைக்குப் பால் கொடுத்தவாறு உட்கார்ந்திருந்தாள்.

அது ஓர் அற்புதமான காட்சிதான்.

"அம்மா....குடிக்கக் கொஞ்சம் தண்ணி தரியா?" என்று கேட்டவாறு மீண்டும் திண்ணைமேல் உட்கார்ந்தான் போலீஸ்காரன்.

குழந்தையை மார்போடு அணைத்தவாறே எழுந்து உள்ளே சென்று கையில் ஒரு செம்பில் தண்ணீரோடு வெளியே வந்தாள் அந்த இளம் பெண். குழந்தை மார்பில் முகம் புதைத்துப் பாலருந்தும் சத்தம் 'மொச்மொச்'சென்று ஒலித்தது.

போலீஸ்காரன் தண்ணீர்ச் செம்பை வாங்கிக் கொண்டதும் தாய்மைச்



# மனக்கொதிப்பும் கவலையும் ஜீரணத்தை பாதிக்கின்றன



நம் வயிறும், மூளையும் நரம்புகளின் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு முறையும் நாம் மனக் கொதிப்பினாலோ அல்லது கவலையினாலோ பாதிக்கப்படும்போழுது இந்த நரம்புகள் ஜீரணம் செய்வதை தற்காலிகமாக தடுப்பதுடன் அட்ரினலின் என்ற சக்திவாய்ந்த அமிலத்தை வெளிப்படுத்தி ரத்தத்துடன் கலக்கிறது. இந்த அமிலம் ஓடியாடி வேலை செய்வோருக்கு மனக்கொதிப்பை எதிர்த்துப் போராட உதவுகிறது. ஆனால் மற்றவர்கள் விஷயத்தில் இது நிலைமையைப் பலக்குறைவுடன் அவர்கள் ஜீரண சக்தியையும் குறைக்கிறது. அதனால்தான் வியாபாரத் துறையிலுள்ளவர்களில் 10 பேர்களில் 6 பேர் அஜீரணத்திற்குள்ளனர். அதன் விளைவாக சாப்பிட்டபின் வயிற்று வலியினால் கஷ்டப்படுகிறார்கள்.






ஹ்யூலட்ஸ் மிக்சர் வயிற்றுவலியை விரைவாகவும் அடியோடும் நிவர்த்திக்கிறது. எரிச்சலை உண்டாக்கும் அமிலத்திலிருந்து இரைப்பையின் சுவற்றைக்காப்பாற்றுவதோடு உணவை நன்றாக கரைத்து ஜீரண சக்தி ஏற்படுவதற்கும் உதவுகிறது. 60 வருஷங்களுக்கு மேலாக உலகத்திலுள்ள எல்லா டாக்டர்களும் சிபாரிசு செய்யும் மருந்து இதுவே. குழந்தைகளின் வயிற்று உபாதையையும் தீர்க்கவல்லது ஹ்யூலட்ஸ் மிக்சர்.

வயிற்றுக் கடுப்புக்கு அபினி கலந்த ஹ்யூலட்ஸ் மிக்சரை உபயோகியுங்கள்.

## “ஹ்யூலட்ஸ் மிக்சரை

உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து நான் நன்றாக சாப்பிட முடிகிறது.”



டி.ஜே. ஹ்யூலட் & ஸன் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்.
86/A, கனியப்ப நாயக்கன் தெரு, மதறாஸ்-3

கத்தோடு குழந்தையின் தலை முடியை மிருதுவாகத் தடவினான் அவன்.

திடீரெனப் போலீஸ்காரனின் கண்கள் மிரண்டன.

'ஒரு வேளை இவள் அந்தத் தாயாக இருக்க முடியுமோ? சீ, இருக்காது... சின்ன வயசா இருக்காளே....!'

''எம்மா இதுதான் தலைச்சன் குழந்தையா?'' என்று ஆரம்பித்தான்.

''இல்லே.. .பெரிய பையன் இருக்கான்...அவனுக்கு அப்புறம் ரெண்டு பொறந்து செத்துப் போச்சு...இது நாலாம் பேறு....''

''இப்ப, பெரிய பையன் எங்கே?...''

''பள்ளிக்கூடம் போயிருக்கான்.''

''பள்ளிக்கூடமா?....என்ன சட்டை போட்டிருந்தான்?''

''பள்ளிக்கூடத்திலே காக்கி நிசாரும் வெள்ளைச் சட்டையும் போடணும்னு சொல்லி இருக்காங்கன்னு உசிரை வாங்கி நேத்திக்குத் தச்சிக் குடுத்தப்பறம்தான் ரெண்டு நாளாப் பள்ளிக்கூடத்துக்குப் போறான்...எதுக்கு இதெல்லாம் கேக்கிறீங்க...?''

போலீஸ்காரன் ஒரு நிமிஷம் மௌனமாய் நின்றுவிட்டு,

''பையனுக்குப் பள்ளிக்கூடம் ஓவர் பிரிட்ஜ் பக்கமா இருக்குதா?'' என்று கேட்டான்.

''இல்லெ, இந்தப் பக்கம் இருக்கு.... ஆனா அது ஊரெல்லாம் சுத்தும். வாலுத்தனம் அதிகமா போச்சு...சொன்னபேச்சைக் கேக்கறதில்லே...காத்தாலே ஐஸ்கிரீம் வாங்க அரையணாவுக்கு உசிரை வாங்கினான். நான் தரமாட்டேன்னுட்டேன். அப்பறம் எனக்குத் தெரியாமப் பொட்டியெத் தொறந்து அரையணா எடுத்துக்கிட்டுப் போகும்போது நான் பாத்துட்டு ஓடியாந்தேன். அவன் ஓட்டத்தை நான் புடிக்க முடியுதா? விரட்டிக்கிட்டே வந்தேன்; ஓடிட்டான். என்ன கொட்டம்! எனக்கு வெச்சிச் சமாளிக்க முடியல்லே.....வந்த ஆத்திரத்திலே அப்படியே ஒழிஞ்சிபோ, திரும்பி வராதேன்னு திட்டினேன்....''

போலீஸ்காரன் இடைமறித்து, ''ஐயைய்யா! அப்படி நீ சொல்லி இருக்கக் கூடாதம்மா...கூடாது...'' என்று தலையைக் குனிந்து கண்ணீரை மறைத்துக் கொண்டான்: 'எனக்கென்ன என் கடமையைச் செய்கிறேன்' என்ற தீர்மானத்தோடு, தலையை நிமிர்த்தி, கலங்குகின்ற கண்களை இறுக மூடிக்கொண்டு இமை விளிம்பில் கண்ணீர் கசியச் சிலை போல் ஒரு விநாடி நின்றான். அவன் இதயமே இறுகி, துருவேறிய உணர்ச்சிக் கரகரப்புடன் உதட்டிலிருந்து வார்த்தைகள் வெளி வந்தன: ''ஓவர் பிரிட்ஜுகிட்டே லாரியிலே அடிபட்டு ஒரு பையன் செத்துக் கிடக்கான். போ! போயி உம் புள்ளைதானான்னு...''

''ஐயோ ராசா!'' என்ற அலறலில் அந்த வீடே, அந்தக் காலனியே அதிர்ந்தது. அந்த அதிர்ச்சியில் போலீஸ்காரன் செயலற்றுத் திண்ணையின்மீது சோர்ந்து விழுந்தான்.

பாலருந்தும் குழந்தையை மார்புற இறுக்கித் தழுவிக் கொண்டு வெறி கொண்டவள் போல் அந்தத் தாயார் வீதியில் ஓடிக் கொண்டிருக்கிறாள்....

## 3

'இன்னும் ஒரு தெருவு தாண்டிப் போகணுமே...' என்ற பதை பதைப்புடன் கைக் குழந்தையை இடுப்பில் இடுக்கிக் கொண்டு, உடையைச் சரி செய்து கொள்ளாமலே பாய்ந்து பாய்ந்து நடந்து வருகிறாள் அந்தத் தாய்;

விபத்து நடந்த இடத்தை வேடிக்கை பார்த்துவிட்டு எதிரில் வரும் கூட்டம் தாய்மையின் சொரூபமாக இவள் வருவதைக் கண்டு திரும்பி இவளைப் பின்தொடர்ந்து செல்கிறது...;

—கும்பலுக்கு எல்லாமே ஒரு வேடிக்கைதான்!

''என்ன ஆச்சு?'' செய்தித் தாள் விவகாரம்போல் ஒருவர் கேட்ட கேள்விக்கு மேம்போக்காய் ஒருவர் பதில் சொல்கிறார்:

''ஒரு பையன் லாரியிலே மாட்டிக் கிட்டான்...''

''அப்புறம்....?''

''அப்புறம் என்ன? ஹெஹெ...:::? குளோஸ்...'' என்று ஒரு ஹிஸ்டிரியாச் சிரிப்புடன் கைவிரிக்கிறான் ஒருவன்.

''லாரிக்காரனுங்களுக்குக் கண்ணு மண்ணு தெரியுதா?.....அவனுங்களை வெச்சி மேலே ஏத்தணும் லாரியை..''; என்கிறார் ஒரு மனுநீதிச் சோழன் பரம்பரை!

—அவர்களுக்கு ஆத்திரப்படுவதே ஒரு சுவாரஸ்யம்!

வீதியின் மறு கோடியில் அந்தப் போலீஸ்காரன் ஓடி வருகிறான். திருடனைத் துரத்திப் பிடிக்கும் திறனுள்ளவன் தான். பாசத்தின் வேகத்தைத் தொடர முடியாமல் பின்தங்கி விட்டான்.

இடுப்புப் பிள்ளையுடன் ஓடோடிவந்து கடைசித் தெருவையும் தாண்டி விபத்து நடந்த தெருவுக்குள் நுழைந்தபோது கூட்டத்தின் நடுவே இருந்து ஒருத்தி, தரையில் விழுந்து புரண்ட கோலத்துடன் இரு கைகளையும் வானத்தை நோக்கி உயர்த்தி ''அட கடவுளே...

உனக்குக் கண்ணில்லையா?'' என்று கதறி அழுவதைக் கண்டதும் இவன் நின்றான்.

கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் வழியச் சிரித்தான். ''அது நம்ம ராசா இல்லேடி, நம்ம ராசா இல்லே'' என்று கைக் குழந்தையை முகத்தோடு அணைத்துக் கொண்டு சிரித் தான். ஹிருதயம் மட்டும் இன்னும் தேம்பித் தேம்பி விம்மிக் கொண்டிருந் தது. இப்பொழுதுதான் உடையைச் சரி செய்து கொண்டாள். அருகில் வந்து நின்ற போலீஸ்காரனிடம் ''ஐயா, அது எம் பையன் இல்லே...வேற யாரோ ஐயா, என் பையன் இல்லே...'' என்று கண்களை மூடித் தெய்வத்தை நினைத்துக் கரம் கூப்பினான்.

'சீ...இவ்வளவுதானா? தாய்ப்பாசம்ங் கிறது இவ்வளவு அல்பமா? ஒரு சின்ன வட்டத்துக்குள்ளே மொடங்கிப் போறது தானா?' என்று முகம் சுளித்த போலீஸ் காரன் விபத்து நிகழ்ந்த இடத்தை நோக்கி நடந்தான்.

கும்பலின் நடுவே வீழ்ந்து கதறிக் கொண்டிருப்பவளைப் பார்த்ததும் போலீஸ்காரன் திடுக்கிட்டான்.

அங்கே அவன் மனைவி, மார்க்கெட்டுக் குப் போய்விட்டு வரும் வழியில் இந்தக் கோரத்தைப் பார்த்து விட்டாளோ?... அதோ காய்கறிப் பை கீழே விழுந்து சிதறிக் கிடக்கிறதே.

'அடி, பாவி...உனக் கேண்டி தலை யெழுத்து?' என்று முனகினாலும் போலீஸ் காரனால் பொங்கி வரும் அழுகையை அடக்க முடியாமல் குழந்தை மாதிரி விம்மி விம்மி அழுதான்.

''தங்கம்...இதெல்லாம் என்னடி?'' என்று அவளைத் தூக்கப் போனான். புருஷனைப் பார்த்ததும் அவள் குமுறிக் குமுறி அழுதாள்.

''ஐயோ! பாத்தீங்களா இந்த அநி யாயத்தை? இதைக் கேக்க ஒரு போலீசு இல்லியா? ஒரு சட்டம் இல்லியா... இருவது வருசமா நாம்ப எவ்வளவு தவமாத் தவமிருந்து வரமா வரங் கேட்டும் குடுக்காத அந்தக் கண்ணவிஞ்ச தெய்வம் இப்படி அநியாயமா ஒரு வைரப் பொதையலே வாரி எறைச்சி இருக்கே?...'' என்று கதறினாள்.

'தங்கம்!...அவுங்க அவங்க விதிக்கு நாம்ப அழுதாப் போறுமா?...எத்திரி... பைத்தியம் மாதிரி புலம்பறியே? வீட்டுக் குப் போலாம், வா...!'' என்று மனைவி யின் கையைப் பிடித்துத் தூக்கினான் போலீஸ்காரன். அவள் அவனைத் திமிறிக் கொண்டு விலகி நின்றாள். அழுத கண்கள் அவன் முகத்தை வெறிக்க, ''இது என் குழந்தை! ஆமா இது என் குழந்தைதான்'' என்று பிதற்றினாள்;

போலீஸ்காரனின் கண்கள், இறந்தது தன் குழந்தையல்ல என்று தன்னைத் தானே ஏமாற்றிக் கொண்டு அதோ வேடிக்கை பார்க்கும் உணர்ச்சியில் வருகிறானே, அந்தப் பரிதாபகரமான தாயை வெறித்தன...அடுத்து அங்கே நிகழப் போகும் ஒரு கொடிய சோகத்தைக் காண விரும்பாமல், தன் மனைவிக்கும் அதைக் காட்ட விரும்பாமல் அவளை வீட்டுக்கு அழைத்துப் போக அவள் கரத்தைப் பற்றித் தூக்கினான். அவள் அவனோடு புலம்பிப் புலம்பி அழுதவாறு தளர்ந்து நடந்தாள்.

கும்பல் இரண்டாகப் பிரிந்து இந்தப் போலீஸ்காரத் தம்பதிகளின் சோக நாடகத்தை வேடிக்கை பார்த்தவாறு இவர்களின் பின்னே வந்தது.

''பாவி ஒரு குழந்தையைப் பெத்துக் கொஞ்சறத்துக்குத்தான் பாக்கியம் செய்யாத மலடி ஆயிட்டேன். செத்துப் போன ஒரு குழந்தைக்கு அழக்கூட எனக்குச் சொந்தமில்லையா?'' என்று திமிறிய அவளை வலுக்கட்டாயமாய் இழுத்துச் சென்றான் போலீஸ்காரன்.

அந்தத் தெருக் கோடியில் உள்ள தன் வீட்டருகே மனைவியை அழைத்து வரும் போது, தூரத்தில் விபத்து நடந்த இடத்திலிருந்து அந்த 'டைம்பாம்' வெடித்தபோது போலீஸ்காரன் காது களை மூடிக்கொண்டான். ''ஐயோ! என் ராசா!'' என்று காலனியில் ஒலித்த அதே குரல் வீதியே அதிர வெடித்தெழுந்தபோது, தன் பிடியிலிருந்து திமிறியோட முயன்ற மனைவியை இரு கைகளிலும் ஏந்தித்தூக்கிக்கொண்டு வீட்டுக்குள் நுழைந்தான் போலீஸ்காரன்.

:4

போலீஸ்காரனது ஏந்திய கரங்களில் மனைவியின் உடல் பாரம் மட்டுமா கனத்தது?

அவன் தன் இதயத்தில் தாங்கும் உலகத்தின் சுமை-தாய்மையின் சோகம் அதை அவனால் தாங்க முடியவில்லை.

உள்ளே போனதும் இருவரும் ஒருவரை யொருவர் தழுவிக் கொண்டு 'ஓ' வென்று கதறியழுதனர். திடீரெனத் திரும்பிப் பார்த்த போலீஸ்காரன் வாசலிலும் சன்னல் புறத்திலிருந்தும் கும்பல் கூடி நிற்பதைப் பார்த்து எழுந்து போய்க் கதவைப் படார் படார் என்று அறைந்து சாத்தினான்.

போலீஸ்காரன் வீட்டு முன்னே கூடியிருந்த கும்பல் மீண்டும் விபத்து நடந்த இடத்துக்கே ஓடியது. ஆமாம்! கும்பலுக்கு எல்லாமே ஒரு வேடிக்கைதான்.

1962 ஜனவரி 6ஃ அன்று

குதூகல ஆரம்பம்.....

ராஜகமலின் டெக்னிகலர்

# ஸ்த்ரீ

அபிக்ஞியான் சாகுந்தலத்தை தழுவியது



சந்தியா, சாந்தாராம், ராஜ்ஸ்ரீ சாந்தாராம்

நடித்தது

டைரக்ஷன் வி. சாந்தாராம் • சங்கீதம்: சி. ராமசந்திரா

சென்னை: க்ளோப் - பிராட்வே.........

பெங்களூர்: அலங்கார்

அலங்கார் சித்ரா வெளியீடு

# சங்கு ஊதியது

மஹி

‘மானேஜிங் டைரக்டர் எப்போது வரப் போகிறார்’ என்று காத்திருந்தது போல அவர் வந்ததும் வராததுமாக அவருடைய தனி அறைக்குள் நுழைந்தான் நாகராஜன். அவன் வந்ததை அவர் கவனிப்பதற்கு முன்னரே, தன் கையில் தயாராகக் கொண்டு வந்திருந்த கடிதத்தை நீட்டினான். நாகராஜனின் திடீர் வரவால் தயங்கிய மானேஜிங் டைரக்டர் சுதர்சனம் ''என்னப்பா, நாகராஜ்! என்ன விசேஷம்?'' என்று வழக்கமான கேள்வியைக் கேட்பதற்கு முன்னரே அவன் தான்வந்த வேலை முடிந்துவிட்டது போன்ற பாவனையில் காகிதத்தை மேஜைமீது வைத்து அதன்மேல் பேப்பர் வெயிட்டாகக் கண்ணாடிக் குண்டை வைத்துவிட்டு அந்த அறையை விட்டு வெளியேறிவிட்டான். அவன் போன வேகத்தை அந்த அறையின் ஸ்பிரிங் கதவு சுமார் ஐந்து நிமிஷங்கள் வரையில் ஆடித் தெரிவித்துக் கொண்டிருந்தது.

சுதர்சனம் சாவகாசமாகக் கடிதத்தைப் படித்தார். அவர் சற்றும் எதிர்பாராத விஷயமாக அது இருந்தது. அது நாகராஜனின் ராஜிநாமா. அவன் ராஜிநாமா செய்யப் போகிறான் என்றோ, அப்படிச் செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படக்கூடிய நிகழ்வோ ஏதும் நடந்திருக்கவில்லை. அதனால் ஒன்றும் புரியாதவராய், தாம் காணுவது கனவோ, நனவோ என்று திகைத்து ஒரு கணம் தலை நிமிர்ந்து பார்த்தார் சுதர்சனம். நாகராஜனால் ஆட்டிவிடப்பட்ட ஸ்பிரிங் கதவு இன்னமும் ஆடிக்கொண்டே யிருந்தது. அவனுக்குக் கோபம் வருவிக்கக்கூடிய நிகழ்ச்சி எதாக இருக்கும் என்று அவரால் நினைத்துப் பார்க்கக் கூட முடியவில்லை.

நாகராஜன், அந்த ஆபீஸ் சிப்பந்தி என்பதும் தவிர இரண்டு வருஷங்களாக அவருடைய மாப்பிள்ளையாகவும் ஆகிவிட்டிருந்தான்.

என்னதான் மாப்பிள்ளையாக ஆகிவிட்டிருந்தாலும் சிப்பந்திகள் வசிக்கும் இடத்திலேயே அவனுக்கு வீட்டு வசதி செய்து கொடுத்திருந்தார். நண்பர்கள் கேலி செய்தது போல், ‘அவனுக்கு என்ன? மானேஜிங் டைரக்டரின் மாப்பிள்ளை’யாகப் பெயரளவில் இருந்து வந்தானே தவிர உத்தியோகத்தில் காரியாலயச் சலுகையில் ஏதும் முன்னேற்றம் அடையாமலேயே குமாஸ்தாவாகவே இன்னும் இருந்து வந்தான்.

நாகராஜன் போய்விட்ட பின்னர் சில முக்கியமான ஆபீஸ் கடிதங்களைப் பார்வையிட்டுவிட்டதில் தம் மனத்தின் எண்ணங்களை மறந்திருந்தாலும், அவை தீர்ந்துவிட்ட பின்னர் சுதர்சனத்தின் மனத்தில் நாகராஜனின் ராஜிநாமாக் கடிதம் உறுத்திக் கொண்டிருந்தது. மனம் எதிலும் ஓடவில்லை. இத்தனை உயர்வாகத் தம் மாப்பிள்ளையாகவே செய்து கொண்டுவிட்ட பையன் என்ன காரணத்துக்காக ராஜிநாமாக் கடிதத்தை விட்டெறிவது போலப் போட்டுவிட்டுப் போகிறான் என்று மூளையைக் குழப்பிக் கொண்டதுதான் மிச்சம்; அவன் செய்த செயலின் காரணம் புரியவில்லை.

நாகராஜன் சுமார் பத்து வருஷங்களுக்கு முன்னர் அந்த நெசவாலையின் சாதாரணச் சிப்பந்தியாகத்தான் வேலையில் சேர்ந்தான்; கடிகாரத்தையும் தேதியையும் லட்சியம் செய்யாமல் கொடுத்த வேலையில் தன்னை மூழ்கடித்துக் கொண்டு வேலை செய்து வந்தான். எந்தப் பகுதியில் எந்த மாதிரியான வேலையைக் கொடுத்தாலும் அயராமல் கடமையே கண்ணாகச்செய்து வந்தான். அந்த நெசவாலையின் வழக்கத்தை யொட்டிச் சாதாரணமான சம்பளமே போட்டுக் கொடுத்திருந்தாலும் சம்பளம் அதிர்ஷ்டத்துக்காக, வேலை வேலைக்காகவே என்ற எண்ணத்தில் தன் வேலைகளை அளவுக்கு அதிகமான பொறுப்புணர்ச்சியுடன் தான் செய்து வந்தான். கணக்குகளில், கடிதம் எழுதுவதில், டைப்பிஸ்ட் பதவியில் என்றெல்லாம் மாற்றி மாற்றிப் போட்டாலும் கொடுத்த வேலையை நன்றாகவே செய்துவந்தான். எழுபதுக்கும் குறைவான சம்பளத்தில் அத்தனை சிரத்தையுடன் வேலை செய்தவர்கள் வேறு யாருமே அந்த நெசவாலையில் இல்லை.

ஆனாலும் பதவி உயர்வு புதிய பதவி என்று வரும்போதெல்லாம் சுதர்சனத்தின் கண்களில் நாகராஜன் தட்டுப்பட்டதே யில்லை. யார் யாரையோ நூற்றுக்கும் அதிகமான சம்பளத்தில் நியமித்தார். சில புதிய இளைஞர்களைப் பதவி உயர்வு கொடுத்து வைத்தார். அத்தனை விஷயங்களையும் நாகராஜன் தான் ‘டைப்’ செய்து கொடுத்தான். ஆனாலும் அவனுடைய பதவி உயர்வை அவன் டைப் செய்யச் சந்தர்ப்பம் கிடைக்கவேயில்லை. ஆனால் அதையெல்லாம் அவன் கண்டு கொண்டதாகக் கூடக் காட்டிக் கொள்ளவில்லை. ‘தனக்குக் கொடுத்து வைத்தது அவ்வளவு தான்’ என்பது போலப் பேசாமல் நிஷ்காம்ய கர்மவாதியாகப் பணியாற்றி வந்தான்.

இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில்தான் அந்த நெசவாலைக்குள் அரசியல் நுழைந்தது. யுத்தத்தின் பின் விளைவாக விலைவாசிகள் உயர்ந்து கொண்டே போய் நடுத்தர வகுப்பாரால் எட்டிப் பிடிக்க முடியாத உயரத்துக்கு உயர்ந்து போய்க் கொண்டிருந்த அந்தச் சமயத்தில் சிவப்பு நிறம் அங்கு தலைகாட்ட ஆரம்பித்தது. என்ன செய்வார்கள், பாவம்! பசி, பட்டினி, அரைப் பட்டினியான நிலையில் அளவுக்கு அதிகமான வேலை வாங்கும் நிர்வாகத்தைக் கண்டு மனம் கசந்துகொள்ள ஆரம்பித்தார்கள் சிலர். அப்போதும்கூட நாகராஜன் தன் நிலையிலிருந்து தவறவில்லை. அதிர்ஷ்டத்தையும் விதியையும் நம்பிக்கொண்டு பேசாமல் இருந்து வந்தான். ‘கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொட்டும்’ என்பார்களே, அதை அப்படியே நம்பாவிட்டாலும் ஓரளவுக்கு நம்பத்தான் செய்தான்;

ஹோட்டல் சாப்பாட்டுக்கு அதிகமாகப் பணம் கேட்டான். தங்கியிருந்த அறையின் வாடகையைக் கூட்ட வேண்டும் என்றும் வீட்டுக்குடையவன் நெருக்கினான். சலவைத் துணிகளுக்கும் இரண்டு காசு சேர்த்துக் கேட்

டான் சலவைத் தொழிலாளி. அனைவரின் கூற்றிலும் நியாயம் இருந்தது. அவர்கள் 'அகவிலை கூடிவிட்டது' என்று சொல்லிக் காரண காரியங்களுடன் கேட்டார்கள். ஆனால் எப்போதும் மார்க்கண்டேயர் போல் வளராமல் முளையடித்து நிறுத்திவிட்ட அவனுடைய எழுபது ரூபாய் சம்பளத்தால் இத்தனை நிகழ்ச்சிகளையும் பொறுத்துக் கொள்ள முடியவில்லை: எப்படியோ இரண்டொரு மாதங்களை ஓட்டிவிட்டான். சிக்கனத்தைக் கடைப்பிடித்துக் கொண்டு ஒருவேளைச் சாப்பாட்டைக் குறைத்துக்கொண்டு, பஸ்ஸில் ஏறாமல், நடந்தே காரியாலயம் போய், இவ்வாறு தன்னையும் தன் சௌகரியங்களையும் மாற்றி அமைத்துக் கொண்டாலும் வருவாய் ஒரே நிலையில் நிற்கும்போது செலவுகளை வளர்த்துக் கொண்டு சரிக்கட்ட முடியாமல் திண்டாடினான்.

சரியான சாப்பாட்டை மாற்றினான். பல வேளைகளில் சாப்பிடுவதுகூடக் கிடையாது; சாப்பிடாத அரைப்பட்டினி நிலையில் வேலைகளை மட்டும் சோம்பலில்லாமல் செய்வது என்பது முடியவில்லை. ஆனாலும் அவனுள் வளர்ந்துவிட்ட கடமையுணர்ச்சி பிடரி பிடித்து உந்தவும் எப்போதும் போலவே சுறுசுறுப்புடன் வேலைசெய்து வந்தான்.

அப்படித் தவித்தாலும் தவித்தானே ஒழிய வேறு வேலை தேடவோ, அல்லது மானேஜிங் டைரக்டரைக் கண்டு சம்பளம் சேர்த்துத் தரவோ கேட்டவனில்லை. நிலைமையை ஒட்டி மானேஜ்மெண்டும் சம்பள உயர்வு அளிக்கவில்லை. 'இதை மாற்ற என்ன செய்யலாம்' என்று நாகராஜன் யோசித்துக் கொண்டிருந்த சமயத்தில்தான் ஒருநாள் தொழிலாளர்களின் கூட்டம் ஒன்றுக்கு அகஸ்மாத்தாகப் போயிருந்தான். பொதுவுடைமைக் கட்சியின் கொடியின் கீழ் அந்த நெசவாலையின் தொழிலாளிகள் ஒன்று கூடியிருந்தார்கள். பேசப்பட்ட விஷயங்கள்: பசி, பட்டினி. இவற்றை மாற்ற என்ன செய்ய வேண்டும் என்பன போன்ற செய்திகளைப் பற்றி அனைவருமே பேசினார்கள். நாகராஜனுக்கு அரசியல்பற்றி ஒன்றுமே தெரியாது. பொதுவுடைமை என்பது ஏகலை. அடிதடி. கொள்ளை, கொலை ஆகியவை யெல்லாம் செய்தல் என்றே



கருதி வந்தான். அதில் தன்னுடைய பசிக்கும், குறைகளுக்கும் நிவர்த்தி மார்க்கம் இருக்கிறது என்பதைக் கேட்டது ஏதோ கனவில் கேட்கும் செய்தியாகவே எண்ணினான்.

எதிலும் புதிய விஷயம் என்றால் அதில் ஒரு தனி சிரத்தையும், பிடிப்பும் ஏற்படுவது மனித இயற்கைதானே? 'பிளாட்டிங் பேப்பரை'ப் போல் அத்தனை விஷயங்களும் நாகராஜனின் மனத்தில் படிந்தன. முதலாளிகளின் சுரண்டல், பாட்டாளியின் பட்டினி, இப்படிப் பட்ட கோஷங்களை முன்னர் கேட்டிருக்கிறான் என்றாலும் அதற்கு அன்று அர்த்தம் புரியவில்லை. ஏதோ புரட்சிக்காரர்கள் சொல்லிச் செல்லும் பிதற்றல் என்றே கருதி வந்திருந்தான். இன்று அவனும் பட்டினி என்ற நிலையில் ஒவ்வொரு சொல்லும் அப்பட்டமாகப் புரிந்தது. 'ஸ்டிரைக்' என்ற 'வரப்பிரசாதத்தைச் சொன்னதும் தொழிலாளர்கள் கைதட்ட ஆரம்பித்தனர். நாகராஜனுக்கு என்றைக்குமில்லாத உற்சாகம் தலைதூக்கியது. அன்றே தொழிலாளர் சங்கத்தில் வலுவில் சென்று அங்கத்தினன் ஆனான். அன்றிலிருந்து ஒவ்வொரு கூட்டத்துக்கும் தவறாமல் சென்று வந்தான். அவனுடைய வழக்கத்தையொட்டி எதிலும் தன்னை மறந்து வேலை செய்யப் பழகி விட்டதின் காரணமாகத் தொழிற் சங்க நடவடிக்கைகளிலும் தன்னை மறந்து ஈடுபடுத்திக் கொண்டான்.

நாகராஜனின் கடமையுணர்ச்சியையும் பொறுப்பையும் கண்ட தொழிற் சங்கம் அவனை ஒரு பொறுப்புள்ள அங்கத்தினனாக உயர்த்தியது. எந்தச் செயலுக்கும் நாகராஜன் இன்றியமையாத அங்கமாகி விட்டான். நாகராஜன் எதைச் சொன்னாலும் அப்படியே செய்துவிடத் தொழிலாளர் சமூகம் தயாராக இருந்தது போன்ற நிலை.

நாகராஜனின் போக்கைக் காலம் கடந்து அறிந்து கொண்டது மானேஜ்மெண்டு. அதைச் சேர்ந்த மானேஜிங் டைரக்டர் நாகராஜனை நயத்தில் வசப்படுத்த விரும்பினார். அவனை அழைத்து, அவனுடைய சௌகரியங்களைக்கேட்டு, அன்போடு பேசி, அவன் குறைகளைத் தீர்ப்பதற்கு வசதியாகத் தம் வீட்டில் ஜாகை வசதி செய்து கொடுத்தார். தம் வீட்டிலேயே சாப்பிடக் கூடச் சொன்னார். ஆனாலும் நாகராஜன் தன் கடமை



யையும் தொழிற் சங்கத்துக்குக் கொடுத்திருந்த வாக்கையும் காப்பாற்ற வேண்டி மானேஜிங் டைரக்டர் விரித்த வலையில் விழாமல் இருந்து வந்தான். ஆனால் என்ன செய்வது? அவனும் மனிதன்தானே? பருவம், பழக்கம் அவனை மாற்றி விட்டிருந்தன.

* * *

ராஜினாமாக் கடிதத்தைக் கொடுத்துவிட்டு 'விருட்'டென்று வெளியே வந்துவிட்ட நாகராஜன் நேராகத் தன் அறைக்குப் போனான். அவனுடைய மனைவி கேட்டதற்கும் பதில் சொன்னவனல்லன்.

எதையும் தன் வாயால் சொல்லாவிட்டாலும் முகம் காட்டியதையொட்டியும் வழக்கத்துக்கு விரோதமாக அகாலத்தில் வீட்டுக்கு வந்த தன் கணவனை, பாவம்! விசாலத்தால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஏதோ சற்று நேரம் ஆசுவாசப் படுத்திவிட்டு, "ஏன்? என்ன ஆச்சு?" என்று 'நைஸா'கக்கேட்டாள்.

"உனக்கு ஒன்றுமில்லே...." என்று கசிந்தமாகப் பதில் சொல்லி அனுப்பி விடத்தான் பார்த்தான்.

"ஒன்றுமில்லேன்னு ஏன் இப்படி முகத்தைத் தொங்க விட்டுண்டு..."

"நாளைக்கு மெட்ராஸ் போகணும். உனக்கு வரப் பிடிக்கறதுன்னு வா. இல்லே, ஒங்க அப்பா வீட்டிலே போய் இருந்துக்கோ."

"இன்னிக்கு ஏன் இப்படியெல்லாம் புரியாமல் பேசறேள்? கொஞ்சம் புரியும்படியாத்தான் சொல்லுங்களேன்."

"ஒங்கப்பாகிட்டே கால் கடுதாசி குடுத்துட்டேன். நாளைக்கி வேறே வேலை பார்த்துக்கணும்" என்றான் நாகராஜன்.

"ஏன் அவர் என்னத்தைச் செஞ்சார்? ஒங்களைத் தேடி என்னை ஒப்பிச்சாரே அதுக்காகவா...?"

"ஆமாம் அவா தான் ஒப்பிச்சாரா? இல்லே நீ ஒப்பிச்சயா?"

"எப்படி வேணும்னாலும் இருக்கட்டுமே: ஒங்களை மலையா நம்பி...."

"ஆமாம், நம்பினவர்தான் தம் மாப்பிள்ளையை இன்னும் அதே டைப்பிஸ்டாக வெச்சிருக்கிறாராக்கும்..."

"அதுக்கு என்ன பண்ணறது? எல்லாத்துக்கும் குடுத்து வெச்சிருக்கணுமோல்லியோ?"

"ஒன்னெக் கட்டிக்கறதுக்கு மாத்திரம் குடுத்து வெச்சிருக்கதாக்கும்..."

"குடுத்து வெக்காமெதான் ஓட்டோடியும் வந்து உசிரெக் காப்பாத்தினேளாக்கும்..."

விசாலத்தின் பேச்சைத் தொடர்ந்து அவள் பார்வை அர்த்தம் நிறைந்ததாக நாகராஜனைப் பார்த்தது. நாகராஜனும் அந்தக் கண்களில் தன்னை நுழைத்துக் கொண்டான். விசாலம் பெயருக்கேற்ப விசாலமான கண்களைப் பெற்றிருந்தாள். அந்தக் கண்கள்தாம் இத்தனை நாட்களும் அவனை உற்சாகப்படுத்தி வந்தன. அந்தக் கண்கள்தாம் அவனை மானேஜிங் டைரக்டரின் வீட்டில் ஒட்டவைத்தன: அந்தக் கண்கள்தாம் அவனுடைய வேகமான தொழிற்சங்க முயற்சிகளிலிருந்து அவனைக் கட்டிப் போட்டிருந்தன. இன்றும் அதே கண்கள்தாம் அவனைக் கேள்வி கேட்டு ஊடுருவிப் பார்த்தன.

நாகராஜன் நிலை குலைந்து விட்டான். விசாலத்தின் அரிய நேசம் அவனுக்குக் கிடைத்ததற்கும், அவளையே மனைவியாக அடைவதற்கும் வழி செய்த சுதர்சனத்தை அவளுடைய எண்ணம் தெரியாமல் பகைத்துக் கொண்டு ராஜினாமா கொடுத்துவிட்டு வந்து



விட்டான். அவன் 'செய்தது ஒருவேளை தப்போ' என்று இப்போது கவலைப்பட ஆரம்பித்தும்விட்டான்.

....பெண் கொடுத்து விட்டா" என்றால் இன்னும் அரைப் பட்டினியில் வைத்திருக்க வேண்டுமோ? எத்தனை பேர்களுக்கு வேலை உயர்வு கொடுத்தார்? எத்தனை புதிய இளைஞர்களுக்கு அதிக சம்பளத்தில் வேலை கொடுத்தார்? அப்படி யிருக்கையில் சொந்த மாப்பிள்ளைக்கு இன்னும் அதே 'எழுபது-இரண்டு-நூறு—ஐந்து—நூறைம்பது கிரேடி'லேயே வைத்திருக்கிறாரென்றால்..:? 'நாகராஜா! நீ நம்பாதேயப்பா. அவர் பெண்ணைக் கொடுத்தது தம்முடைய சுய நலத்துக்காகத்தான். நீ அவர்களை நம்பாதே. முதலாளிகளின் ராஜதந்திரம் பாவம் உனக்குத் தெரியவில்லை. தொழிற் சங்கத்திலிருந்து நீ விடுவிக்கப்படத்தான் பெண்ணைக் கொடுத்தார்' என்று மனத்தின் ஒரு மூலையிலிருந்து ஒரு குரல் கிளம்பியது.

அப்படியானால் 'என் உயிரைக் காப்பாற்றின உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன்? எல்லாவற்றுக்கும் ஈடாக என் பெண்ணை உனக்குக் கொடுக்கிறேன்' என்று மனப்பூர்வமாகச் சொன்னதாக எண்ணினேனே, அது வெறும் வேஷம் தானா?

'என்ன பைத்தியமப்பா. இன்னும் உயிரைக்கூடக் கொடுப்பதாகச் சொல்வார்கள். உன்னைப் போலப் பைத்தியங்களைப் பின்னே எப்படி வழிக்குக் கொண்டு வருவார்களாம்?'

இப்படியெல்லாம் தன்னையே கேள்விகள் கேட்டுத் தன்னைச் சித்திரவதைகளுக்கு உட்படுத்திக் கொண்டான் நாகராஜன். சிந்தனையைத் தொடர்ந்து அவன் அந்த நாட்களுக்கே போய் விட்டான்.

ஃ ஃ ஃ

மூன்று வருஷங்களுக்கு முன்தான் அது நடந்தது. நாகராஜன் தன்னைப் பூரணமாகத் தொழிற் சங்கத்தில் ஈடுபடுத்திக் கொண்டிருந்த சமயத்தில் தொழிலாளர்கள் 'ஸ்டிரைக்' செய்வதென்று ஏகமனதாகத் தீர்மானித்து விட்டார்கள். நாகராஜன் சுதர்சனத்தின் வீட்டோடேயே இருந்தாலும், இன்னும் எல்லா நடவடிக்கைகளிலும் ஈடுபட்டிருந்தான். 'ஸ்டிரைக்' நடந்தது. அதையொட்டி நெசவாலை மூடப்பட்டது. நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. முன்னரே அரைப்பட்டினி கிடந்த தொழிலாளர்கள் இப்போது பட்டினியாகவே இருக்கத் தலைப்பட்டார்கள். அதனால் சில முன்கோபக்காரர்களின் ஆத்திரம் மானேஜிங் டைரக்டரான சுதர்சனத்தின்மீது திரும்பியது. இவ்வளவுக்கும் சுதர்சனம்தான் காரணம் என்று எண்ணிக்கொண்டு அவரைத் தாக்கி அழித்துவிடத் தீர்மானித்தார்கள். எதையும் தனியே நின்று செய்ய முடியாமல் ஒரு கோஷ்டி சேர்ந்தார்கள். சதியாலோசனைகள் நடந்தன. நாகராஜனும் அதில் இருந்தான்.

ஒருநாள் இரவு பத்துப் பேர்களாகச் சேர்ந்து கொண்டு சுதர்சனத்தின் வீட்டுக்குப் போய் அவரைத் தாக்கி விடுவது என்று முடிவாயிற்று. நாகராஜன் எவ்வளவோ தடுத்தான். 'நாம் நேரிய முறையில் ஸ்டிரைக் செய்ய வேண்டும், பலாத்காரத்தை உபயோகித்துச் செய்தால் அதன் பின்விளைவுகளுக்கு வருந்த நேரிடும்' என்றெல்லாம் சொன்னான். அவன் வார்த்தைகளைக் கேட்பவர்களில்லை. நாகராஜன் சுதர்சனத்தின் வீட்டிலேயே ஜாகை வைத்துக் கொண்டிருந்ததையே அவர்கள் விரும்பியதில்லை. அவனை ஓர் ஒற்றனாக எண்ணாமலிருந்ததே அவனுடையபுண்ணியம். அப்படி யிருக்கையில் அவன் சுதர்சனத்துக்காக வாதாடியது அவர்களுக்கு வேறு விதமாகப் பட்டது. அவர்கள் தங்கள் கோபத்தில் நாகராஜன்மீதே கையை நீட்டி விட்டார்கள். அத்துடன் அவனைச் சிறைப்படுத்தவும் தீர்மானித்து விட்டார்கள். தங்கள் முயற்சி முடியுமட்டும் அவன் அவர்களை விட்டு அசையக் கூடாது என்று கடுமையாகத் தீர்ப்பளித்தார்கள். மீறி ஏதாவது செய்தால் அவன் உயிர் போய்விடக்கூடிய நிலையில் நிறுத்திவிட்டனர்.

தாக்கும்போது ஏதாவது தப்பித்தவறி ஆகிவிட்டால் அனைவரும் மரண தண்டனையடைய வேண்டும் என்று சிலர் பயங்காட்டினார்கள். துணிந்துவிட்ட சிலர் 'ஸ்டிரைக் சமயத்தில் யார் செய்தார்கள் என்று தெரியவே நியாயமில்லை' என்று சமாதானம் சொல்லவே அந்த வாதம் அடிபட்டது. நாகராஜன் விரும்பியோ அல்லது விருப்பமின்றியோ இவ்வளவையும் கேட்டுக் கொள்ள வேண்டியதாயிற்று. அவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை. ஆனால் மனம் மட்டும் பறந்து கொண்டிருந்தது. எப்படியாவது இந்தச் செய்தியைச் சுதர்சனத்துக்கு எட்டச் செய்துவிட வேண்டும் என்று பறந்தான். அவனால் ஒன்றுமே செய்ய

முடியவில்லை. சகலே தம்பிக்கொண்டு பேசாமல் இருந்துவிட்டான்.

அதே தினம் நடு இரவாயிற்று. திட்டமிட்டபடி பத்துப் பேர்கள் புறப்பட்டார்கள், சுதர்சனத்தின் வீட்டை நோக்கி. நாகராஜனும்கூட வந்து கொண்டிருந்தான். அவனைத் தான் முரடர்கள் அசைய விடவில்லையே! போய்க் கொண்டேயிருந்தார்கள். அந்த நிலையில் அந்த நேரத்தில் நாகராஜனும் சேர்ந்து வந்திருப்பதைச் சுதர்சனம் அறிந்தால்....நாகராஜன் குன்றிவிட்டான். அவன் பசியின் காரணமாக, பட்டினியின் உந்தலினால் உரிமையைக் கேட்கத்தான் துணிந்தான். சாத்வீகமான போராட்டத்துக்கு முன்னின்று சம்மத மளித்தான். ஆனால் இப்படித் தாக்க வேண்டியதிருக்கும்; அதிலும் தான் சேர்ந்து கொள்ள வேண்டும் என்று அறிந்தவனில்லை. நடைப்பிணம் மாதிரி ஓடிக்கொண்டிருந்தான். ஆயிற்று, சுதர்சனத்தின் வீடு வந்துவிட்டது. நெசவாலையின் உள்ளே உள்ள பங்களாவிலேயே அவர் இருந்து வந்தார். நெசவாலையின் வாசற்படி நெருங்கியது.

என்ன எண்ணிக் கொண்டானோ என்னவோ, அது வரையில் முரடர்களுடன் வந்து கொண்டிருந்தவன் நெசவாலையின் கேட்டைக் கண்டதும் வழி விலகி ஓடினான். அவனைப் பிடிக்க அவர்கள் நினைப்பதற்கு முன் நெசவாலையின் பயங்கர 'சைரன்' நீளமாக ஊளையிட ஆரம்பித்துவிட்டது. முரடர்கள் திகைத்தார்கள். அக்கம் பக்கத்திலிருந்தவர்கள் அகால வேளையில் சத்தத்தைக் கேட்டு விழித்துக் கொண்டு வெளியே வந்தார்கள்; சுதர்சனமும் விழித்துக் கொண்டார்.

வாசலில் நின்ற கூர்க்கா விஷய விளக்கம் செய்தான். பத்து முரடர்கள் தன்னைத்தாக்க வந்ததையும் தான் சமாளித்ததையும் அவர்கள் கையில் தடி, கத்தி ஆகியவைகளுடன் சுவரேறிக் குதித்ததாகவும், அத்தனை பேரையும் தன்னால் சமாளிக்க முடியாததினால் கூச்சலிட முயன்ற சமயத்தில்தான் சங்கு அலறியதாகவும் சொன்னான்.

'சைரனை இயக்கியது யார்?' என்று எவருக்கும் தெரியவில்லை.

க் க் க்

'மத்தியானச் சங்கும் ஊதிவிட்டதே; சாப்பிட வாங்கோ' என்று விசாலம் அழைக்கவும் நாகராஜன் சுயவுணர்வு அடைந்தான். 'சங்கா...எப்போ...'

"சரிதான் அன்னிக்கு ஊதின மாதிரி இல்லே. இன்னிக்கு சாப்பாட்டு வேளைக்காகச் சங்கு ஊதறது. வாங்கோ."

"சாப்பாட்டு வேளைச் சங்கா? சரி."

"பின்னே என்ன நீங்க 'ஸ்விச்சை'ப் போட்ட ஞாபகம் வந்துடுத்தோ?"

"எல்லாம் உனக்காகத்தான். அப்போ சங்கு ஊதியிருக்காத போனால் இப்படி நிற்பியோ?..."

"எல்லாம் ஒங்க மொதலாளி பக்தி. அதுக்கு நான் என்ன பண்ணுவேனும்?"

"மொதலாளி பக்தியுமில்லே மண்ணுமில்லே. இந்தத் தேசி பாவம் வீணாகப் பயந்துக்குவானேன்னுதான்."

பொருளாதாரத்தைச் சீர்குலைப்பதோடு காங்கிரஸ் ஆட்சி நின்றுவிடவில்லை. அது மனிதனுக்கு ஆன்மா என்று ஒன்று உண்டு என்றே எண்ணவில்லை. உடம்பைப் பேணுவதோடு எல்லாம் முடிந்து விடுகிறது என்பது அதன் சித்தாந்தம். இது பயங்கரமான விஷயம். மக்களில் சிலர் நாஸ்திகர்களாக இருப்பதால் அவ்வளவு தீமை இல்லை. ஆனால் நாட்டு விவகாரம் முழுவதையும் நிர்ணயம் செய்யும் அரசாங்கம் நாஸ்திகமாக இருந்துவிட்டால் அது இலேசான விஷயம் அல்ல. ஆன்மீகத்திலும், ஆன்ம நாட்டம் ஈடேறுவதற்கு உடல் ஒரு கருவியே என்றும் நம்புகிறவர்களிடம்தான் ஆட்சி இருக்க வேண்டும் என்று விரும்புவோர் எந்த மதத்தில் இருந்தாலும் சரி, அவர்கள் மீண்டும் காங்கிரசுக்கு அனுமதிச் சீட்டு தரக் கூடாது; சுதந்திரக் கட்சி ஒன்றுதான் அவர்களுடைய அபிலாஷைகளை நிறைவேற்றும். —ராஜாஜி

"ஐயோ போறுமே. அப்போ பயப்படறதுக்காகப் பயந்தவா. இப்போ மட்டும் பயமில்லாமெ...போயி தந்துப்பிந்துன்னு...காரியத்தெப் பண்ணிப்பிட்டு...ஒங்க பின்னே ஒங்களை வெய்யத்தான் போறான்."

"எம் பின்னேயா? அது யாரவன்? எங்கே மொளெச்சான்?"

"ஐயே போதுமே. பின்னே எங்கே மொளெப்பான்னு நான்சொல்லணுமாக்கும்." அதே கண்கள் சொல்லாமல் சொன்ன செய்தியைப் புரிந்து கொண்டுவிட்ட நாகராஜன் எழுந்து நகர்ந்தான். "நன்னாயிருக்கு. வேலையைத் தொலைச்சிண்டு வந்திருக்கறப்போ..."

"ஆமாம்! மகா வேலை குடுத்துட்டார். என்னிக்கும் மார்க்கண்டேயர் மாதிரி மாறுமே, மறையாமே. இந்த லட்சணத்துலே......நீ புன்னெவெ வேறே கூப்பிடறே."

"நான் ஒண்ணும் கூப்பிடல்லே..."

"நீ கூப்பிட்டாக்கூட நான் வரத்தானேம்மா வேண்டியிருக்கு!" என்று சொல்லிக் கொண்டே சுதர்சனம் உள்ளே நுழைந்தார்; நாகராஜன் தன் நிலையிலிருந்து விலகி நின்று கொண்டான்.

'என்னப்பா இந்தப் படைபதைக்கிற வெய்யில்லே. அப்படி என்ன அவசரம்'"

"என்னம்மா பண்றது? மாப்பிள்ளையா இருக்கார். இதோ பார். ராஜினாமா செய்திருக்கார். ஏன்? அப்படி என்ன நடந்துடுத்துன்னு கேட்கத்தான் வந்தேன்." நாகராஜனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இந்தப் பெண்கள்தான் எத்தனை மாய்மாலம் கற்றிருக்கிறார்கள்; தாம் இருக்க நிலையிலும் தம்மைச் சமாளித்துக் கொண்டு நிலைமைக்கு ஏற்பத் தம்மைச் சரி செய்துகொண்டு விடுகி

வருகிற தேர்தலில் சுதந்திரக் கட்சி அடையும் வெற்றி – தோல்வியோடு இந்தச் சுதந்திர இயக்கம் முடிந்து போகிற விஷயம் அல்ல. பூரண சுதந்திரம் ஸ்தாபிக்கும் வரையில் இடையறாது போரிட வேண்டும் என்று திடமாகச் சங்கற்பம் பூண்டிருக்கும் ஒரு விடுதலை இயக்கத்தின் பூர்வாங்க முயற்சிதான் இது. 1962ம் ஆண்டில் நடக்கப் போகும் தேர்தல் இந்த சர்வாதிகார எதிர்ப்புப் போராட்டத்துக்கு துவஜாரோகணம். இந்த யுத்தத்தில் முன்னணியில் நின்று நீங்கள் போர் புரிவீர்களாக! பலனைக் கருதாமல் இந்தப் பணியைப் புரிவீர்களாக!

—ராஜாஜி

ருர்களே என்று. அவன் பேசவில்லை. விசாலமே பதில் சொன்னாள்.

"பின்னே என்னப்பா. அவருக்குச் சம்பளம் கூடத் தராத போனாலும் என்னை வேறே கைம்மாறாகக் கொடுக்கிறதாக் கொடுத்து பாரமேத்திப்பிட்டேளே. பாரம் பாரத்தோடே நிக்கறது. மாசம் இதுவோ அடுத்ததோ தெரியல்லே. இன்னும் அதே மார்க்கண்டேயர் வயசுலே அவரை நிறுத்தி விருக்கேள். என்ன பண்ணுவார்? 'அறிஞ்ச அண்ணன் சிநேகிதக்காரன் ஆறு காசுக்கு மூணு தோசென்னுசொல்ற' கதையேதான்."

"சீ அசடே! நீயும் அப்படியே நம்பிட்டியே. சம்பளம் கூடக் கொடுத்தாத்தான் அன்புன்னு னைக்கா? ஒரு ஸ்தாபனத்துலே மாப்பிள்ளைன்னு அதிகமாகக் கொண்டாடறுன்னு சொல்லுவாளோல்லியோ. அதுக்காகத்தான்...."

"அரைப் பட்டினியாவெ வெச்சுக் கொல்றேளாக்கும்..." நாகராஜனின் வார்த்தைகளில் நஞ்சு தோய்க்கப்பட்டு வெளிப்பட்டன.

"நாகராஜன்! என் நிலையிலே நீ நின்னு பாக்கணும். இதோ பாரு."

நாகராஜன் வீசியெறிந்த அதே வேகத்தில் சுதர்சனமும் ஒரு காகித உறையை வீசிப் போட்டார். நாகராஜன் அதை எடுத்தும் பார்க்கவில்லை. அவன் மனத்தில் இது இன்றைய நிலையால் கிடைத்த உத்தியோக உயர்வு தான் என்ற எண்ணம் நிலைத்திருந்தது. கையில் எடுக்கவில்லை. விசாலம் அதைக் கையில் எடுத்தாள். பிரித்தாள். உள்ளேயிருந்தது ஒரு 'இன்ஷ்யூரன்ஸ் பாலிசி. அதிலிருந்த பூஜ்யங்களை ஒன்று பத்து நூறு என்று எண்ணினாள்: அவளுக்குக் கணக்கு வரவில்லை. நாகராஜனிடம் காட்டினாள். அவன் கண்களும் புருவத்தைத் தாண்டின. ஒரு லட்ச ரூபாய்க்கு உள்ள ஒரு பாலிசி. ஆரம்பிக்கப்பட்ட தேதியை அவன் கண்கள் பார்க்கத் தவறவில்லை. ஒரு வங்கினைக் கணித்துக் கொண்டு யோசித்தான்: சரியாக அதே தேதிதான். என்றைக்கு நாகராஜன் சங்கை ஊதி உயிரைக் காப்பாற்றினானோ அன்றே இந்த இன்ஷ்யூர் செய்யப்பட்டிருந்தது: கல்யாணம் அதற்குப் பிறகு ஒரு மாதம் கழித்தல்லவா? அப்படியானால் சுதர்சனம் அவன் எண்ணியது போன்ற கஞ்சனில்லையா?

அந்தச் சந்தேகத்தையும் சுதர்சனமே நிவர்த்தி செய்துவிட்டார். "கேள், நாகராஜா! உன்னைப் பற்றி உனக்கே தெரியாது. நான் உன்னை நன்றாக அறிந்து கொண்டு விட்டேன். என்றைக்கும் என் நலனில் அக்கறை கொண்டவன்தான் என்பதை உன்னைப் பார்த்தவுடனே அறிந்துகொண்டு விட்டேன். இருந்தாலும் உன்னைச் சோதனை செய்யவே ஆதி நாட்களில் குறைந்த சம்பளத்தில் வைத்திருந்தேன். நீ அயராமல் வேலை செய்தாய். பின்னர் தொழிற் சங்கம் உன்னை அழைத்தது. அதுவும் நல்லதற்குத்தான் என்று எண்ணி உன்னை என் வீட்டுடன் வைத்துக் கொண்டேன். அப்போதுதான் இட்டபடி நீ விசாலத்தின் மனத்தில் இடம் பிடித்தாய். இனி உன்னால் எந்த ஆபத்தும் இல்லை என்பது எனக்குத் தெரிந்து விட்டது: என்மேல் இருந்த கோபத்தில் அன்று நீயே கூட அந்தக் கோஷ்டியைத் தலைமை தாங்கி விருப்பாய். ஆனால் விசாலத்தின் கண்கள் உன்னைத் தடுத்தன. இதை நீயே அவளிடம் சொன்னதைக் கூட நான் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். உங்கள் சிநேகிதத்துக்காகத்தான் உனக்கு விசாலத்தைக் கொடுத்தேனே தவிர, என் உயிரைக் காப்பாற்றியதற்காக என்று சொன்னது ஊராருக்காக. மேலும் உன்னை இதே நிலையில் வைத்திருந்தது ஊராருக்காகத்தான். தவிரவும் உன்னை உயர்வு கொடுத்து நான் மேல் நிலைக்குக் கொண்டு வந்திருந்தால் உன்னிடம் எவரும் வரப் பயப்படுவார்கள். தொழிலாளரின் நிலைமையைத் தெரிந்துகொள்ள முடியாது. ஆகவே உன்னை அதே நிலையில் வைத்திருந்தேன். இன்றைக்கு உன் கோபம் தொழிலாளருக்கும் நன்மை செய்து விட்டது. டைரக்டர்கள் கூட்டத்தில் புள்ளிக் கணக்குப்படி அலவன்ஸ் தீர்மானம் நிறைவேறி விட்டது. உன் கோரிக்கை அவ்வளவுதானே!"

"போதும் அப்பா. நீங்கள் தெய்வம்: எல்லாவற்றையும் தெரிந்துகொண்டே இருந்திருக்கிறீர்கள்" என்று சொல்லி விசாலம் அப்பாவின் கால்களில் விழுந்து விட்டாள்.

'அழாதேயம்மா. இச் சமயத்தில் நீ அழக் கூடாது. சரி. உன் வீட்டுக்காரர் ராஜிநாமா செய்து விட்டார். இனிமேல் அவர் ஆபீசுக்கு வர வேண்டாம். நமது வீட்டிலேயே இருந்து கொண்டு என் எஸ்டேட்டுக் காரியங்களைக் கவனித்துக் கொள்ளட்டும். அதற்காக மாதச் சம்பளம்....."

"ஒன்றும் வேண்டாம். எனக்குப் பழைய நிலையே போதும்..." என்றான் நாகராஜன்: மூவர் கண்களிலும் நீர் சுரந்தது.

தொழிற்சாலையின் மத்தியான அழைப்புச் சங்கு ஊதியது. நாகராஜன் ஆபீசுக்குப் புறப்பட்டான். எதிரே 'வெற்றி வெற்றி' என்று பொறித்த அட்டைகளுடன் தொழிலாளர் கூட்டம் வந்து கொண்டிருந்தது. நாகராஜனும் 'வெற்றி வெற்றி' என்று கத்தினான்;


OSTERMILK

# பவழத் தீவு

கதை: வாண்டுமாமா
சித்திரம்: ரமணி

மங்கள துர்க்கத்தின் மன்னர் மஹிபாலர் சிறு படையுடன் பவழத் தீவிலுள்ள ஒரு தீர்த்தில் நீராடி நல் வாழ்வு பெறச் சென்றிருக்கிறார். அவருடன் ராணியும் சென்றிருந்தாள். இளவரசன் ஆனந்தன் மட்டும் மந்திரி சூரகேதுவின் பொறுப்பில் நாட்டில் இருந்தான். தூதுவன் ஒருவன் செய்தியோடு மங்கள துர்க்கத்தை நோக்கி வருகிறான்....

1

































இந்த ரகசியத்தை ஓர் உருவம் மறைந்து கேட்கிறது...

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், நேரே தேய்ப்பின் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன! இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீரியமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் கிடைத்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்,

# புது வெள்ளம்

அத்தியாயம் ஏழு

## அழைப்பு வந்தது

அகிலன்

கடற்கரையை அடுத்திருந்த சாலையில் மரத்தடியில் இரு நிழலுருவங்கள் போல் சித்திராவும் முருகையனும் நின்று கொண்டிருந்தனர். பதிலளிக்காமல் தலையைக் குனிந்து கொண்டு நின்ற முருகையன் மேல் சித்திராவுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

''ஏன் பேசாமல் நிற்கிறீர்கள்? ரிக்ஷா இழுப்பதற்கு உங்களுக்கு வெட்கமாக இல்லை?'' என்று மறுபடியும் கத்தினாள் சித்திரா. ''பண்ணையார் மகனாய்ப் பிறந்து, கல்லூரியில் பட்டப் படிப்புப் படித்து விட்டு, கடைசியில் இதற்குத்தானா பட்டணத்துக்கு வந்து சேர்ந்தீர்கள்?''

'பட்டணத்துக்கு நான் இதற்காக வரவில்லை, சித்திரா! எத்தனையோ ஆசைகளோடும், நம்பிக்கைகளோடும் தான் வந்தேன்' என்று சொல்லத் துடித்தான் முருகையன். 'நான் இந்த நிலைக்கு வந்ததற்கு உன்னுடைய குடும்பத்தாருக்கும் பொறுப்பு உண்டு' என்று இடித்துக் கூற நினைத்தான். ஆனால் அவன் ஒன்றும் பேசவில்லை.

''உங்களுடைய ரகசியத் தலைமறைவுகளுக்குத்தான் இனி அவசியமே இல்லையே? சுதந்திரம் வந்த பிறகுமா நீங்கள் போலீஸ்காரர்களுக்குப் பயப்பட வேண்டும்? இனியும் ஏன் இந்த வேஷம் போட்டுக் கொண்டு ஊரை ஏமாற்றுகிறீர்கள்....?''

''ஊரை ஏமாற்றுவது நானல்ல, சித்திரா! இந்த ஊர்தானே மிகவும் கேவலமான முறையில் ஏழைகளை ஏமாற்றி, அவர்களை ரிக்ஷா இழுக்கும்படி செய்திருக்கிறது? இத்தனை பங்களாக்களும், கார்களும், ஊதாரிப் பொருள்களும், கள்ளப் பணமும், கொள்ளை அதிகாரமும் குவிந்துகிடக்கின்றனவே, இந்த நகரத்தில், இந்த நகரத்துக்குக் கிஞ்சித்தாவது மனிதாபிமானம் இருந்தால், அது மனிதனை மாடாக மாற்றியிருக்குமா? வெள்ளையனைக் கறுப்பன் அடிமைப்படுத்திய காலம் தீர்ந்து விட்டது. ஆனால் கறுப்பனைக் கறுப்பன் நசுக்கும் காலம் என்று தீரும்? மனிதனுக்கு வேறு வேலை கிடைத்தால், அவன் ஏன் மற்றொரு மனிதனை இழுத்துப் பிழைக்கிறான்? வெட்கப்பட வேண்டியது நான் அல்ல, சித்திரா!''

முருகையனின் சொற்களைக் கேட்டுத் திடுக்கிட்ட சித்திரா, ''உண்மையான ரிக்ஷாக்காரனாகவே மாறி விட்டீர்கள் போலிருக்கிறதே!'' என்று கேட்டு விட்டு அவன் கோபத்தை மாற்றுவதற்காகச் சிரித்தாள்.

''பழகிப் போன ரிக்ஷாக்காரன் தான் மனிதன் என்பதையே மறந்து விட்டான். நான் பஞ்சத்துக்கு ரிக்ஷா இழுப்பவன்.''

''போகட்டும்! இதையெல்லாம் விட்டு விட்டு, நம்முடைய சொந்த விஷயத்தைப் பற்றிப் பேசுங்கள்'' என்று சொல்லிக் கொண்டே அருகில் இருந்த சிமெண்ட் பெஞ்சியில் உட்கார்ந்தாள். ''நீங்களும் உட்காருங்கள்'' என்றாள்.

''நான் உட்கார்ந்தால் அது உனக்கு மரியாதையில்லை, சித்திரா!'' என்று நின்றபடியே பதிலளித்தான் முருகையன்.

''எப்படியாவது இன்றைக்கு உங்களைத் தேடிக் கண்டுபிடித்துவிட வேண்டும் என்றுதான் நானும் பல இடங்களில் அலைந்து பார்த்தேன். உங்களுடைய இருப்பிடத்தையும் நீங்கள் சொல்லவில்லை. கடற்கரையிலும் உங்களைக் காண முடியவில்லை. இனி என்னோடு நீங்கள் வீட்டுக்கு வரலாமல்லவா?''

இடையில் ஒரு முறை அவளைத் தேடிப் போய் விட்டு, ஏமாற்றத்துடன் திரும்பியது முருகையனின் நினைவுக்கு வந்தது. அப்போதுகூட அவன் காரை நிறுத்தி, சித்திராவைப் பார்த்திருக்கலாம். அப்படிச் செய்யாததால், அந்த நிகழ்ச்சியைப் பற்றி அவளிடம் அவன் ஒன்றும் கூறவில்லை.

''என்ன சொல்லுகிறீர்கள்? இன்றைக்கு நம் வீட்டில் உங்களுக்குச் சுதந்திர தின விருந்து! சரிதானா?''

திடீரென்று ரிக்ஷாக்கார முனியாண்டிக்கு அவன் கொடுக்க வேண்




ஆகிய சுதந்திர தினப் பரிசு முருகையனின் நினைவுக்கு வந்தது. முனியாண்டி நோய்ப் படுக்கையில் கிடப்பதையும், அவன் மனைவியும் குழந்தைகளும் சிரமப்படுவதையும் நினைத்துப் பார்த்தான். மறு நாளோ, அதற்கு மறு நாளோ அவன் குடிசைக்குத் திரும்பி வந்து விடுவான். அதற்கிடையில் எப்படித் திடீரென்று சித்திராவுடன் புறப்படுவது?

''உன்னுடைய வீட்டுக்கு நான் வருவதை உன் அண்ணுவோ, அம்மாவோ விரும்புவார்களா, சித்திரா?''

''ஏன் உங்களுக்குச் சந்தேகம் வந்து விட்டது? இப்போதெல்லாம் வாய்க்கு வாய் உங்களைப் பற்றித்தான் அண்ணு பேசிக் கொண்டிருக்கிறார். வருகிறவர்களிடம்கூட நீங்கள் சிறைக்குப் போய் விட்டு வந்ததைப் பற்றிப் பெருமையாய்ச் சொல்கிறார்.''

''போய், போய், சுத்தப் போய்!'' என்று கூறிச் சிரித்தான் முருகையன். ''சிறைக்குப் போய் வந்ததாலேயே எனக்கு வேலை கிடைக்காது என்று கூறியவர் அவர்.''

''அது அந்தக் காலம்! இப்போது அண்ணுவே மாறி விட்டார். நீங்கள் பெரிய தியாகியாம். உங்களால் தம் சொந்தக்காரர்கள் எல்லாருக்குமே பெருமையாம். நீங்கள் வந்தால் மறு நாளே உங்களுக்கு அவருடைய கம்பெனியில் ஒரு பொறுப்புள்ள வேலை கிடைக்கும்.''

முருகையனுக்கே இதை யெல்லாம் கேட்பதற்கு உற்சாகமாக இருந்தது. கால மாறுதல்களுக்கு ஏற்ப மனிதர்களுடைய எண்ணங்களும் மாறுவதைக் கண்டு அவன் மகிழ்ச்சி கொண்டான். அப்படியானால் சித்திராவின் வீட்டில் தங்குவது நல்ல வாய்ப்புத்தான் என்று அவனுக்குத் தோன்றியது.

''இப்போதே புறப்படுகிறீர்களா?'' என்று அவசரப்படுத்தினாள் சித்திரா.

''புறப்பட வேண்டும் என்று ஆவல் தான். ஆனால் இன்னும் மூன்றே மூன்று நாட்களுக்குப் பொறுத்துக் கொள்... அதற்குள் பழைய விஷயங்களை யெல்லாம் ஒரு வழியாக முடித்துக்கொண்டு வருகிறேன்.''

மூன்று நாட்கள் என்பது மிக நீண்ட காலம் போல் சித்திராவுக்குத் தோன்றினாலும், அவன் வருவதாக வாக்களித்தது அவளுக்கு எல்லையற்ற ஆனந்தத்தைக் கொடுத்தது.

''ஆமாம், வீட்டுக்கு வந்தபிறகு உங்களுக்கு வேறு எந்த ரகசிய வேலைகளும் இருக்காதே? திடீர் திடீரென்று தலைமறைவாய்ப் போய் விட மாட்டீர்களே?'' என்று கேட்டாள்.

''நாடு சுதந்திரம் பெற்று விட்டது, சித்திரா! ரகசியமான வேலைகளுக்கும் தலைமறைவான வேலைகளுக்கும் இனி அவசியமே கிடையாது. அந்த வேலைகளைச் செய்யத் துணியும் சமுதாய விரோதிகளைப் பகிரங்கப் படுத்தினால் இனி நாடு உருப்பட்டு விடும்.''

''உங்களை மூன்று நாட்கள் கழித்து எங்கே சந்திப்பது?''

''இதே இடத்தில் மாலை நேரத்தில்.''

''உண்மைதானே?''

''ஏன் உனக்குச் சந்தேகம் வந்து விட்டது?''

''உங்களை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை அத்தான்! பெரிய பாளையத்தில் தோட்டத்துக் கிணற்றில் திடீரென்று ஒருநாள் குதித்து என்னை அழ வைத்தீர்கள். பிறகு மரத்தில் ஏறி என்னைத் திகைக்க வைத்தீர்கள். பிறகு போலீஸ்காரர்களிடம் விலங்கு மாட்டிக் கொண்டு சிறைக்குப் போனீர்கள். பட்டணத்துக்கு வந்து கடற்கரையில் கடலை விற்றது போதாதென்று, ரிக்ஷா இழுக்கவும் ஆரம்பித்து விட்டீர்கள்!''

''இதெல்லாம் சேர்ந்து உனக்கு வெறுப்பைத் தரவில்லையா?''

''வெறுத்துத்தான் பார்க்கிறேன்; முடியவில்லை!'' என்றாள் சித்திரா. ''அதிலும் உங்களை ரிக்ஷாவுடன் கண்டபோது, பேசாமல் வீட்டுக்குத் திரும்பிப் போய் விடலாமா என்று கூட நினைத்தேன். இனிமேல் சந்திப்பதையே நிறுத்தி விட வேண்டும் என்றும் தோன்றியது. ஆனால் மனம் கேட்க

வில்லே. — ஆத்திரமும் அழுகையுமாய் ரிக்ஷாவில் ஏறி உட்கார்ந்தேன்.''

இதைச் சொல்லும் போதே அவள் மறுபடியும் அழத் தொடங்கி விட்டாள். முருகையன் அவள் அழுகையை மாற்றுவதற்காகச் சிரித்தான். ''இப்போது ரிக்ஷாவில் வருகிறீயா? உன்னை வீட்டில் கொண்டு போய் விடுகிறேன்!''

''இனிமேல் உங்களுடன் பேசவே மாட்டேன்'' என்றாள் சித்திரா. ஆனால் மனமனவென்று பேசி விட்டு, நாழிகை யாகிறதென்று வீட்டுக்குக் கிளம்பினாள்.

''கூலியைக் கொடுத்துவிட்டுப்போ!''

''வீட்டுக்கு வாருங்கள்; நீங்கள் எவ்வளவு கேட்டாலும் தருகிறேன்.''

''இப்போது நீ ஒரு ரூபாய் கொடுத்தால் போதும்.''

தன்னுடைய அழகுப் பையைத் திறந்து ஒரு ரூபாய் நோட்டை எடுத்து நீட்டினாள் சித்திரா. அதை வாங்கிக் கொண்டான் முருகையன். வியப்போடு அவளைச் சிறிது நேரம் பார்த்து விட்டு, வேகமாய்ச் சென்று கொண்டிருந்த ஒரு டாக்ஸியை நிறுத்தி, அதில் ஏறிக் கொண்டாள். ரிக்ஷா தளர் நடையோடு குடிசைப் பக்கம் திரும்பியது.

முனியாண்டியின் வீட்டுக்கெதிரில் யாரோ இருவர் நின்று முனியாண்டியின் மனைவி வீரம்மாளிடம் சத்தம் போட்டுப் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டான் முருகையன். ஒருவன் அவன் எந்த வீட்டில் வேலை பார்த்தானோ அந்த வீட்டின் வேலையாள். அன்றைக்கு வீட்டு வேலைக்கு வராதது பற்றி, வீட்டுக்கார அம்மாளுக்குக் கோபம் என்பதை அவன் கோபமாய்க் கூறினான். மற்றொருவன் அதேபோல் முனியாண்டியின் வாடிக்கைக்காரரின் வேலையாள்; அந்த வீட்டுக் குழந்தைகளைப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துச் செல்வது முனியாண்டியின் வாடிக்கையாம்.. அடுத்த நாளும் வரா விட்டால் வேறு ரிக்ஷாக்காரனைப் பார்த்துக் கொள்வதாகப் பயமுறுத்தினான். முனியாண்டி ஆஸ்பத்திரியில் கிடந்தது பற்றி அவர்கள் கவலைப் பட்டதாகவே தெரியவில்லை.

''ரெண்டு நாளைக்குக் குழந்தைகளை எப்படியாவது பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி வையுங்கையா! அவர் சீக்கிரம் திரும்பி வந்து விடுவார்'' என்றாள் வீரம்மாள்.

ரிக்ஷாக்காரர்களுக்கு வாடிக்கைக்காரர்கள் உண்டு என்பதையும், அவர்களுக்குள் போட்டி உண்டு என்பதையும் அப்போதுதான் தெரிந்து கொண்டான் முருகையன். ஒருவன் வாடிக்கையைத் தவற விட்டால், அதில் மற்றொருவன் போட்டிக்கு வந்து விடுவானாம். சென்னை நகரமே போட்டி மிகுந்த ஒரு போர்க்களம் போலும்!

அந்த வாடிக்கை வீட்டின் இருப்பிடத்தைத் தெரிந்து கொண்டு, ''சரி, நாளைக்கு ரிக்ஷா அங்கே வரும்; நீங்கள் போங்கள்!'' என்றான் முருகையன்.

வீரம்மாளுக்கு அப்போதுதான் அவன் மாலையில் கொடுத்த பணம் எப்படி வந்திருக்கும் என்பது தெரிந்தது. ''சாமி! நீங்க செய்யறது உங்களுக்கே நல்லாயிருக்கா?'' என்று கோபத்துடன் கேட்டாள் அவள்.

''உன்னோட அடுப்பிலே அரிசி கொதிக்க வேண்ணு, உன் குழந்தைகளோட வயிறு கொதிக்குமே, அது நல்லதுதானு?'' என்று திருப்பிக் கேட்டான் முருகையன்.

நாலு குழந்தைகளைத் தன் அடிவயிற்றில் சுமந்து பெற்ற தாய், தன் குழந்தைகளின் வயிறுகளை நினைத்தவுடன் வாயடைத்துப் போய் நின்றாள்;

## அத்தியாயம் எட்டு

# வழி அனுப்பினர்!

பெரியபாளையத்திலிருந்து கொண்டு பெரிய பெரிய மனக்கோட்டைகளைக் கட்டிக் கொண்டிருந்த சிவப்பிரகாசத்துக்குச் சில நாட்களாக முருகையனிடமிருந்து கடிதம் வரவில்லை; பணமும் வரவில்லை. தினந்தோறும் தபால்காரரைப் பார்த்துப் பார்த்து அவர் ஏமாந்தார். பிறகு ஒருநாள் பணம் மட்டிலும் வந்தது. அது யாரோ சாந்தா என்ற ஒரு பெண் பிள்ளை அனுப்பி யிருப்பதாகத் தபால்காரர் தெரிவித்தார். முருகையனுக்கு உடம்பு நலமில்லாமல் இருந்து, இப்போது தேவலாம் என்று மட்டும் அதில் குறிப்பிட்டிருந்ததாம்.

'யார். இந்தப் பெண்? முருகையன் இருக்கும் அதே விலாசத்தில் இவள் ஏன் இருக்கிறாள்? முருகையனுக்கு உடம்புக்கு என்ன வந்தது?'

பணத்தைக் கையில் வாங்கிக் கொண்டு எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணி விட்டார் சிவப்பிரகாசம். பிறகு உடனே முருகையனுக்கு ஒரு கடிதம் எழுதிப் போட்டார்; பதில்



**பெரியவர்:** இவன்தான் என் மூத்த மகன் 'கட' வித்வானாகப் பழக்கி விட்டேன்!

**மற்றவர்:** பேஷ்! எப்படியோ வயிற்றை வளர்த்தால் சரி!

வரவில்லை. மறு கடிதமும் எழுதி விட்டு, பதிலை எதிர்பார்த்துத் தினந் தோறும் தபாலாபீசுக்கே போய்க் காத்துக் கொண்டு நின்றார்.

நாட்கள் சென்றன. சிவப்பிரகாசத்துக்குப் பசியும் மறைந்தது; நடக்கவும் முடியவில்லை. இருமல், இருமல், ஓயாத இருமல்.

இந்த நிலையில்தான் ஒருநாள் குமரவேல் சிவப்பிரகாசத்தைத் தேடிக் கொண்டு அவர் வீட்டுக்கு வந்து சேர்ந்தார். "தம்பி! உடம்புக்கு என்ன தம்பி? எனக்குச் சொல்லியனுப்பியிருக்கக் கூடாதா?" என்று பதறினார் - பதறியது போல் காட்டிக் கொண்டார்.

சிவப்பிரகாசத்துக்குச் சூதுவாது என்பதே தெரியாது. 'தாம் ஆடாவிட்டாலும் தம் சரீரம் ஆடும் என்று சொல்வார்களே, அதுதான் நடக்கிறது!' என்று அவர் நினைத்துக் கொண்டார்.

"வாங்கண்ணே! என்ன சமாசாரம்?"

"நீ நம்மோட பழைய உறவையும் மறந்திட்டே, சிநேகத்தையும் மறந்திட்டே! கடைப் பக்கம் எட்டிப் பார்க்கிறதே இல்லே." - இப்படித் தொடங்கி, அன்பும் அநுதாபமும் பொங்கப் பொங்கப் பேசிக்கொண்டு போனார் குமரவேல்.

உறவு, நட்பு, பந்தபாசம் இவற்றையெல்லாம் குறிப்பிட்டு, குமரவேல் முதலைக் கண்ணீர் வடிப்பதைக் கண்டு சிவப்பிரகாசம் உண்மையாகவே இளகிப் போனார். வெகுளியிலும் வெகுளியான அவர், 'பொய்க் கணக்கு எழுதிச் சொத்துக்களைப் பறித்துக் கொண்ட அதே மனிதன்தானே இவன்?' என்று நினைத்துப் பார்க்கவில்லை. தம்மை நடுத் தெருவில் நிறுத்தி விட்டு, தம் மகனையும் ஊரை விட்டு விரட்டிய பாவி அவர் என்பதையும் மறந்து விட்டார்.

"ஏன் தம்பி, இப்போ நீ கடைப்பக்கம் எட்டிப் பார்க்கிறதில்லே?" என்று கேட்டார் குமரவேல்.

"கடன் கேட்கிறதுக்கு வர்றதா நீங்க நினைச்சுக்கிட்டா என்ன செய்யறது? எங்கிட்டே எழுதிக் கொடுக்கிறதுக்கு வீடு வாசல் ஒண்ணும் இனிமேல் கிடையாது. அங்கே வந்தால் பழைய ஞாபகம் எல்லாம் வந்து தொலைக்கும். பழைய மரியாதையும் எனக்குக் கிடைக்காது. அதனாலேதான் வீட்டோட கிடக்கிறேன்" என்று மனத்தில் இருந்ததை வெளிப்படையாகக் கூறினார் சிவப்பிரகாசம்.

"நடந்ததையெல்லாம் மறந்திடு. தம்பி! முன்னைப் போல நம்ப ஒட்டி உறவாடிப் பழகினால்தான் இந்த ஊருக்குள்ளே நம்பளுக்குப் பெருமையாயிருக்கும். இதைப் பத்திப் பேசி, உனக்கும் முருகையனுக்கும் ஏதாவது உதவி செய்யலாம்னுதான் இங்கே வந்தேன்."

நம்பிக்கையில்லாமல் பரிதாபமாகக் குமரவேலின் முகத்தைப் பார்த்தார் சிவப்பிரகாசம். தொடர்ந்தாற்போல் இருமல்கள் வெளிப்பட்டு அவரை மூச்சுத் திணறச் செய்தன. 'இனிமேல் செய்வதற்கு என்ன உதவி இருக்கிறது?' என்று கண்களால் கேட்டார்.

"முன்னாலே ஒரு தரம் வந்து முருகையனுக்கு வேலை தேடிக் கொடுக்கச் சொன்னியே, அப்போ என்னாலே கொடுக்க முடியலே. இப்போ எனக்கே ஒருஆள் தேவையாயிருக்கிறது. வியாபாரத்தைப் பெருக்கணும்னு இங்கிலிசிலே

கடுதாசி எழுதணும். நாலு பேரைப் போய்ப் பார்த்து இங்கிலீசிலே பேசி, நம்ப காரியத்தைச் சாதகமா முடிச்சிக்கிட்டு வரணும். சொந்தக்காரப் பிள்ளையா இருக்கானேன்னு பார்த்தேன்.''

தம் மகன் செல்வரத்தினம் பெரிய உத்தியோகத்தில் இருப்பதனால் அவனை விட்டுவிட்டுத் தாம் முருகையனை விரும்புவதாய்த் தெரிவித்தார் குமரவேல்.

சிவப்பிரகாசம் யோசனை செய்தார். குமரவேலிடம் முருகையன் வேலை பார்ப்பதில் அவருக்கு அவ்வளவாகப் பிரியம் இல்லை. ஆனால், அதே சமயம் அவன் சென்னையில் இருந்து கொண்டு, வேறு ஒரு பெண்ணின் மூலமாகப் பணம் அனுப்பியதும் பிடிக்கவில்லை.

''தம்பி! யோசனை பண்ணாதே! அவன் பட்டணத்திலே வாங்குகிற சம்பளத்தை விட நானே அவனுக்குப் பத்து இருபது அதிகமாய்க் கொடுக்கிறேன். அவன் உன்னை இங்கே விட்டு விட்டுப் பட்டணத்திலே இருக்கிறதைவிட, உன் பக்கத்திலேயே இருப்பது நல்லதுதானே?''

கரையாய்க் கரைத்துச் சிவப்பிரகாசத்தைக் கடைசியில் தம்முடைய விருப்பத்துக்குத் திருப்பி விட்டார் குமரவேல். அத்துடன் நிற்காமல், ''நாளைக்கே பட்டணத்துக்குப் புறப்பட்டுப் போய், அவனை இங்கே கூட்டிக் கொண்டு வா. நான் அவனிடம் நேரில் பேசி அவனைச் சம்மதிக்க வைக்கிறேன்'' என்றும் கூறினார்.

தம்முடைய உடல் நிலை பட்டணத்துக்குப் புறப்படுவதற்கு இடம் கொடுக்காமலிருந்தும், மகனை உடனே பார்ப்பதற்கு ஏற்பட்ட வாய்ப்பு சிவப்பிரகாசத்தின் சிந்தையை மயக்கியது. விலாசம் இருப்பதால் எப்படியும் அவனைச் சிரமமில்லாமல் சந்தித்துவிடலாம் என்று உற்சாகமூட்டினார் குமரவேல். ரயில் செலவுக்குப் பணத்தையும் கையில் கொடுத்தார். தாமே மாட்டு வண்டியில் அவரோடு ரயிலடிக்கு வந்து அவரை ஏற்றி விடுவதாகவும் வாக்களித்தார். சிவப்பிரகாசத்துக்குத் திடீரென்று தங்களுக்கு நல்ல காலம் பிறந்து விட்டதாய்த் தோன்றியது.

மறு நாள் காலையில் குமரவேலிடம் சென்னை நகரத்தைப் பற்றி விவரத்தைக் கேட்டுக் கொண்டு, தம்முடைய உடல் நிலை பற்றியும் கவலைப்படாமல் ரயிலில் ஏறி உட்கார்ந்தார் சிவப்பிரகாசம். மகனைப் பார்க்கப் போகும் ஆவல் அவரிடம் ஆவேசமாய்க் குடிகொண்டிருந்தது. இந்த மகன் படித்து முன்னுக்கு வர வேண்டும் என்பதற்காகத்தானே அவர் வீட்டை வைத்து, தோட்டத்தை வைத்துப் பணம் வாங்கினார்? கடைசியில் அந்த இங்கிலீஷ் படிப்பு வீண்போகவில்லை. அந்தப் படிப்புக்காகக் குமரவேலே வந்து வேலை கொடுப்பதென்றால் அதற்குத்தான் எத்தனை மகத்துவம்!

ரயிலில் ஓர் இளைஞன் அழகாகத் தலை வாரி விட்டுக் கொண்டு நறுக்கு மீசையும் கழுத்துப் பட்டியும் கோட்டு சூட்டுமாகக் காட்சியளித்தான். முருகையனும் பட்டணத்தில் அதே கோலத்தில்தான் உத்தியோகத்துக்குப் போய் வருவான் என்று நம்பினார் சிவப்பிரகாசம். குமரவேலிடம் வேலைக்கு வந்தாலும் அந்த மாதிரி உடையில்தான் அவன் வேலைக்குப் போக வேண்டுமென்று விரும்பினார் சிவப்பிரகாசம்.

'ஒரு வேளை, அவன் அந்த வேலையை விட்டு வரச் சம்மதிக்காவிட்டால்....?





சம்மதிக்காவிட்டாலும் போகிறது! அவனோடு ஒரு வாரம் தங்கியிருந்து, பட்டணத்துத் தங்கச்சியையும் பார்த்துவிட்டு வரலாமல்லவா? சாந்தா என்கிற பெண்ணைப் பற்றி விசாரித்து விட்டு, அவனைச் சித்திராவிடம் பழகச் சொல்ல வேண்டும்.'

சிவப்பிரகாசத்துக்கு அந்த ரயில் பிரயாணம் மிக மிக மகிழ்ச்சி நிறைந்ததாக இருந்தது. கடவுளைக் காணச் செல்லும் பக்தனின் மனத் துடிப்பும், காதலியைக் காணச் செல்லும் இளைஞனின் மனத் துடிப்பும், மகனைக் காணச் சென்ற இந்தத் தந்தையின் மனத்துடிப்புக்கு ஈடாகுமோ, என்னவோ! அவருடைய ஒரே நம்பிக்கை, ஒரே இன்பம், ஒரே பற்றுக்கோல் அவன்தானே?— அவனை நினைக்க நினைக்க அவருடைய இதயத்தின் இரத்த ஓட்டம் அதிகமாகியது. இருமல்களும் அதிகரித்தன.

ஓடிய ரயில் பறக்கும் விமானமாக மாறி அவனுக்கு முன்னால் போய் வட்டமிட்டு இறங்கக் கூடாதா? 'முருகையா, முருகையா, முருகையா! நீ எப்படியாவது நன்றாக இருக்க வேண்டுமடா, மகனே! நீ நன்றாக இருந்து நான் அதைக் கண்களால் கண்டு விட்டால், அதே வினாடி நான் கண்களை மூடி விடுவேன், மகனே!'

அவருடைய உயிரின் உயிரை, இரத்தத்தின் இரத்தத்தை, பிறவியின் மறு பிறவியைப் பாச வெறியோடு பார்ப்பதற்கு அவர் சென்று கொண்டிருந்தார். ''பட்டணம் எப்போது வரும்?'' என்று அவர் நொடிக்கு நூறு முறை கேட்டுக் கொண்டார்.

விளக்கு வைக்கும் நேரத்தில் எழும்பூர் ரயிலடிக்கு வந்து ரயில் நின்றது. இரண்டு மணி நேரத்துக்கு மேல் அனைறக்கு வழியில் ஏதோ தாமதமாம். கையில் சிறு துணி மூட்டையைத் தவிர அவரிடம் வேறொன்றுமில்லை. கூட்ட நெருக்கடியில் அகப்படாமல் நிதானமாக விலகிக் கொண்டு எப்படியோ ரயிலடிக்கு வெளியில் வந்து சேர்ந்தார். ரயிலில் வந்து கொண்டிருக்கும்போதே திருவல்லிக்கேணிக்கு எப்படிப் போய்ச் சேருவது என்ற விவரத்தை மற்றப் பிரயாணிகளிடம் கேட்டுத் தெரிந்து கொண்டார் சிவப்பிரகாசம். மோட்டாரிலோ வாடகைக் காரிலோ போவதை விட, அவர் ரிக்ஷாவில் போவதே மேல் என்று அவர்கள் கூறினார்கள். மனிதன் மீது சவாரி செய்வது அவருக்குப் பிடிக்க வில்லை யென்றாலும், தெருவையும் வீட்டையும் கண்டு பிடிப்பதற்கு அதுவே நல்ல வழி என்று மற்றவர்கள் வற்புறுத்தியதால் அவரும் ஒப்புக் கொண்டார்.

நான்கைந்து ரிக்ஷாக்கள் அவரை நோக்கி விரைந்தன. இருட்டில் உருவங்கள் தெரிந்தனவே தவிர முகங்கள் தெரியவில்லை. ஒருவன் குனிந்த தலை நிமிராமலே முன்னால் ஓடி வந்து ரிக்ஷாவை அவர் எதிரில் வைத்தான். மூட்டையைப் பிடுங்கி உள்ளே போட்டான். ''எங்கே போகணும் சாமி?'' என்று கரகரப்பான குரலில் கேட்டான்.

''திருவல்லிக்கேணிக்கு என்ன கேக்கிறே...?'' என்றார் அவர்.

''நீங்க கொடுக்கிறதைக் கொடுங்க, சாமி!''

அவர் எதைக் கொடுக்க வந்திருக்கிறார் என்று தெரியாமல், வேகமாக அவரை இழுத்துக் கொண்டு ஓடினான் ரிக்ஷாக்காரன். (தொடரும்)



# மிகச்சிறந்தது!




## ப்ரூக் பாண்ட்

## ஸ்பெஷல் ஹோட்டல் ப்ளெண்ட்

டஸ்ட் தேயிலையே

மூன்று அளவுகளில் கிடைக்கிறது
500 கிராம், 100 கிராம்,
50 கிராம்

# திருமூலர் தவமொழி

ராஜாஜி சோமு

## 39

நடராஜப் பெருமான் தன்னை ஆட்கொண்ட தன்மையைப் பாடுகிறார் திருமூலர்.

**அடங்காத என்னை**
**அடக்கி அடிவைத்து**

[அடங்காத என்னை அடக்கி—உள்ளத்தின் வேட்கைகளும், ஐம்புலன்களின் சேஷ்டைகளும் அடங்காமல் அலைகிற என்னை அடங்கி நிற்குமாறு செய்து. அடிவைத்து—குருவாக எழுந்தருளித் தனது திருவடியை என் தலையிலே வைத்து ஆட்கொண்டு.]

**இடம்கான் பரானந்தத்**
**தேனென்னை இட்டு**

[இடம் கான்-எங்கே ஆட்கொள்ளலாம் என்று எப்போதும் மனித உள்ளத்திலே இடம் தேடிக் கொண்டே நிற்கும். பரானந்தத்தே — இறைவனுடைய பரவசப் பேரின்பத்திலே. என்னை இட்டு—என்னைத் திளைக்க வைத்து.]

**நடந்தான் செயும்நந்தி**
**நன்ஞானக் கூத்தன்**

[நடம்தான் செயும்—நடனமாடுகிற. நந்தி நன்ஞானக் கூத்தன்—நந்தி பெருமானாகிய ஞான நடராஜமூர்த்தி. பரிபூரண ஞானத்தை நடன உருவத்தில் காட்டும் மூர்த்தி.]

**படந்தான்செய்து உள்ளுட்**
**படிந்திருந் தானே**

[படம்தான் செய்து — சித்திரம் போலச் சித்தமானது அசைவற்று நிற்கும் வண்ணம், நிஷ்டை சித்திக்கும்படி செய்து. உள்ளுட் படிந்திருந்தானே—என் உள்ளத்தில் வந்து அமர்ந்தான்.]

புலன்கள் அடங்கும்வண்ணம் என் சிரசின்மேல் திருவடி வைத்து ஆட்கொண்டு அருளினான். அதாவது ஆசைகள் எல்லாம் அடங்கும்படியாகத் தனது கருணையை ஐம்புலன்களிலும் வியாபிக்கச் செய்து, அவற்றிலே நின்று பேரின்ப நடனம் புரிந்து, உள்ளக் கோயிலிலே நிறைந்தமர்ந்தான்.

**அடங்காத என்னை**
**அடக்கி அடிவைத்து**
**இடங்கான் பரானந்தத்**
**தேனென்னை இட்டு**
**நடந்தான் செயும்நந்தி**
**நன்ஞானக் கூத்தன்**
**படந்தான் செய்துள்ளுட்**
**படிந்திருந் தானே**

மேலும் பாடுகிறார் திருமூலர், தாம் இறைவனுக்கு ஆட்பட்ட அனுபவத்தை.

**கரியட்ட கையன்**
**கபாலம்கை ஏந்தி;**
**எரியும் இளம்பிறை**
**சூடும்எம் மானை**

[கரி—யானை. அட்ட—வீழ்த்திய. கரியட்ட கையன்—யானைத் தோலை உரித்த கைகளையுடைய சிவபெருமான். கபாலம் கை ஏந்தி—மண்டையோட்டைக் கையிலே தாங்கியவன். ஏந்தி—ஏந்தியவன். எரியும் இளம்பிறை—சுடர் விடுகின்ற இளம்பிறைச் சந்திரனை. சூடும் எம்மானை—தலையிலே சூடிய எம்பெருமானை.]

**எரியும் இளம்பிறை**
**சூடும்எம் மானை**
**அரியன் பெரியன்என்று**
**ஆட்பட்டது அல்லால்**
**கரியன்கொல் சேயன்கொல்**
**காண்கின்றி லேனே**

[அரியன் பெரியன் என்று—அருமையானவன், பெருமை நிரம்பியவன் என்று. ஆட்பட்டதல்லால் — அவனுக்கு அடிமைப் பட்டேனேயல்லாமல். கரியன் கொல்—அவன் கரிய நிறத்தவனோ. சேயன் கொல்—சிவப்பானவனோ. காண்கின்றிலேனே — நான் கண்டதில்லை.]

மதம் கொண்ட யானையை வதைத்துத் தோல் உரித்தவன், அதாவது

நம் ஆசைகளை முற்றும் சிதைத்தவன் மண்டையோடு கையில் ஏந்தியவன், அதாவது தாழ்ந்த நிலைக்குள் இருந்த தாழ்ந்த நிலையைத் தனக்கு என்று எடுத்துக் கொண்டு கருணை காட்டுகிறவன்; இளம்பிறை சூடியவன் ஆகிய எம்பெருமானை, அரியவன் என்றும் பெரியவன் என்றும் உள்ளத்தில் பற்றிக் கொண்டதேயல்லாமல், அவன் கறுப்பா சிவப்பா என்று கண்டதில்லை என்கிறார் முனிவர். இறைவன் நிறமும் வடிவமும் கடந்தவன் என்பதையும், காட்சிப் பொருளாக நிற்காமல் உள்ளத்தின் உணர்வு நிலையிலே பற்றி நிற்பவன் என்பதையும் இங்ஙனம் பாடுகிறார். வழிபடுகிறவர்கள் சிவபெருமானுக்கு ஒரு நிறம் தருகிறார்கள். அப்படியே திருமாலுக்கும் அவனை வழிபடுகிறவர்கள் அவனுக்கென்று ஒரு நிறம் தருகிறார்கள். இதையெல்லாம் கடந்து, நிறமும் வடிவமும் ஒழித்த பரிபூரண வழிபாட்டில் உள்ளத்தை நிறுத்தி, எம்பெருமானை நினைவு ஒழிந்த பரவசத்தில் அனுபவித்துப் பாடுகிறார்! முற்றனுபவத்துக்கு இவ்விதப் பரவசம் ஓர் அங்கமாகும்.

> கரியட்ட கையன்:
> கபாலம்கை ஏந்தி:
> எரியும் இளம்பிறை
> சூடும்எம் மானை,
> அரியன் பெரியன்என்று
> ஆட்பட்ட தல்லால்
> கரியன்கொல் சேயன்கொல்
> காண்கின்றி லேனே

பின்னர் தோன்றிய அப்பர் சுவாமிகள் "இப்படியன், இந் நிறத்தன், இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே" என்று பாடிய கருத்தும் இதுவே. காரைக்கால் அம்மையாரும் தமது அற்புதத் திருவந்தாதியில்

> "அன்றுந் திருவுருவம்
> காணாதே ஆட்பட்டேன்
> இன்றுந் திருவுருவம்
> காண்கிலேன்"

என்று பாடியதும் இதுவே.

கருணையை அனுபவிக்கும்போது உருவம் மறந்து போவதே முற்றனுபவத்தின் பண்பு!

# "பணம் சேமிப்பதுபற்றி நீங்கள் சிந்தித்ததுண்டா?"

ஆம்! ஆனால் அந்தப் பொறுப்பெல்லாம் மனைவியோடு"

"இருந்தாலும், பாங்கிலே உங்கள் பங்குக்காகவும் சேமிப்பு இருக்கவேண்டியது நியாயம் தானே."

"பாங்காவது? பணம் கொட்டியாகிடக்கிறது?"

"5 ரூபாய் இருந்தாலே போதுமய்யா, நேஷனல் அண்ட் க்ரிண்ட்லெய்ஸ் பாங்கிலே ஆரம்பித்துவிடலாம் ஒரு ஸேவிங்ஸ் பாங்க் அக்கவுண்ட்; வருடாவருடம் 3 %வட்டி கிடைக்கிறது."

"அதென்னமோ, பணம் போடுவது, எடுப்பது என்று ஒவ்வொரு தடவையும் காக்க நம்மாலாகாது."

"காப்பானேன்? பத்து நிமிஷ வேலைதானே!"

"செக் புத்தகம் கிடைக்குமோ இல்லையோ?"

"பேஷாக! வாரத்திற்கு இரு முறை. 1000 ரூபாய் அல்லது மொத்த இருப்புத் தொகையில் நான்கிலொரு பங்கு — இவற்றில் எது அதிகமோ அதுவரை எடுக்கலாம்."

"பரவாயில்லையே. மணியான யோசனைதான்."

"மறவாதீர்! நேஷனல் அண்ட் க்ரிண்ட்லெய்ஸ் பாங்கில் போடும் சேமிப்பு, உறுதிப்பாடான சேமிப்பு, உங்கள் வருங்கால வளமைக்கான சேமிப்பு!"

அக்கவுண்ட் ஆரம்பிக்கத்தேவையான நமூனுக்களுக்கு எங்கள் கிளைகளிலொன்றுக்கு எழுதுங்கள். அல்லது அணுகுங்கள்.



# நேஷனல் அண்ட் க்ரிண்ட்லெய்ஸ் பாங்க் லிட்.

இங்கிலாந்தில் இணைப்புப் பெற்றது. உறுப்பினர் பொறுப்பு வரையறுப்புக்கு உட்பட்டது.

சென்னைக் கிளை அலுவலகங்கள்: 3, நார்த் பீச் ரோடு; 378 நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு, (லாயிட்ஸ் கிளை அலுவலகம்) 6, அர்மேனியன் தெரு; 159, மவுண்ட் ரோடு;
தூத்துக்குடி கிளை: 44. பீச் ரோடு.



# பங்காளிகள்

**காந்தன்**

தமிழ்ப் படங்களுக்குப் போவதென்றால் புதுமையான கதையையோ, புதுமையான கருத்தையோ எதிர்பார்த்துப் போவது முற்றிலும் தவறான காரியம். ஜரிஸ் மூவிஸ் தயாரிப்பான ''பங்காளிகள்'' அதற்கு விலக்கல்ல: ஆனாலும் ஒரு புதுமை! எம். ஆர். ராதா பாடுகிறார் ஐயா, பாடுகிறார். நல்லகாலமாகச் சொந்தக் குரலில் இல்லை.

திருவாசகம் மாஜி மளிகைக்கடை முதலாளி; கண்ணாயிரம் படித்தவன், ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாக வேலை பார்ப்பவன்; மருதமுத்து தொழிலாளி. இணைபிரியாத நண்பர்களான இம்மூவரும் நெருங்கிய பங்காளிகள். திருவாசகத்துக்குச் செல்வராஜ் என்ற மகனும், கண்ணாயிரத்துக்கு வள்ளி என்ற மகளும், மருதமுத்துவுக்குப் பொன்னையா என்ற ஒரு மகனும், மீனாட்சி, கமலம் என்னும் இரண்டு பெண்களும் இருக்கிறார்கள். லாட்டரியின் மூலம் திருவாசகத்துக்குக் கிடைத்த பரிசுத் தொகையைக் கொண்டு மூவரும் சொந்தமாக ஓர் அலுமினியத் தொழிற்சாலையை நிறுவுகிறார்கள். (திருவாசகம் திருவோடு ஏந்தும்போதும் லாட்டரிப் பரிசினால்தான் வாரி வாங்குகிறாரோ?)

இது வரையில் நன்றாகப் போய்க்கொண்டிருந்த கதைக்குக் கேடு வந்துவிட்டது. இல்லையென்றால் மருதமுத்துவின் மகள் கமலா காணாமற் போக, அவளை நட்டுவனார் நடேச பிள்ளை தன்னுடன் அழைத்துச் செல்ல, மருதமுத்துவின் மைத்துனன் பொன்னையாவைத் தன்னுடன் மலேயாவுக்கு அழைத்துக் கொண்டேக....(நாசமாய்ப் போக என்ன கதையோ!) இப்படியெல்லாம் ஏற்பட்டிருக்குமா?

செல்வராஜாக வருவது யாரென்று சொல்லி விட்டால் அவனது குணநிசயங்களையெல்லாம் நீங்களே ஊகித்துக் கொள்வீர்கள். எம். ஆர். ராதாதான் செல்வராஜ். இதற்கு மேல் படத்தில் என்னென்னவெல்லாமோ வருகின்றன. ராதாவின் கூச்சலும் ஆர்ப்பாட்டமும் படத்தின் பல நூறு அடிகளை விழுங்கி விடுகின்றன. ராதாவுக்காகக் கதையா, கதைக்காக ராதாவா என்று புரியவில்லை.

கட்டிய மனைவியை மாட்டுக் கொட்டகையில் கைக் குழந்தையோடு தவிக்க விடுவதும் மாடியில் மனத்துக்கு இனியவளோடு கொஞ்சுவதும் தமிழ்ப் படங்களுக்குப் புதியவையல்ல. எம். ஆர். ராதாவுக்கும் புதியவையல்ல!

தாலி கட்டிய மனைவியாக வந்து பதியின் அன்பை இழந்து பரிதவிக்கவும், கணவனே கண்கண்ட தெய்வமென மதித்துச் சகித்துக் கொண்டு போவதும் அஞ்சலி தேவிக்குப் புதியவையல்ல.

ஜெமினி கணேசன் பொன்னையாவின் பாகத்தை ஏற்றிருக்கிறார். மண்ணை வாரித் தூற்றினால் துக்கம் வருமா? பிணத்தின் மேல் விழுந்து அழுதால் துக்கம் வருமா? கண்ணில் படுகிறவர்களைக் கட்டிக்கொண்டு கதறினால்தான் துக்கம் வருமா? எந்தச் சந்தர்ப்பத்திலும் ஜெமினி கணேசனின் நடிப்பு சோபிக்கவில்லை. வழக்கமான காதல் காட்சிகளும் அவரைக் கைவிட்டு விட்டன. தாயின் சடலத்துக்குத் தீ வைக்கும்போது அவருடைய கண்ணீரும், கையில் பிடி மண்ணுடன் அவர் செய்த சபதமும் ''வஞ்சிக் கோட்டை வாலிப''னை நினைவு படுத்தித் தொலைக்கின்றனவே!

திருவாசகமாக வரும் எஸ். வி. ரங்கா ராவ் தமது பாகத்தை உணர்ந்து குறை கூற இடமில்லாமல் நடித்திருக்கிறார். பின்னால் ஒரு பரதேசிப் பட்டாளம் தயார் செய்யப் போவதை யொட்டி முன்யோசனையுடன் அலுமினியப் பாத்திரக் கடை ஆரம்பித்த ரங்கா ராவைப் பாராட்டத்தான் வேண்டும்!

இந்தப் படத்தில் நல்ல நடிப்பின் உறைவிடமாக விளங்குபவர் மருதமுத்துவாக நடிக்கும் டி. எஸ். முத்தையா. ஒரு பாட்டாளி மகனின் பரிதவிப்பை அவர் முக பாவங்களிலும், நடிப்பிலும் நன்கு காண முடிகிறது.

நட்டுவனாரின் பாகம் படத்தில் அதிகமாகத் தெரிகிறது. அதை ஏற்றவர் பெரிய நடிகரான டி. எஸ். துரைராஜ் ஆயிற்றே!

ஈ. வி. சரோஜா ஆயா என்ற பெயரில் நர்ஸாக வந்து மீனாவின் குழந்தையைப் பார்த்துக் கொள்ளுவது, கடைசியில் உண்மை தெரிவது ஆகியவை கதையை முடிக்கத் தெரியாமல் ஆசிரியர் தவித்திருக்கும் தவிப்புக்குத்தக்கசான்று.

சின்ன வயதில் காணமற் போன கமலமாக வருகிறார் தேவிகா. கமலம் காணமற் போயிருக்கவும் வேண்டாம்! மறுபடியும் வந்திருக்கவும் வேண்டாம்.

எம். ஆர். ராதா தனது சுகவாழ்வை இழந்து திரிந்து தற்கொலை செய்து கொள்ளுமுன் தான் கெட்டுப் போனதற்குக் கடவுளையே காரணமாக்கி, 'நான் செத்துப் போனால் உனக்குத்தான் கெட்ட பெயர் வரும், பார்த்துக்கோ!' என்று கூறியது நன்றாக இருக்கிறது.

''சின்ன அரும்பு மலரும்'' என்ற ஒரு பாட்டைத் தவிர மற்றப் பாடல்களை யெல்லாம் கேட்டதாகவே எனக்கு நினைவில்லை.

'பங்காளிகள்' படத்தைத் தயாரித்து வெளியிட்டு மாபெரும் குற்றம் செய்த பங்காளிகளுக்குப் பங்காளிக் காய்ச்சல் வந்திருக்கக் கூடாதோ? படம் பாதியிலாவது நின்றிருக்குமே!



நீங்கள் எப்பொழுது ஸ்நானம் செய்தாலும் ஹமாம் சோப்பினாலேயே ஸ்நானம் செய்யுங்கள்

# ஹமாம்

குடும்பத்தில்
ஒவ்வொருவரும்
விரும்பும் சோப்

...அது நீடித்தும் நிற்கிறது !




டாடா தயாரிப்பு

THY-7-TAM

# அன்பே ஆரமுதே

## அத்தியாயம் நாற்பது

"பிள்ளையார் எறும்புக்கும் சித்தெறும்புக்கும் எத்தனை தூரம்? உன்னைப் பார்த்தா சித்தெறும்பு மாதிரியே இல்லையே!" என்று கூறிச் சிரித்தாள் ருக்மிணி.

"உங்களுக்கு இருக்கலாம். ஆனால் சந்திராவுக்கு....?"

"அவளுக்கு மட்டும் எப்படி வேறு மாதிரியாக இருக்கும்?"

"மாமி! உங்களைப் பார்த்தால் எல்லாம் தெரிந்துகொண்டு, வேணுமென்று என் வாயைக் கிண்டுகிற மாதிரி படுகிறது எனக்கு."

"எல்லாம் தெரிந்தாலும் உன் வாயைக் கிண்டினால்தானே முழுக்க முழுக்கத் தெரிந்து கொள்ள முடியும்.... இப்ப நான் தெரிந்து கொண்டதே சரி இல்லை என்று ஆகி விட்டதே. அவள் பிள்ளையார் எறும்பு என்று உன்னைச் சொல்கிறாள். இல்லை, கட்டெறும்பு என்றுதான் அவள் நினைக்கிறதாக நீ சொல்கிறாய்."

"நீங்கள் எல்லாரும் அனந்தசாமி மாமாவுக்கு ரொம்ப வேண்டியவர்கள். அதனால் எல்லாம் உங்களுக்குத் தெரிந்திருக்கும்... சந்திரா எப்படி ஆத்திரப் படாமல் இருப்பாள் என் மேல்...?"

"அப்படியானால் நீயும் அப்படித் தான் அவள் மேல் ஆத்திரமாக இருக்கிறாற் போல் இருக்கிறது!"

"நான் ஏன் 'இருக்கணும்? என் மனசிலே ஏதாவது இருந்தால் தானே கோபம் வர?"

"ரங்கனைக் கண்டால் உனக்குப் பிடிக்கலையா?"

"இப்படித்தான் பிடிக்கணுமா என்ன?" என்றாள் டொக்கி.

"நிச்சயமாகவா சொல்கிறாய்?"

"நிச்சயமாகத்தான். அவராகத்தான் என்னோடு பழக வந்தார். டான்ஸ் வாத்தியார் வீட்டுக்கு வருவார். அவராகத்தான் பேச்சுக் கொடுத்தார். ஒரு நாளைக்கு வீட்டுக்குக் கொண்டு விடுகிறேன் என்று காரில் என்னையும் அப்பாவையும் கொண்டு வந்து விட்டார். அப்புறம் வந்து கொண்டேயிருக்கிறார். அங்கேயும் இங்கேயும் அழைத்துப் போகிறார். ரொம்ப ரொம்ப யோக்கியர் என்றுதான் நினைத்துக் கொண்டிருந்தேன். அன்றைக்குச் சந்திரா வந்து விட்டுப் போனதும் அனந்தசாமி மாமா எல்லாம் சொன்னார். அப்போதுதான் தெரிந்தது. சந்திராவும் நானும் இருக்கிற பொழுதுதானே வந்தார் அந்த ரங்கன்? சடக்கென்று பேயறைந்தாற் போல் அப்படியே விக்கித்துப் போய் நின்றார்.—நிஜ கௌதமர் உள்ளே வந்ததைப் பார்த்து, 'பெப்பே' என்று வாய் குழற, கால் கை எல்லாம் இற்றுப் போய் நின்றானே சூராதி சூரன் இந்திரன்—அந்த மாதிரி. அடுத்த கணமே இதோ, இதோ வரேன் என்று வெலவெலத்துக் கொண்டே ஓடி விட்டார்."

ருக்மிணி அதைக் கேட்டுக் குலுங்கி வந்த சிரிப்பை அடக்க முடியாமல் சற்றுச் சிரித்துவிட்டு அடக்கிக் கொண்டாள்.

"நீங்கள் சிரிக்கிறீர்கள்? சந்திராவை நினைத்தால் எனக்கு அழுகையாக வருகிறது! இவளைவிட ஜெத்தியாக யாரா



வது கிடைத்து விடப் போகிறுளோ இந்தத் தடியருக்கு!''

''தடியரா? இன்னுமா ரங்கனிடம் இவ்வளவு மரியாதை உனக்கு?''

''சந்திராவுக்காகத்தான்.''

''சந்திராவுக்கு மட்டும் இந்த நல்லவர் தேவலேயா?''

''சந்திரா படித்தவள். இவர்கிட்டே ஏதோ நல்லதைக் கண்டுதானே ஆசைப் பட்டிருக்கிறுர்? சில விஷயங்களில் அவர் நல்லவர்தான். என்னைத் தனியாக எங் கெங்கெல்லாமோ அழைத்துக் கொண்டு போயிருக்கிறுர். அப்போதெல்லாம் ஜாக்கிரதையாகத்தான் நடந்து கொண்டிருக்கிறுர்.''

''நல்லவர் என்கிறுய். அயோக்கியர் என்கிறுய் — ஒன்றுமே புரியவில்லேயே எனக்கு!''

''ஆமாம், மாமி! அப்படித்தான் இருக்கிறுர் அவர்.''

''எப்படி நல்லவர் என்கிறுய்?''

''நல்ல மனசு—யாருக்கு உதவி செய்ய வேண்டுமானுலும் சளேக்க மாட்டார். ஓடி ஓடிக் கௌரவம் நாகுக்கு எல்லாம் பார்க்காமல் செய்வார். நல்ல பாட்டு, நல்ல புத்தகம் எல்லாம் பிடிக்கும்.''

''அப்புறம்?''

''சில சமயம் வாயைத் திறந்து பேசினுல் ஏதோ பழ நெடி அடிக்கும். அப்போதெல்லாம் எனக்கு ஐயோ என் றிருக்கும். ஓரே பின்னே. ஏகப்பட்ட காசு. பாவம்!''

ருக்மிணி ஒன்றும் புரியாமல் குழம் பினுள். சற்றுப் பேசாமல் இருந் தார்கள் இருவரும்.

''சந்திரா எல்லாம் சொல்லி யிருப் பாளே உங்களுக்கு. என் மேல் கோபம் இல்லாமல் எப்படி இருக்கும்?''

''அவள் உன்னைத் தப்பாக நினைத் துக் கொண்டிருப்பாள் என்று எண்ணு கிருயா...?''

''இல்லே.. ...'' என்று டொக்கி இழுக்கும் பொழுது, ''குழந்தை'' — என்று நடையில் குரல் கேட்டது.

''யாரு?''

''குழந்தே!''

''அப்பா வந்து விட்டார். நான் வருகிறேன்.''

''உள்ளே வரட்டும் அவர்'' என்று ருக்மிணி எழுந்து போய் அவரை வர வேற்ருள்.

கல்லூரி ஆசிரியை என்றும் குடிதான் இருக்கிறுள் என்றும் அறிமுகப்படுத்தி வைத்தாள் டொக்கி சிரமமில்லாமல்.

''ரொம்ப சந்தோஷம்'' என்று அவர் புன்னகை பூத்தார். ''ஸ்வாமி கேட்டார் எங்கே என்று.''

''இதோ வருகிறேன்'' என்று எழுந்து போனுள் டொக்கி.

''யாருடி, பொண்ணு, இது? படு சமர்த்தாயிருக்கும் போல் இருக்கே''— என்று கழுவிய பாத்திரங்களைச் சமைய லறை அலமாரியில் கவிழ்த்துக் கொண் டிருந்த அலயாம்பாள், ஓர் ஈரப் போணி யைத் துணியால் துடைத்துக்கொண்டே வந்து கேட்டாள்.

''வைத்தியம் செய்து கொள்கிறு ளாம் அவள் அம்மா இவரிடம்.''

''படிக்கிறதாமா?''

''முடிந்து விட்டதாம், சினிமாவில் சேரப் போகிறதாம்.''

''ம்ஹூம்! அழகாக இருக்கோல் லியோ! அதான். அழகோடவா? ஓடற பாம்புக்குக் கால் எண்ணும் போல் இருக்கு. நீயானு அதுக்கு நேரே இந்த மிச்சத்தைத் தின்னு என்னே ஒரு கலக்குக் கலக்கினே பாரு. ரொம்பச் சமர்த்தா!''

ருக்மிணி சிறிது நேரம் பதில் சொல்ல வில்லே. சற்று வெட்கமாகக் கூட இருந் தது அவளுக்கு.

பேசாமல் படிக்கும் அறையில் கட்டில் மீது காலேப் போட்டு நாற்காலி யில் சாய்ந்தாற் போல் உட்கார்ந்தாள். இலேசாகத் தவழும் காற்றில் ஜன்னல் திரை சிலிர்த்தது. திரைக்கப்பால் ஜன்ன லின் பாதி உயரத்துக்கு வளர்ந்திருந்த ரோஜாச் செடி பச்சைக் குழந்தை கையை வெட்டி வெட்டி ஆட்டுவது போல் அசைந்து கொண்டிருந்தது.

அவள் சிந்தனைகூடப் பிரமிப்பிலும் வியப்பிலும் தடைப்பட்டு ஓய்ந்து கிடந்தது. போன மாதம் டில்லியில்! இப்போது இங்கே! எதற்காக?

நிறைவுக்கு நடுவில் ஓர் அச்சமும் உள்ளத்தில் தளிர் போல் சிலிர்த்தது: ஒன்றும் நிறைவேருத சந்திராவுக்கு முன் இந்தக் குழந்தை டொக்கிக்குமுன் இந்தச் சித்திக்கு முன் நாம் எப்படி இவ்வளவு துணிச்சலாக இங்கே வந்தோம்?....

ஆனுல் அந்த அச்சத்தையும் மிஞ்சிக் கொண்டு ஓர் உறுதி அவள் மனத்தில் காலே ஊன்றிக் கொண்டு நின்றதையும் அவள் அனுபவித்துக் கொண்டிருந்தாள். இது இப்படியே நீடிக்கப் போகிறது. வரவேண்டிய இடத்துக்குக் கடைசியாக வந்து சேர்ந்து விட்டோம் என்ற அந்த உறுதியின் இனிய சுமையைப் புற உணர் வாகக் கூட உணர்வது போல் இருந்தது அவளுக்கு. 'வந்து விட்டேன் வந்து விட்டேன்' என்று உள்ளே முணுமுணுப் புக் கேட்டுக் கொண்டேயிருந்தது.

திரைக்கப்பால் ரோஜாச் செடி தலே யாட்டிக் கொண்டிருந்தது.

அனந்தசாமி இருந்த இடத்தில் நுழைந்து கொண்டே, ''கூப்பிட்டீர்களா?'' என்று கேட்டாள் டொக்கி.

''இல்லையே!''

''அப்பா சொன்னாரே.''

''கீழே போனவளைக் காணவே இல்லையே என்று சொன்னேன். உடனே கீழே போய் விட்டார். வேண்டாம் என்று சொன்னேன் —''

''காதில் விழாமல் வந்து விட்டார்'' என்றாள் டொக்கி.

''பேசிக் கொண்டிருந்தாயோ?''

''பதில் சொல்லிக் கொண்டிருந்தேன்....''

''யாருக்கு?''

''வாத்தியாரம்மாவுக்குத் தான். என் வாயைக் கிண்டினார். நீங்கள் தான் அவருக்கு விளக்கிச் சொல்ல வேண்டும். நான் எப்படிச் சொல்லுகிறது? சொன்னால்தான் யாராவது நம்பப் போகிறார்களோ?''

''என்னத்தைச் சொல்கிறது? யாருக்கு? எதை விளக்குகிறது?''

''எனக்கு வருத்தமோ, கோபமோ இல்லை. இருந்தால் சந்திராவுக்குத்தான் என் மீது வருத்தம், கோபம். இல்லாவிட்டால்....'' என்று சற்று இழுத்து விட்டு, ''பொறுமை இருக்க வேண்டும். இருக்கிறதும் நியாயம்தான். ஆனால் தெய்வ மறியச் சொல்கிறேன். நான் பிணை இல்லை அதற்கு. ரங்கனுடைய அசட்டுத்தனத்துக்கு நான் ஏன் திண்டாட வேண்டும்? நான் எப்படிப் பொறுப்பாக முடியும்? இதைத்தான் நீங்கள் விளக்கிச் சொல்ல வேண்டும், சந்திராவிடமோ, இந்த வாத்தியாரம்மாவிடமோ....'' என்றாள்.

''நான் சொல்லி விடுகிறேன். அதற்காக நீ நின்று கொண்டே பேச வேண்டுமா! உட்காரு.''

டொக்கி உட்கார்ந்து கொண்டாள்.

''நீங்கள் அன்றைக்கே சொன்னீர்கள். அன்று ராத்திரியே ரங்கன் வந்த பொழுது, எனக்குத் தலை முகம் எல்லாம் கொதித்துக் கொண்டு வந்தது. கத்த வேண்டும் போலிருந்தது. அப்பா இருந்தார். பேசாமல் அடக்கிக் கொண்டு நீங்கள் சொன்னாற்போல 'ராம ராம' என்று வாய் வலிக்கிற வரையில் முனகினேன். மனசுக்குள்ளேயே முனகினேன். கடைசியில் கண்ணை விழித்துப் பார்த்த பொழுது விடியற்காலையாகி யிருந்தது. நான் தூங்கிப்போய் விட்டேனாம். ரங்கன் என்னை இரண்டு தடவைகள் கூப்பிட்டு விட்டு வீட்டுக்குப் புறப்பட்டு விட்டாராம். அப்புறம் அவர் வந்த பொழுதெல்லாம் அதே மாதிரி அடங்கிக் கொண்டு விட்டேன். இன்னும் கத்த வேளை வரவில்லை போலிருக்கிறது. இன்று அவர் வந்தால் கட்டாயம் கத்தி விரட்டி விடலாம் என்று இருக்கிறேன்.''

அதைக் கேட்டு அனந்தசாமி கண்ணை மூடிக் கொண்டார். அந்தக் குரலில் கட்டது ஆற்றாமையின் வெதுவெதுப்பா, ரங்கன் மீதுள்ள கோபமா என்று புரியாமல் விடை தேட முயன்றார். எனக்கு ஏன் இந்தச் சின்ன விஷயங்களுக்குக் கூட அனுபவம் இல்லை என்று ஒரு கணம் உள்ளூறப் புலம்பினார். கடைசியில் கேட்டே விட்டார்.

''ரங்கன் உன்னிடம் இவ்வளவு பாசம் வைத்திருக்கிறானே அம்மா?''

''நான் தலையைக் காட்டினால்தானே பாசம்... மாமா! கடைசியாகச் சொல்கிறேன். அவர் என் வீட்டுக்கு வருவது கூட எனக்குப் பிடிக்கவில்லை. போதுமா? இதைவிட நான் எப்படிப் பட்டவர்த்தனமாகச் சொல்ல முடியும்? ... கத்துகிறேனே என்று வித்தியாசமாக நினைக்காதீர்கள். இல்லாத சந்தேகமெல்லாம் என் மேல் வந்தால் எனக்குப் பொங்கிக் கொண்டு வந்து விடுகிறது.''

''நான் இனிமேல் இதைப் பற்றிப் பேசவே இல்லை'' என்று புன்னகை பூத்தார் அனந்தசாமி.

டொக்கி தன் கத்தலுக்காக வருந்தித் துடித்தாள். ஓங்கித் தன்னையே அறைந்து கொள்ள வேண்டும் போலிருந்தது.

''மாமா, கோபத்தில் கத்தி விட்டேன்...'' என்று தலையைக் குனிந்து கொண்டு சற்றுப் பேசாமலிருந்தாள். ''நீங்கள் இனிமேல் என்ன வேண்டுமானாலும் கேளுங்கள். பதில்சொல்லுகிறேன்.''

''வேண்டாம். பேசவே இல்லை என்று நான் சொல்லியாயிற்று. கவலைப் படாதே. உனக்குக் காப்பி சாப்பிட நேரம் வந்து விட்டது. இங்கு அடுப்புக் கூட இல்லை'' என்றார் அனந்தசாமி.

''எனக்குக் காப்பி, டீப்பி ஒன்றும் வேண்டாம். நான் கத்தினதை நீங்கள் மறந்து விட்டால் போதும்'' என்று எழுந்திருந்தாள் டொக்கி.

''என்ன?''

''புறப்பட்டாயிற்று, மாமா. கடைக்குப் போக வேண்டும். அப்பா ஊருக்குப் போகிறார். தம்பிக்கு ஏதாவது வாங்கிக் கொடுத்தாக வேண்டும்.''

''சரி.''

அவள் புறப்படுவதைப் பார்த்து அலமாரியின் எதிரில் நின்றவாறே புத்தகத்தைப் புரட்டிக் கொண்டிருந்த ராஜாங்கம் புத்தகத்தை வைத்து விட்டு முன்னால் வந்தார். ''புறப்படலாமா?'' என்று கேட்டார்.

தலையாட்டிக் கொண்டே வந்து நின்றாள் டொக்கி.



**வித்வான்:** என் சங்கீதத்தைப் பத்தே நிமிஷங்கள் கேட்டு விட்டு எனக்கு ஞானம் இல்லே என்று சொல்லிப் போய் விட்டானய்யா அவன்.

**அவர்:** அது சொல்வதற்கு அவனுக்கு அவ்வளவு நேரமாச்சா?

---

''வரட்டுமா மாமா?''

''சரி. நான் நாளைக்கு வருகிறேன்.''

''கட்டாயமில்லை மாமா. உங்களுக்குச் சாப்பாடே இன்னும் சரியாக இறங்கவில்லை. 'இல்லவுண்டு' சாப்பிட்டீர்கள். பிசைந்து வைத்த சாதம் எல்லாம் அப்படியே மிஞ்சி விட்டது. சிவனே என்று மிச்சத்தை அந்த ருக்மிணி மாமியே சாப்பிட்டார், பாவம்.''

''என்ன மறுபடியும் பாவம்?''

''அந்தச் சித்திக்குக் கூட அழுகை வந்து விட்டது.''

''...........''

அவர் ஒன்றும் பேசாமலிருந்ததைக் கண்டு டொக்கி ஒரு தடவை நிமிர்ந்து அவரைப் பார்த்தான்.

''ருக்மிணி மாடிக்கு வந்தார். அப்போதுதான் கேட்டேன் அந்தப் பாட்டியிடம், 'ஏன் மாமி இப்படி அழுகிறீர்கள்' என்று. 'சாமியார்தான் உங்களுக்கு ரொம்ப வேண்டியவர் போலிருக்கே. அவரிடம் கேட்டால் எல்லாம் தானே தெரியறது' என்று மறுபடியும் அழுகை மூட்டிக் கொண்டு வருகிறாற் போல் சொன்னார் பாட்டி. எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ருக்மிணி மாமியிடம் கேட்கவும் பயமாயிருந்தது. கேட்டிருப்பேன். அவர் வேறு ஏதோ பேசிக் கொண்டிருந்து விட்டார்... அந்தச் சித்தி, ருக்மிணி இவர்களெல்லாம் உங்களுக்கு உறவினர்களா?''

''நமக்கு எல்லாரும் உறவுதான். நீ உங்கள் அப்பா நான் — எல்லோரும் உறவில்லையா?''

''அது சரி, மாமா! நீங்கள் சாப்பிடவில்லையானால், எங்கம்மா அழ மாட்டாளோ?''

அனந்தசாமிக்குத் தூக்கித்தான் போட்டது ஒரு தடவை. ''நீ ஏன் இவ்வளவு வாயாடியாக இருக்கிறாய்?'' என்று சிரித்தார்.

''வாயாடி என்ன? நீங்கள் உறவாக இருக்குமோ என்று சந்தேகமாயிருந்தது. கேட்டேன். அந்தப் பாட்டி ஏன் அப்படிச் சொன்னான்? இல்லை, நான் தான் சரியாகப் புரிந்து கொள்ளவில்லையோ என்னமோ? நீங்கள் எங்கே போனாலும் என்மாதிரி சொல்லிச் சொல்லி அழுது தீர்த்துக் கொள்கிறவர்கள் எத்தனையோ பேர். அந்த அழுகையாகக்கூட இருந்திருக்கலாம் அது'' என்றான் டொக்கி.

''நீ தெரிந்துகொண்டுதான் ஆக வேண்டுமா?''

''அவசியமில்லை மாமா. ருக்மிணி மாமியைப் பார்த்தால் எனக்குக்கூட ஏதோ கொஞ்சம் கஷ்டமாயிருந்தது. இவ்வளவு அழகாக, இவ்வளவு வசதியாக, இவ்வளவெல்லாம் படித்து, இவ்வளவு புத்திசாலியாக இருந்தும், என்னமோமாதிரி இருக்கிறாளே என்று தோன்றிற்று! அந்த மாமி, ஐயோ ஐயோ, அத்தனை அழகு. அத்தனை அழகு மாமா. பவழமல்லிப் பூமாதிரி இருக்கிறாள் மாமா. பவழமல்லி வாசனை அடிக்கிறாற் போலக்கூட இருக்கிறது சில சமயம் எனக்கு. பாவம்'' என்றான் டொக்கி.

''என்ன மறுபடியும் பாவம்! இதோடு மூன்று பாவம் செய்து விட்டாயே இன்றைக்கு....''

''இல்லை மாமா. எனக்கு அந்த மாதிரி மனசு கிடந்து அடித்துக் கொள்கிறது — அப்படி இருக்கிறவர்களைப் பார்த்தால், இந்த மாதிரி அழகாக, சமர்த்தாக இருந்தால் கஷ்டம் மாமா. எங்கள் அப்பாவுக்குப் பெரியம்மா பிள்ளை ஒருவர் இருக்கிறார். அவருக்கு மைத்துனி இப்படித்தான் இருப்பாள். இதே மாதிரிதான் நல்ல அழகு. நல்ல அடக்கம், கெட்டிக்காரத்தனம் எல்லாம் இருக்கின்றன. ஆனால் அந்த மாமி சந்தோஷமாக இருக்கிறாற் போல எனக்குத் தோன்றவே தோன்றாது. கலியாணம் கூட ஆகிப் பத்துப் பன்னிரண்டு வருஷமாகி விட்டது. ஆனால் அந்த மாமி சந்தோஷமாக இல்லை என்றுதான் எனக்குப் பட்டுக்கொண்டேயிருக்கும்.''

''ஏன்?''

''எல்லாருக்கும் இல்லாத தனி அழகு, தனி சாமர்த்தியம், தனி புத்தி எல்லாம் இருந்தால், தனியாக இருக்க

வேண்டியதுதான். துளி அசட்டுப்பிசட்டு என்று இருந்தாலும் சல்லோபில்லோ என்று எல்லோரோடும் பழகிக் கொண்டு இருந்து விடலாம். அந்த அசட்டுப் பசையும் இல்லாத போனால்? அதனால்தான் இவரைப் பார்த்தால் என்னமோ மாதிரி இருந்தது எனக்கு'' என்று மெதுவாகத் தட்டித் தடவிக் கொண்டே பேசினாள் டொக்கி.

அனந்தசாமி சற்றுத திகைப்புடன் யோசித்தார். டொக்கி கூறியது அவரளவில் புதியதாக இருந்தது. திகைக்கிற அளவுக்கு உண்மையாகக் கூடத் தோன்றிற்று. ஆழ்ந்த வேதனை ஒன்று உள்ளே ஊறி அவரை அயர்த்துகிற அளவுக்கு உண்மையாகத் தோன்றிற்று. இந்தக் குழந்தை இவ்வளவு யோசித்துப் பேசுகிறதே என்று சற்று வியப்பில் பிரமித்தார். நீ கூட அப்படி இருந்து விடுவாய் போலிருக்கிறதே என்று அவருடைய அந்தரங்கத்தில் கூட முனகல் கேட்டது.

''தனியாகத்தான் இருந்து விட்டுப் போகட்டுமே. என்ன முழுகிப் போய் விடும்?'' என்றார் அவர்.

''இருக்கலாம் மாமா. சாமியாராக இருந்து வீடு வீடாக நடந்து மருந்து கொடுத்துக் கொண்டே போகிறவர்களுக்கு அது சரி. ஆனால் பொம்மனாட்டிகள் எல்லாரும் கவுந்தியடிகள் மாதிரி இருக்க முடியுமா?...ருக்மிணிக்குக் கலியாணம் ஆகிவிட்டதா மாமா?''

''என்ன இவ்வளவு தூரம் பேசுகிறவன் இப்படிப் பொத்தென்று ஒரு கேள்வியைப் போடுகிறாய்? அதைக் கூடக் கண்டுபிடிக்கத் தெரியவில்லையா?''

''அதுதான் அன்றைக்கே சொன்னேனே மாமா. கலியாணம் ஆனவர்களா இல்லையா என்று இந்த ஊரில் கண்டுபிடிக்க முடியவில்லை என்று! எனக்கு என்னமோ, யாரோ இந்த



மாமியைக் கலியாணம் செய்துகொண்டு அப்புறம் பயந்து போய் வேறு யாரையோ கலியாணம் செய்து கொண்டு தனியாக இருக்கிறாற் போல் தோன்றுகிறது'' என்று குரலைத் தாழ்த்திக் கொண்டே சொன்னாள் டொக்கி.

''கலியாணம் செய்து கொண்டவன் பயப்படுவானேன்!''

''என்னடா இவளைவிட நாம் எல்லா வகையிலும் மட்டமாக இருக்கிறோமே என்று புரிந்து கொண்டு தனக்கு ஏற்ற அடுப்பங்கரையாகப் பண்ணிக்கொண்டு போயிருக்கப் படாதா?''

''பண்ணிக் கொண்டிருந்தால் அப்படி ஒரு வேலை ஆகியிருக்கலாம். ஆனால் ருக்மிணிக்குக் கலியாணம் ஆகவில்லை. கலியாணம் நிச்சயமாயிற்றாம். கலியாணத்துக்கு முதல் நாள் சம்பந்திகள் வந்து இறங்கி விட்டார்கள். டிபன், காப்பி எல்லாம் கொண்டு போய் அவர்களுக்குப் பரிமாறினார்கள். இறங்கியிருந்த ஜாகையில் அவர்களும் சாப்பிட்டார்கள். எல்லாம் முடிந்து, மாப்பிள்ளை அழைப்புக்காக ஏற்பாடு ஆரம்பித்தது. ஆனால் பையனைக் காணோம். அவன் எங்கேயோ ஓடிப் போய் விட்டான். ஒரே ரகளை. யாருக்கும் முகத்தில் ஈயாடவில்லை. சல்லடை போட்டுச் சலித்தார்கள். பையன் அகப்படவில்லை. அவ்வளவுதான்; ருக்மிணி அப்புறம் கலியாணம் செய்து கொள்ளும் யோசனையெல்லாம் தட்டிக் கழித்து விட்டாள்.''

''அப்படியா! அப்படியா! நிஜம் மாமா!'' என்று பரந்தாள் டொக்கி. அப்படியே பிரமித்துப் போய்ப் பார்த்துக்கொண்டு நின்றாள். ''இந்த மாதிரி ஏதோ நடந்திருக்கும் என்றுதான் எனக்குத் தோன்றிற்று. நான் சொன்னமாதிரி ஆகிவிட்டது பார்த்தீர்களா! அதைவிட மோசம். கலியாணம் ஆவதற்கு முன்னாலேயே பயந்து கொண்டு ஓடிவிட்டான். அதுவரைக்கும் க்ஷேமம். தாலியையும் கட்டி, வாழாவெட்டியாக வைத்து விட்டுப் போகாமலிருந்தானே, அது வரையிலும் நல்லவன் தான்... அது சரி மாமா, ஏன் ஓடினானாம்?''

''என்னமோ.''

''எங்கே போனான்?''

''அவர்களுக்குத் தெரியவில்லை.''

''அப்புறம் இவனும் கலியாணமே செய்து கொள்ளவில்லையா?''

''ம்ஹ்ம்!''

''ஏன்?''

''அது என்னமோ?''

''எங்கே போனானாம் அந்தத் தடியன் தான்....?''

''ரிஷிகேசத்துக்கு ஓடினானாம். சாமியார்களின் வாலைப் பிடித்துக் கொண்டு

அலைந்தான். இலங்கைக்குப் போனான். மொட்டை யடித்துக் கொண்டு காவி வேட்டியுடன் அலைந்தான். கடைசியில் திரும்பியும் பட்டணத்துக்கு வந்தான். வைத்தியம் ஏதோ கொஞ்சம் செய்யத் தெரியும். அதற்காகத்தான் பட்டணம் வந்தான். இங்கேயே தங்கி விட்டான். இருபது வருஷங்கள் கழித்து ருக்மிணிக்கு அந்த ஓடிப் போன தடியன் உயிரோடு இருப்பதாகத் தெரிந்தது. ஆத்திரமாக வந்தது அவளுக்கு. டில்லி வேலையை விட்டு இங்கே வந்தாள். அதுவும் போதாதென்று, ராயப்பேட்டையில் அவன் குடியிருந்த வீட்டுக்கு வந்து, 'நீ என்னோடு இருக்க வேண்டாம். என் பார்வையிலாவது இரு. நான் இருக்கிற வீட்டு மாடியில் இடம் காலியா யிருக்கிறது' என்று அவனை அழைத்துக் கொண்டு வந்து விட்டாள்.''

''ஆ!''

அவ்வளவுதான்; டொக்கி கண் அகலத் திடுக்கிட்டு அசைவற்றுப் போய் விட்டாள். கண் சிறிது ஜொலித்தது. பூனைக் கண்ணைப் போல. பிறகு அந்த மௌனத்துக்கிடையே இலை மூடுவது போல் சாந்தமடைவது போல் தோன்றிற்று. கலங்கவோ, துடிக்கவோ இல்லை. வெறிச்சென்றிருந்த அந்தக் கண்ணிலிருந்து குப்பென்று நீர் பாய்ந்து வழிந்தது. துடைத்துக் கொண்டாள்.

ராஜாங்கம் அவன் மீண்டும் பேசத் தொடங்கியதைப் பார்த்து மொட்டை மாடிக்குப் போய் நின்று கொண்டிருந்த சமயம் அது.

டொக்கி மெதுவாக நகர்ந்தாள். படியிறங்கிக் கீழே போனாள். சந்தடியின்றி உள்ளே நடந்தாள். வாசலுக்கு நேராக, உள்ளே அலயாம்பாள் ஒருக்களித்து உறங்குவது தெரிந்தது. இரண்டு மூன்று நாகணவாய்கள் கொல்லையில் கூவின. வேறு சப்தம் இல்லை.

வலது பக்க அறைக்குள் திரும்பினாள் டொக்கி. ருக்மிணி வாசல் பக்கம் பார்த்து நாற்காலியில் உட்கார்ந்திருப்பது தெரிந்தது. எவ்வளவு அழகான தலை! அடி மேல் அடியெடுத்து நெருங்கினாள். பாவாடையின் கொசகொசப்பைக் கேட்டு, சட்டென்று திரும்பினாள் ருக்மிணி.

''வா'' என்றாள் ருக்மிணி.

டொக்கிக்கு அது காதில் விழுந்ததோ இல்லையோ, புருவம் இலேசாக உயர்ந்த புன்னகையுடன் அருகே சென்றாள். மெதுவாக அவள் கையைப் பிடித்துக் கொண்டாள். முழங்கையை வருடினாள்; தலையை வருடினாள்.

''என்ன டொக்கி?'' என்று நிமிர்ந்து அவளைப் பார்த்தாள் ருக்மிணி.

அதற்குப் பதிலாக[illegible] டொக்கியின் கண்களில் பரிவும் அருளும்தான் சுரந்தன. ஆனால் வாய் திறக்கவில்லே. அரும்பி நின்ற புன்னகை மட்டும் அப்படியே நின்றது.

''என்ன?''

டொக்கி தலையை அசைத்தாள். ''ஒன்றுமில்லே'' என்ற பாவனேயில். சொல்லவில்லே.

''என்ன டொக்கி?''

மீண்டும் தலை யசைத்தாள் டொக்கி. உதட்டைக் கடித்தாள். கண்ணீர் முட்டிக்கொண்டு நின்றது. ததும்பிற்று.

''என்ன?'' என்று மெல்லிய குரலில் பரபரத்து எழுந்தாள் ருக்மிணி.

''ஒன்றுமில்லே, மாமி!'' தழுதழுத்துக் கொண்டே அவளே நாற்காலியிலேயே கையால் அமர்த்தினுள் டொக்கி.

கடமையின் அழைப்புத்தான் நான் இந்த (சுதந்திர) இயக்கத்தைத் தொடங்குமாறு செய்தது. மக்களைப் பொருளாதாரத் துறையில் ஊக்கிச் செலுத்தும் இயற்கையான ஆற்றல்களே இன்றைய திட்ட முறையும், அதிகார வர்க்கமும் நெருக்குகின்றன. இந்த ஆற்றல்களைக் கட்டவிழ்த்து விடுவதற்காக ஆரம்பித்த இயக்கம் இது. இதைவிட முக்கியமானதாக நான் கருதிப் பாடுபடுவது வேறென்றுக்காக. சர்வாதீன சர்க்காரானது மக்களின் சுதந்திரமான தரும உணர்ச்சியை வற்ற வைத்து விடாமல் அவர்களேக் காப்பதே அது. வாழ்க்கையை வாழத் தகுந்ததாகச் செய்வது தரும உணர்ச்சி தான். இந்தப் பணியை நிறைவேற்றக் காலம் எனக்கு அநுமதி அளிக்காமல் போகக் கூடும். ஆனால் இதற்காகச் செய்யும் முயற்சியிலேயே ஒரு நிறைவைக் காண்கிறேன். மற்றதை யெல்லாம் தேசத்துக்கும், நமக்கெல்லாம் மேலாக உள்ள தெய்வசக்திக்கும் விட்டு விட்டேன். இந்த இயக்கம் உண்மையிலேயே நமது நாட்டுக்குத் தேவைப்படுவதானல் என்னேடு மாண்டு போகாது. எனக்குப் பின் மற்றவர்கள் அதைத் தொடர்ந்து நடத்துவார்கள்; புதுமை மோகத்துக்காகவே முன் யோசனேயில்லாமல் செய்யப்படும் மாறுதல்களில் நமது குடியரசு புதைந்து போகாமல் அதை மீட்பார்கள். — ராஜாஜி

''ஒன்றுமில்லே யென்றால், என்ன இது....?'' என்று வியந்தாள் ருக்மிணி.

டொக்கி வாயைத் திறந்து பெருமூச்சு விட்டாள்.

''ம்?''

''எப்படி மாமி இது தோன்றிற்று, உங்களுக்கு?'' என்று கேட்டாள் டொக்கி.

''எது?''

''இந்த ஊருக்கு வந்து அவரைக் குடியாக வைத்துக் கொள்ள வேண்டும் என்று...''

ருக்மிணி அவளே ஏறிட்டுப் பார்த்தாள். அவள் கேட்பதற்கு முன்னுல், ''மாமா எல்லாம் சொல்லி விட்டார் என்னிடம், ....இப்பத்தான்'' என்று சொல்லி, பிரமிப்பு, பரிவு, வியப்பு எல்லாம் நிறைந்த ஒரு பார்வையில் தன் உள்ளம் முழுவதையும் அவள் காலடியில் கிடத்தி விட்டாற் போல் பார்த்தாள் டொக்கி.

''என்ன சொன்னுர்?''.

''எல்லாம்தான் ...எப்படி உங்களுக்கு ரிஷி மாதிரி இவ்வளவு தீர்மானமாக இருக்க முடிந்தது! வேலையை விட்டு விட்டு, இங்கே வந்து, அவரையும் இங்கேயே வரவழைத்து...!'' இவ்வாறு வியப்பில் குரல் ஆழ்ந்து தணியக் கேட்டுக் கொண்டே பார்த்தாள் டொக்கி.

'இந்தக் குழந்தையோடு தன் ரகசியங்களே வாய் விட்டுப் பகிர்ந்து கொள்ள வேண்டுமா ?' என்று ஐயத்துடன் ருக்மிணி சற்றுப் பேசாம லிருந்தாள். ஆனால் இவள் குழந்தையாகவும் இல்லே. எத்தனேயோ ஆண்டுகள் வாழ்ந்து அடிபட்டு, எத்தனேயோ நல்லது கெட்டதுகளே யெல்லாம் பார்த்து, தத்தளித்து, கடைசியில் மனம் அயர்ந்து விட்டவர்களின் பரிவு, பெரும்போக்கு, தாராளம் ஆகியவற்றை யெல்லாம் தனதாக்கி, ஓங்கியும் அடங்கியும் நிற்பது போல் தோன்றுகிறுள் இவள். அதே சமயம் மனசை வாரி அள்ளிக் கொண்டு விடும் குழந்தைத் தன்மை!

இந்தக் குழந்தைதான் நாற்பது வயதைக் கடந்துவிட்ட என்னே, பெற்றவளேப் போல், பெற்றவளேப் பெற்றவளேப் போல் தலையை வருடிக் கொடுக்கிறுள்!

''ஆமாம் மாமி, உங்களேப் பார்த்தால், யாரோ ரிஷியைப் பார்க்கிற மாதிரிதான் எனக்கிருக்கிறது. மாமாவோடு பழக ஆரம்பித்ததிலிருந்தே வேடிக்கை வேடிக்கையான மனிதர்களே யெல்லாம் பார்க்கிறேன் மாமி. ஆனல் நீங்கள்தான் பெரிய வேடிக்கை எல்லாரையும் விட. ஒரே ஒரு வித்தியாசம். அவர்களோடு பழகின பிறகுதான் வேடிக்கையான மனுஷர்கள் என்று தெரிந்தது. ஆனல் உங்களே மாடியில் முதன் முதலில் பார்த்தேனே, வண்டி வந்தவுடனே சாமான்களே எடுத்து

அடுக்கி வைப்பதற்காக மாடிப்படி ஏறி வந்தீர்களே — அப்போதே இது சாதாரண ஆசாமி இல்லே என்று மாத்திரம் எனக்குப் பட்டுவிட்டது.''

'துருவித் துருவி அலசுகிறாயே, அம்மா!' என்று சொல்லவில்லை ருக்மிணி. ஆனால் அந்த வியப்புடன்தான் டொக்கியின் பேச்சு நுட்பத்திலும், அழகிலும் முக அசைவுகளிலும் மனத்தைப் பறி கொடுத்துப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்த ஒரு கணத்தில் சந்திராவை விட நெருங்கி, தன் இதயத்தில் முக்கியமான இடமாகப் பார்த்து இந்தப் பெண் டொக்கி பிடித்துக் கொண்டு அமர்ந்து விட்டாற் போலிருந்தது அவளுக்கு.

பிறகு யாரோ குழந்தையைக் கேட்பது போல் அவளைக் கேள்விகள் கேட்கத் தொடங்கி விட்டாள்.

''பேருக்குப் பிறகு போட்டுக் கொள்வார்களே! அதில் எந்த எழுத்துக்கள் உங்கள் பேருக்குப் பிறகு வரும்?''

''எம். ஏ.''

''இல்லா விட்டால் காலேஜுக்கு வாத்தியாராக முடியாதோல்லியோ?''

''அப்படி ஒரு நம்பிக்கை.''

ஐந்து நிமிஷங்களுக்குள் சரசர வென்று எல்லாவற்றையும் விசாரித்து விட்டாள். தயக்கமோ, தடையோ இன்றி, அவளிடம் படித்த பெண்கள், அவன் சம்பளம், டில்லி வீடு, டில்லி வாழ்க்கை, டில்லி நண்பர்கள், சித்தி, அப்பா, அம்மா, ருக்குவின் சகோதரிகள், அவர்கள் வாழ்கிற இடம் — எல்லாவற்றையும் பற்றித் தனக்கே அற்றுப்படியாகி விட்ட கிராமத்து எளிமையுடன், திறந்த மனத்துடன் கேட்டுத் தெரிந்து கொண்டு விட்டாள்.

''சென்ஸஸ்காரன் மாதிரி எல்லாம் கேட்டு விட்டாய். போதுமா? இன்னும் ஏதாவது பாக்கி யிருக்கிறதா?'' என்று கேட்டாள் ருக்மிணி.

''கோபித்துக் கொள்ளாதீர்கள். உங்களை அப்படியே கட்டிக் கொண்டு ஒன்றாகி விட வேண்டும் போலிருந்தது. அதற்குப் பதிலாக, உங்கள் மனத்தில் புகுந்து, எல்லாம் தெரிந்து கொண்டு விடவேண்டும் என்று கேட்டுவிட்டேன். அப்படியும் ஒன்றாக ஆகி விட முடியுமோல்லியோ, அதனால் தான்.''

டொக்கியை இழுத்து இடது கையால் அணைத்துத் தோளை ஒரு முறை அழுத்தினாள் ருக்மிணி. ''கோபமும் இல்லே. மண்ணும் இல்லே. இப்படி வாய் ஓயாமல் பொரிகிறாயே. ஏன் உன்னைப் பற்றி ஒன்றுமே சொல்ல மாட்டேன் என்கிறாய்?'' என்று கேட்டாள்.

''சொல்லிக் கொள்ள ஒன்றுமில்லே. வைத்தியர் மாமா கிட்டே கேட்டால் என் சந்தம் எல்லாம் தெரியும். சொல்ல என்ன இருக்கிறது? பள்ளிக்கூடம் படித்து முடிந்து, ஒரு வருஷம் சோம்பல் அடித்து விட்டு இங்கே வந்திருக்கிறேன். நடிகையாகணும் என்று தயார் செய்து கொள்கிறேன். கிழவியா, பெரியவளா — சொல்லிக் கொள்ள என்ன இருக்கிறது?''

ருக்மிணி மேலே ஒன்றும் கேட்கவில்லை. சட்டென்று ''நான் வரேன்; இன்று இரவு அப்பா ஊருக்குக் கிளம்புகிறார்'' என்று எழுந்தாள் டொக்கி.

''எந்த ஊருக்கு?''

''திருச்சிக்கு. அங்கே போய்ப் பிறகு பஸ்ஸில் போகணும். எங்கப்பா ஸப்-ரிஜிஸ்டிரார். இத்தனை நாட்களாக லீவில் இருந்தார். மெட்ராஸில் ஜாகை வைத்து எனக்கு டான்ஸ் எல்லாம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடு செய்வதற்காக வந்தார். லீவு ஆகிவிட்டது. நாளைக்கு ஊருக்குப் போய்ச் சேர்ந்தாக வேண்டும்.''

''உங்கப்பா இன்னும் வேலையில் இருக்கிறாரா?''

''ம். பல், தலே எல்லாம் இப்படியிருக்கே என்று பார்க்கிறீர்களா? இன்னும் ஒரு வருஷத்துக்கு மேல் இருக்கிறது ரிடையராக. என் அம்மாவுக்குச் செய்கிற சிசுருஷை, அவளுக்காகப் படுகிற கவலே, அவள் கொடுக்கிற கவலே — மூன்றும் தலே மயிர், பல், சரீர பலம் என்று ஒவ்வொன்றாகப் பிடித்துக் கொண்டு போய் விட்டது. எனக்கு அம்மாவாக இருந்தாலும் இளையாள் தானே'' என்று கண்ணைச் சிமிட்டி விட்டு, ''வரேன். பாட்டி தூங்குகிறாற் போலிருக்கிறது. சொல்லி விடுங்கள்'' என்று வெளியே போனாள் டொக்கி.

சிறிது நேரத்துக்கெல்லாம் மீண்டும் தகப்பனுடன் உள்ளே வந்தாள். ராஜாங்கமும் ருக்மிணியிடம் விடை பெற்றுக் கொள்ளவே, இருவரும் அங்கிருந்து நகர்ந்தார்கள்.

அவர்கள் போய் ஐந்து நிமிஷங்களுக்குள், அனந்தசாமியும் குடையும் பையுமாக வந்தார். சாவியை ருக்மிணியிடம் கொடுத்து விட்டு, ''ஜுரமாய்க் கிடந்ததில் பல பேர் விட்டுப் போய் விட்டது. பார்த்து விட்டு வருகிறேன். ஜாகை மாறியிருக்கிறதும் தெரியணுமே'' என்று சொல்லிக் கேட்டைத் திறந்து கொண்டு தெருவில் நடந்தார். (தொடரும்)

# ஏழாவது தேசீயப் பூப்பந்தாட்டம்

## துண்டு மணி

கோர்ட்டிலே வழக்கு நடந்து கொண்டிருந்தது. எல்லாப் பிரபல வக்கீல்களும் வாதி பக்கம் வழக்கு ஜெயிக்காது என்று தீர்மானமான முடிவுக்கு வந்துவிட்டனர். வாதியே அயர்ந்து போய்விட்டார். அந்தத் தருணத்தில் ஒரு வக்கீல் வாதி பக்கம் அற்புதமாக வழக்காடி வழக்கை ஜெயித்துக் கொடுத்தால் எப்படியிருக்கும்? அந்த வாதிதான் வக்கீலை எப்படிக் கொண்டாடுவார்? அவரைத் தலையில் வைத்துக் கொண்டாடத் தோன்றுமல்லவா?

இதே மாதிரி பூப்பந்தாட்டத்தில் எல்லாரும் சென்னை ராஜ்ய பூப் பந்தாட்டக் கோஷ்டியே வெற்றி பெறும் என்று முடிவுக்கு வந்துவிட்டனர். பலர் தைரியமாகப் பந்தயம் கட்டத் தொடங்கினர். இந்தச் சமயத்தில், 'பைனல் ஆட்டத்தில் ரயில்வே கோஷ்டி பணால்' என்று சென்னை ராஜ்ய கோஷ்டிபக்கம் பலர் சேர்ந்து ஆரவாரம் செய்யத் தொடங்கினர்.



கரீம்

ரயில்வே கோஷ்டியிலுள்ள திரு ஜகந்நாதன், திரு யுவராங்கம், திரு ஆறுமுகம் பிள்ளை, திரு கோவிந்தன் இவர்கள் மனம் தடுமாறி ஆட்டத்திலே பல தவறுகள் செய்யத்தொடங்கிவிட்டனர். அப்பொழுது திரு கரீம் அபாரமாக ஆடி, வாதிக்கு வக்கீல் வழக்கை வெற்றி பெற்றுக்கொடுத்ததைப் போல், ரயில்வே பூப் பந்தாட்டக் குழுவுக்கு வெற்றியைத் தேடித் தந்தார். அந்தத் தனி மனிதர் தன்னிலை இழக்காது, தோல்வி நெருங்கியும் பயப்படாமல் ஆடியது ஓர் அதிசயம் என்றுதான் கூற வேண்டும். இல்லாவிட்டால் சென்னை கோஷ்டியில் திரு கப்டையாவும், திரு மணியும் திரு ஜோசப்பும் சோபித்த ஆட்டத்துக்கு எதிரில் இப்படி வெற்றி பெற்றிருக்க இயலுமா? விளையாட்டு முடிவில் ரயில்வே கோஷ்டி வெற்றி பெற்றதைக் கண்டு பலர் கரீமைத் தலைக்கு மேல் தூக்கித் தங்கள் பாராட்டைத் தெரிவித்துக் கொண்டிருந்து இந்த எதிர்பாராத முடிவு எவ்வளவு தூரம் அவர்களைக் கவர்ந்திருந்தது என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

ஏழாவது தேசிய பூப்பந்தாட்டப் போட்டி சென்னை சட்டக் கல்லூரி மைதானத்தில் டிசம்பர் 24ந் தேதியிலிருந்து 29ந் தேதி வரை கோலாகலமாக நடைபெற்றது. சென்னை கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி அவர்கள் இந்த விளையாட்டு வைபவத்தைத் தொடங்கி வைத்தார்கள். இந்தியாவிலுள்ள பதின் மூன்று ராஜ்யங்கள் இந்தப் போட்டியில் கலந்து கொண்டன. சென்னை ரஸிகர்களுக்கு நல்ல ஆட்ட விருந்தளிப்பதிலே ஹைதராபாத், ஆந்திரா, மைசூர், கேரள ராஜ்யங்களும் முன் நின்றன.

ரயில்வே பூப்பந்தாட்டக் கோஷ்டி





சென்னை ராஜ்ய பூப்பந்தாட்டப் போட்டியில் வெற்றி பெற்ற திருச்சி டாக்டர் மதுரம் ஞாபகார்த்தக் கிளப் குழுவினர்

வந்திருக்க முடியாது. தென்னிந்திய ரயில்வே கோஷ்டிக்கு இறுதி வரையில் நல்ல எதிர்ப்பை அளித்து அது தோற்றுவிடும் என்ற ஐயத்தை எழுப்ப அவரது ஆட்டத் திறமையினால் தான் முடிந்தது.

இந்தியாவில் ஒற்றுமையை வளர்க்க எவ்வளவோ பேர்கள் பேசிப் பார்க்கிறார்கள். கைகூடுவது கஷ்டமாக இருக்கிறது. ஆனால் விளையாட்டு ஒற்றுமையை வளர்க்கும் சிறந்த சாதனம் என்பது இந்த ஏழாவது பூப்பந்தாட்டப் போட்டியில் கண்கூடாகத் தெரிந்தது. பதின்மூன்று ராஜ்யங்களிலிருந்து வந்தவர்கள், பல்வேறு மொழியினர் ஒற்றுமையுடன் ஒருவருக்கொருவர் கலந்து பேசி, விளையாடி, விளையாட்டுத் திறமையை ரசித்தது ஓர் அபூர்வக் காட்சியாகத்தானிருந்தது.

சென்னைக் கோஷ்டியில் முதலில் திரு கப்பையன் லீவு கிடைக்காததால் வர இயலவில்லை என்று தந்தி கொடுத்து விட்டார். சென்னைக் கோஷ்டியில் இளமையும் துரு துருவென்ற சுபாவமும், ஆட்டத் திறமையினால் முன்னுக்கு வந்து கொண்டிருப்பவருமான இடது கை ஆட்டக்காரர் குமார் நன்றாக ஆடிச் சமாளித்தார். திரு கப்பையன் வரவில்லை என்று தந்தி வந்ததும் சென்னை ராஜ்ய பூப்பந்தாட்டக் கழகத்தினர் சும்மா இருக்கவில்லை. உடனே தந்திகள் பறந்து திரு கப்பையனை எப்படியோ வரவழைத்து வந்து விட்டனர். காரியதரிசி திரு கோவிந்தராஜுலு நாயுடு கெட்டிக்காரர்தான். திரு கப்பையன் ஆடியிரா விட்டால் சென்னை ராஜ்யப் பூப்பந்தாட்டக் குழு இறுதி ஆட்டம் வரை

ஏழாவது தேசியப் போட்டியைச் சென்னையில் நடத்தும் அதே சமயத்தில் சென்னைப் பூப்பந்தாட்டக் கழகத்துக்கு வெள்ளி விழாக் கொண்டாடும் வைபவமும் கலந்துகொண்டது. இவ்விரு விழாக்களையும் நல்ல பூப்பந்தாட்ட விருந்து அளிப்பதன் மூலம் சென்னை பூப்பந்தாட்டக் கழகம் விமரிசையாகக் கொண்டாடியது. வெள்ளி விழா வைபவத்தில் சென்னையைச் சேர்ந்த ரயில்வே கோஷ்டியினர் வெற்றி பெற்றது சென்னைக்குப் பெருமைதான். தமிழ் நாட்டிலே பிறந்து வளர்ந்து 'ஏழைகளின் விளையாட்டு' என்று புகழ் பெற்ற பூப்பந்தாட்டம் இந்தியா முழுதும் பல்கிப் பெருகி வளர வாழ்த்துகிறோம்.

அட்டைப்பட விளக்கம்

## புத்தாண்டை வாழ்த்தும் புனிதன்

புத்தாண்டின் முதல் வாழ்த்துக்களை யாருக்குத் தெரிவிக்கலாம் என்று யோசித்தால் வையமெல்லாம் வாழவைக்கும் பசுபதியே குடும்ப சமேதராக நம்முடைய இதழின் தோரண வாயிலில் வந்து நிற்கிறார். நாம் வாழ்த்துவதால் அவர் பெறவேண்டியது எதுவுமில்லை. நம்மையெல்லாம் வாழ்த்தவே அவர் வந்திருக்கிறார். இந்த ஆண்டில் மகத்தான சம்பவங்கள் நடைபெற விருக்கின்றன. தேர்தல், சீனப் பிரச்னை இவையெல்லாம் தேசியப் பிரச்னைகள். பனிப்போர் உலகப் பிரச்னை. அண்ட சராசரங்களுக்கும் ஒரு பிரச்னை அஷ்டக்கிரஹங்களின் சேர்க்கை என்று சோதிடர்கள் சொல்கிறார்கள். ஆண்டவனின் அனுக்கிரஹத்தினால் அவை யாவும் நல்லபடியாகத் தீரும் என்று நம்புகிறோம். அந்த அருளுக்கு வணங்கி, அருளைப் பெற விருக்கும் வாசக நேயர்களுக்குப் புத்தாண்டு வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம். அருளாளனை நம்முடைய கண்முன்னால் கொண்டு வந்து நிறுத்தியுள்ள ஓவியர் மணியத்துக்கு நீங்கள் கூறும் வாழ்த்துக்களையும் அவரிடம் சேர்க்கிறோம்.

# இசைவிழா உரைகள் பற்றி....

இந்த மார்கழி மாதம் தமிழகத்துக்குமட்டும் பனிக்காலம் அல்ல. உலகத்தின் பல்வேறு பாகங்களிலும் பனிப்போர் வலுத்திருப்பதால் இதனை சர்வதேச பனிக்காலம் என்றே சொல்லலாம். ஆனால் சென்னை மா நகரில் மட்டும் இது கன மழைக்காலமாக இருக்கிறது; அதாவது கான மழைக்காலமாக இருக்கிறது. இந்தக் கான விழாவில் ஆற்றப் பட்ட உரைகள் நம்முடைய கலைகளின் பெருமையை உணர்ந்து பேசிய பேச்சுக்களாகவே உள்ளன. கலாக்ஷேத்திர வெள்ளி விழாவில் \ பேசிய உபஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன் அவர்கள் 'ஆத்மாவைப் பண்படுத்துவதே கலை. ஆத்மாவுக்கு வறுமை ஏற்பட்டால் கலைச் சுவைதான் அதனைத் தீர்க்க முடியும்' என்றெல்லாம் பரவசமாகப் பேசி யிருக்கிறார்.

வேதாந்தி ராதாகிருஷ்ணன் கூறியதையே தான் நட்சத்திர நடன நடிகை குமாரி வைஜயந்திமாலா அவர்களும் கூறுகிறார். இந்தியன் பைன் ஆர்ட்ஸ் சொசைட்டி விழாவைத் திறந்துவைத்த அவர் 'இந்தியாவின் புராதனக் கலைகள் ஆத்மீகத்தை அடிப்படையாகக் கொண்டவை. ஒருவருடைய உள்ளப் பாங்கையும், வாழ் முறையையும் உயர்த்தும் வல்லமை வாய்ந்த ஒரு சாதனம் அது' என்றார் அவர். இத்தகைய நமது மகத்தான கலைகளைப் பொருளீட்ட உதவும் ஒரு சாதனமாகக் கருதுவதைக் கண்டித்துப் பேசினார் பைன் ஆர்ட்ஸுக்குத் தலைமை வகித்த சேர்மாதேவி ஸ்ரீ எல். சுப்பிரமணிய சாஸ்திரிகள்.

தமிழிசைக் கல்லூரியைத் தொடங்கி வைத்த நிதிமந்திரி ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் அவர்கள் திட்டங்களைப் பற்றிப் பேசிப் பழக்கப்பட்டவரல்லவா? எனவே கலைகளுடைய ஆத்மீக அடிப்படையை ஒருகாலும் மாற்றக் கூடாது என்று 'திட்ட'வட்டமாகக் கூறினார் அவர். மேல்நாடுகளில் லௌகிக சங்கீதம் உண்டு; இங்கு கூடவே கூடாது. பக்திச் சூழ்நிலையில்தான் தமிழிசை வளர முடியும் என்று அவர் கூறினார்.

இதுபோன்ற பிரசங்கங்களுக்குப் பிரசித்தி பெற்ற மியூஸிக் அகாடமியிலோ ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள் இசையின் மகிமைகளைக் கூறித் தேசிய ஐக்கியத்தை நிலை நாட்டவும் அதனைப் பயனாக்கிக் கொள்ள முடியும் என்று கூறினார்.

சங்கீத, நாட்டியக் கலைகளின் பெருமையை இவர்கள் இவ்வாறு வானளாவப் பேசியது இன்றைய வித்வான்கள் கலைகளை எவ்வளவு விநயத்துடன் அணுக வேண்டும் என்பதையே எடுத்துரைத்தன. ஆனால் ஏனோ தெரியவில்லை, இவ்வருஷத்திய சங்கீத கலாநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள ஸ்ரீ வீருசாமிப் பிள்ளை அவர்களின் உரை மட்டும் சற்றே வேறு ரீதியில் அமைந்து விட்டது. 'இன்று சங்கீதத்தின் தரம் குறையவில்லை, உயர்ந்தே இருக்கிறது. முன்போல் இப்போது வித்வான்களிடம் பொறாமை யில்லாததால் நுணுக்கமான இசை அம்சங்களும் எல்லாருக்கும் கிடைக்கின்றன' என்றார் அவர். இது உண்மையானால் இன்று எத்தனை எத்தனையோ மகா வித்வான்கள் புதிதாகத் தோன்றி யிருக்க வேண்டுமே! 'முன்னைவிட அதிக மக்கள் இப்போது கர்நாடக சங்கீதத்தைக் கேட்டு ரசிக்கிறார்கள்' என்றும் ஸ்ரீ பிள்ளை கூறியிருக்கிறார். அதிகமான மக்கள் ரசிப்பதால் வித்வான்களின் வாழ்க்கைத் தரம் வேண்டுமானால் உயர்ந்திருக்குமே ஒழிய கலையின் தரம் எப்படி உயர்ந்திருக்கும்?

முன் காலத்தில் குருகுல வாசம் செய்து, பணிவார்ந்த அன்புடன் சிஷ்யர்கள் பாடம் பயின்ற போது, அவர்கள் தகுதியை முற்றிலும் சோதித்துத் தங்கள் உள்ளத்தைத் திறந்து அதில் உள்ளதை யெல்லாம் வாரி வழங்கினார்கள் வித்வான்கள். இன்றோ கலாசாலைகளில் சம்பளம் கட்டி இசை பயிலும் மாணவர்கள் சந்தையிலிருந்து சரக்கு வாங்கும் வியாபார மனத்துடன்தான் கலையை அணுகுகிறார்கள். ஆசிரியர்களுக்கும் அவர்கள் மீது முன்போன்ற ஆத்மார்த்தமான பாசம் விழ வாய்ப்பில்லை. முன்பு சதஸில் பாடுவது அஞ்ச வேண்டிய விஷயமாக இருந்ததால் தக்க வித்வத் பெற வேண்டிய ஒரு நெருக்கடியே இருந்தது. இன்றோ அரைமணிக்குள் ஒரு ரேடியோக் கச்சேரி செய்ய மனப் பாடம் செய்து கொண்டால் போதும் என்றாகி விட்டது. இந்த நிலைமையில் பண்டைய நாட்களைப் பற்றிச் சற்றே தாழ்த்தியும், இன்றைய 'தர'த்தை உயர்த்தியும் பேசுவது இளம் பாடகர்களுடைய விநயத்தை மேலும் குறைக்கும். வித்வான்கள் ஜீவனோபாயமாகத்தான் கான வித்தையைப் பழகுகிறார்கள்; பெரிய பெரிய இலட்சியங்களைச் சொல்லி இதை மூடி மறைக்க வேண்டியதில்லை என்றும் கருதுகிறார் ஸ்ரீ பிள்ளையவர்கள். உண்மையே. அவரது அந்தரங்க சுத்தத்தைப் போற்றுகிறோம். என்றாலும் வளரும் தலைமுறையினர் இசையின் இலட்சியத்தையே அலட்சியம் செய்வதற்கு ஊக்கமளிக்கலாகாது. சேர்மாதேவி சாஸ்திரி அவர்களின் கண்டனத்தை மீண்டும் நினைவூட்டுகிறோம்.

இரு நல்ல யோசனைகள் இந்த சங்கீத சீஸனில் தெரிவிக்கப்பட்டன. பழம் பெரும் வித்வான்களின் கானத்தை 'டேப் ரிகார்ட்' செய்து எதிர்காலத்துக்கு அளிக்க வேண்டுமென்று ஸ்ரீ டி. டி. கே. கூறியிருக்கிறார். நாட்டியக் கல்லூரி ஒன்று நிறுவவேண்டுமென்று தமிழிசை விழாவுக்குத் தலைமை தாங்கிய வழுவூர் ஸ்ரீ ராமையாப் பிள்ளை அவர்கள் கூறி யிருக்கிறார். வரவேற்கிறோம். முன்போல் ஆலயங்களில் நாட்டியத்தை வளர்க்க வேண்டுமென்பதும் ஸ்ரீ ராமையாப் பிள்ளையின் கருத்து. இம்முறையால் ஏற்பட்ட பழைய அசங்கியமான விளைவுகளை நாம் இன்னும் மறக்கவில்லை. வீட்டுக்கு வீடு நாட்டியமணிகள் தயாராகி வரும் இன்று அந்தப் பழைய வழக்கம் அவசியம்தானா?

# மணிபல்லவம்

## நா. பார்த்தசாரதி

### 14 - படிப்படியாய் வீழ்ச்சி



ஏமாறக் கூடாது ஏமாறக் கூடாது என்று நினைத்துக் கொண்டிருந்தும் அந்த நினைப்பைத் தவிர வேறு எதிலும் கவனம் செலுத்த முடியாத காரணத்தாலேயே தான் ஏமாந்து போய் விட்டதை உணர்ந்தார் நகைவேழம்பர். பெருநிதிச் செல்வர் இயல்பாகவே கோழையா, நடிப்புக் கோழையா என்று புரிந்து கொள்ள முடியாமல் நீண்ட காலமாகத் தான் கொண்டிருந்த மனக்குழப்பம் இன்று தெளிவாகி விட்டதாகத் தோன்றியது அவருக்கு. தானாகவே வருகிற சந்தர்ப்பங்களைப் பயன்படுத்திக் கொள்வதிலும், சில சந்தர்ப்பங்களைத் தனக்காகவே வரும்படி செய்து கொள்வதிலும் பெருநிதிச் செல்வர் வல்லவர் என்பதைப் பல முறை உடனிருந்தே அறிந்திருந்த நகைவேழம்பர் இன்று அதைத் தனது சொந்த அநுபவத்திலும் புரிந்து கொண்டார்.

பெருநிதிச்செல்வரை வெற்றி கொள்வதற்கு இதற்கு முன் தனிமையிலே தனக்கு வாய்த்த ஒவ்வொரு சந்தர்ப்பத்தையும் தான் நழுவ விட்டிருப்பதையும் நினைத்துக் கொண்டார். பொருளையும் செல்வத்தையும் இழப்பதைவிடச் சந்தர்ப்பங்களை இழப்பது மிகவும் பரிதாபகரமானது. அந்த வகையில் தன்னுடைய இறுதிச் சந்தர்ப்பத்தையும் இப்போது தான் இழந்து விட்டதாக உணர்ந்தார் அவர். அந்த உணர்ச்சியைத் தாங்கிக் கொள்வது வேதனை மிக்கதா யிருந்தது.

நிலவறைக்கு மேலே ஏறிச் செல்வதற்கு வழி இல்லாமல் அடைக்கப்பட்ட கதவின் கீழே இருளில் அமர்ந்து சிந்தித்தார் நகைவேழம்பர். 'சாவதற்கு நான் கவலைப்படவில்லை. என்றாவது ஒரு நாள் எல்லாரும் சாகத் தான் வேண்டும். அது இதற்கு முன்னாலும் நேர்ந்திருக்கலாம். ஏனோ நேரவில்லை. எனக்கு அளிக்கப்பட்ட பல சந்தர்ப்பங்களில் வளரவும் பயன்படாமல், அழியவும் பயன்படாமல் வீணாய்ப் போன சந்தர்ப்பங்களை வரிசையாக நினைத்துக் கொண்டால் தான் நிறைய வீணாகி யிருப்பதாய்த்தான் எனக்கே தெரிகிறது. நான் இனி மேலும் வீணாகக் கூடாதென்று முயன்று கொண்டிருக்கும் போது என் முயற்சியே வீணாகிவிட்டது. எனக்கு மீதமிருக்கிற இந்த ஒரு கண்ணால்கூட நான் பார்ப்பதற்கு இனி ஒன்றுமில்லைதான். இனி மேல் என்னுடைய வழி நிச்சயமாக இருண்டு போய் விட்டது. இனி நான் எந்த வழியைப் பார்ப்பதென்று எனக்கே விளங்கவில்லை. இதோ இப்போது இங்கே என் வழி

அடைக்கப்பட்டு இருண்டு போயிருப்பதைப் போல் நான் என்னுடைய எதிரியின் வழியை அடைத்து விடுவதற்கு நேர்ந்த சந்தர்ப்பங்களை யெல்லாம் நழுவ விட்டிருக்கிறேன். நானும் பெருநிதிச் செல்வரும் நண்பர்களாக இருந்து எங்களுக்கு வேறு எதிரிகளைத் தேடிக் கொண்ட காலம் மலையேறி விட்டது. மற்றவர்களை எதிர்ப்பதற்காகவும் கெடுப்பதற்காகவும் தங்களுக்குள் நண்பர்களாகச் சேர்ந்த இருவர் அதே கெடுதலையும் எதிர்ப்பையும் தங்களுக்குள் சொந்தமாகவே அநுபவிக்க நேரிட்டால் இப்படித்தான் ஆகும் என்கிற விளைவு இன்று எனக்குத் தீர்மானமாக விளங்கி விட்டது.'-

இருளில் கன்னத்தில் கையூன்றிய படியே அமர்ந்து இப்படியெல்லாம் நினைத்தபோது நகைவேழம்பருடைய மனத்தில் உணர்ச்சிகள் மாறி மாறிப் பொங்கின. சில விநாடிகள் எதற்காகவோ தான் ஆத்திரப்பட வேண்டும் போலவும், இன்னும் சில விநாடிகள் எந்த ஏமாற்றத்துக்காகவோ தான் வருத்தப்பட வேண்டும் போலவும் தோன்றியது அவருக்கு. கைத் தினவு தீர அந்த நிலவறையின் எல்லைக்குள் குவிந்து கிடக்கும் பொற்காசுகளை எல்லாம் வாரி இறைத்து விட வேண்டும் போல அவருடைய கைகளின் விரல்கள் துடித்தன. 'இப்படிச் சிறைப்பட்டதைப் போல நிலவறையில் அடைக்கப்பட்டு அவமானமடைவதற்குப் பதில் கடலில் தீப்பிடித்த அந்தக் கற்பூரப் படகிலேயே நான் மாண்டு போயிருக்கலாம்' -என்றும் நினைத்தார். பொழுது விடிகிற நேரத்தில் பெருநிதிச் செல்வருடைய வாழ்க்கையை ஒரேயடியாக இருளச் செய்து விடலாமென்று திட்டமிட்ட மனத்தோடு தான் வந்ததையும் அவரைப் பயமுறுத்தியதையும் இறுதியில் நிகழ்ச்சிகள் எப்படி யெப்படியோ மாறித் தன்னுடைய வாழ்க்கையே இருண்டு போய் விட்டதையும் நினைத்த போது 'இப்படித்தான் இது நடந்து விட்டது' என்று நடந்ததை முடிவாக நம்ப முடியாதது போலிருந்தது. அவ்வளவு வேகமாகவும் அது நடந்திருந்தது. தன்னுடைய அநுமானத்தால் தொட்டு முடிந்த எல்லைக்கு அப்பாலும் பெருநிதிச் செல்வரின் சூழ்ச்சித்திறன் அதிகமாய்ப் பெருகி வளர்ந்திருப்பதை இன்று நிதரிசனமாகப் புரிந்து கொண்டார் அவர்.

'சற்று முன் முத்துக்களைத் தேர்ந்தெடுக்கும்போதே என் போதாத காலத்தையும் தேர்ந்தெடுத்துக்கொண்டு விட்டேன்! 'இவர்களுக்கு முத்துக்களைத் தேர்ந்தெடுத்துக் கொடுங்கள்' என்று அவர் என் முதுகில் தட்டிக் கொடுத்த போது நான் என்னுடைய ஆத்திரத்தை மறைத்துக் கொண்டு அந்தக் கணமே அவருடைய பணியாளனாக மாறி விட்டது எவ்வளவு பெரிய அறியாமை?' - என்று தன்னுடைய தவற்றை எண்ணியபோது அந்த நிலவறையின் கருங்கற் சுவர்களும், தளமும், இற்று விழுகிற பெருங் குரலில் பயங்கரமாகக் கதறி அழவேண்டும் போலத் தோன்றியது அவருக்கு. அந்த, இருளடைந்த நிலவறையில் அடைபட்டுக் கிடக்கிறவரை பொற்காசுகளும், முத்தும், மணியும், எப்படித் தம் பயனையும், மதிப்பையும் பெறுவதற்கு முடியாதனவாகிப் பெறுமானமின்றி முடங்கி விட்டனவோ, அப்படியே தன்னுடைய ஆற்றலும் முடங்கி விட்டதாகத் தெரிந்தது அவருக்கு. பயன்படுத்துகிற வரையிலும் ஆற்றல்-மதிப்பு ஒன்றுமில்லாமல் போகிற காசுகளைப் போலவே தானும் ஒன்றும் செய்ய முடியாமல் அடைபட்டுக் கிடக்க நேர்ந்த போதாத காலத்தை எண்ணி எண்ணி நொந்தார் அவர். படிகளில் இறங்கிக் கீழே சென்றார். கால் வைத்த இடங்களில் எல்லாம் பொன்னும், மணியும் மிதிபட்டன. தான் நடக்கும் ஓசையே தன்னால் கேட்பதற்குப் பொறுமையற்ற ஒலியாக எதிரொலிப்பதுபோல ஒரு பிரமை உண்டாயிற்று. சக்கரவாளக் கோட்டத்து வன்னிமன்றத்துக்கு அருகில் காலாந்தகனைக் கொன்ற இரவை இப்போது அவர் மீண்டும் நினைத்துக் கொண்டார். வாழ்நாளிலேயே எதற்கும் நடுங்கி யறியாதவருக்கு இந்தச் சமயத்தில் அந்தப் பழைய நிகழ்ச்சியை நினைக்க நேர்ந்ததால் உடம்பு புல்லரித்தது.

'அடடா! ஓர் ஆதரவும் எட்ட முடியாத அநாதையாக அல்லவா இங்கே அடைபட்டு விட்டேன். நான் இப்படி அடைபட்டிருப்பது பைரவிக்குத் தெரிந்தால் அவளிடமிருந்து எனக்கு ஏதாவது உதவி கிடைக்கலாம். வன்னி மன்றத்திலிருக்கும் காபாலிகர்களை யெல்லாம் ஒன்று திரட்டிக் கொண்டு நள்ளிரவில் இந்த மாளிகையின்மேல் படையெடுத்து வந்தாவது என்னைக் காப்பாற்றி விடுவான். ஆனால் அவனுக்கு இதை யார் போய்த் தெரிவிப்பார்கள்? இனிமேல் இந்த நிலவறைக்கு வெளியே உள்ள உலகத்துக்கு நான் செத்துப் போய்விட்டது போலத்தான். 'நான் இன்னும் வாழ்கிறேன். சாகவில்லை'— என்பதை உலகத்துக்கு நிரூபிப்பதற்கு இனி என் வசம் என்ன இருக்கிறது?'-

தனக்குள் என்னென்னவோ எண்ணியபடியே சிறைப்பட்ட புலியைப்

போலச் சுற்றிச் சுற்றி அந்த நிலவறையில் நடந்தார் அவர். எது நடக்கவில்லையோ அது நடந்திருந்தால் என்னவென்று எண்ணிப் பார்க்கும் பொய்க் களிப்பிலும் அவருடைய மனம் ஈடுபட்டது. பெருநிதிச் செல்வரின் மனைவியும் வானவல்லி முதலிய பெருமாளிகைப் பெண்களும் அப்போது முத்துக்களுக்காக நிலவறைக்குள் வந்திராவிட்டால் தானே பெருநிதிச் செல்வரை இப்போது தன்னை அவர் அடைத்துப் போட்டிருப்பது போல அடைத்துப் போட்டு விட்டோ, அழித்துப் போட்டு விட்டோ வெளியேறி யிருக்கலாம் என்று எது நடக்கவில்லையோ அதை நினைத்தார் நகைவேழம்பர். அப்படி அவரைத் தான் அடைத்துவிட்டுத் தப்பி யிருந்தால் இந்த நிலவறையின் இருண்ட மூலையில் அவர் என்னென்ன எண்ணித் தவிப்பார் என்று எதிரிக்குத் துன்பங்களைப் புலைவித்துக் கற்பனை செய்யும் பொய்ச் சுகத்தில் சிறிது நேரம் வரை தன்னை மறந்திருந்தார் அவர். குருட்டுக் கற்பனையாகக் கண்ணை மூடிக் கொண்டு இப்படி எண்ணியவாறே நிலவறை இருளில் நடந்தபோது எதிரே ஆள் உயரத்துக்கு நின்ற ஐம்பொன் சிலையில் தன் நெற்றிப் பொட்டு இடித்து 'விண் விண்' என்று தெறிக்கும் வலியோடு அலறினார் அவர். அந்தக் குரூரமான அலறல் ஒலி சுழன்று சுழன்று செய்த பாவங்கள் செய்தவனையே திரும்ப அணுகுவது போல் நிலவறைக்குள்ளேயே எதிரொலித்தன. நெற்றியில் இரத்தம் கசிந்தது. புருவமேடுகள் வலி பொறுக்க முடியாமல் துடித்தன. இரண்டு கைகளாலும் நெற்றியை அப்படியே அழுத்திக் கொண்டு கீழே உட்கார்ந்தார் அவர்.

தான் அப்படி எவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தோம் என்று அவருக்கே தெரியாது. நடுவில் ஒரே ஒரு முறை நிலவறையின் மேற் பக்கத்தில் கதவு திறக்கப்பட்டுத் திறக்கப்பட்ட வேகத்திலேயே மூடப்படுவதுபோல் ஓசை கேட்டது. அப்போது அவருக்கிருந்த வலியின் வேதனைகளில் அந்த ஓசையையும் பொருட்படுத்தத் தோன்றவே இல்லை. அப்படியே கதவு திறக்கப்பட்ட ஓசையைப் பொருட்படுத்தத் தோன்றியிருந்தாலும் அவர் அதைப் பொருட்படுத்துவதற்குள் கதவு மூடப்படுகிற விரைந்த ஓசையும் கேட்டிருக்கும். அவர் பொருட்படுத்தியதற்குப் பயன் ஒன்றும் கிடைத்திராது.

சிலையில் மோதி இடித்த இடத்தில் நெற்றிமேடு அப்பமாக வீங்கி யிருந்தது. தளர்ந்த நடையில் ஒவ்வொரு படியாக மேலே ஏறி மீண்டும் கதவருகே அவர் சென்றபோது சிறிது நேரத்துக்கு முன் கதவுவிரைவாகத் திறந்து மூடுவதுபோல் ஓசை கேட்டதன் காரணம் அந்த இடத்தில் அவருக்கு விளங்கிற்று.

அங்கே கதவுக்குக் கீழே இருந்த முதற்படியின் மேல் ஒரு மண் மிடா நிறையச் சோறும் பக்கத்திலேயே இன்னொரு மண் கலயத்தில் குடிப்பதற்குத் தண்ணீரும் வைக்கப் பட்டிருந்தன. அவற்றையும் அவை அங்கு அலட்சியமாக வைக்கப்பட்டிருந்த சூழ்நிலையையும் பார்த்தபோது நகைவேழம்பருக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது.

''எனக்குச் சோறு ஒரு கேடா?''- என்று கத்திக் கொண்டே படிமேல் ஏறி நின்று அந்த மண் கலயத்தையும் மிடாவையும் காலால் ஓங்கி உதைத்தார் அவர். அவை படிகளில் உருண்டு உடைந்து சிந்திச் சிதறின. அதே சமயத்தில் மேலே பெருநிதிச் செல்வர் யாரிடமோ பேசிவிட்டு இரைந்து சிரிக்கிற ஒலியைக் கேட்டு அவருடைய கொதிப்பு இன்னும் அதிகமாயிற்று. அந்தச் சிரிப்புத் தன் செவிகளில் கேட்க முடியாத தொலைவுக்கு ஓடிப்போய்விட வேண்டுமென்று அவர் நிலவறைப் படிகளில் கீழே இறங்குவதற்குத் தாவிய போது உடைந்த மிடாவிலிருந்து அங்கே சிதறியிருந்த சோறு அவர் காலில் பட்டு நன்றாகச் சறுக்கி விட்டது.

# 15 - பாவங்களின் நிழல்

நகைவேழம்பர் நிலவறைக்குள்ளே படிப்படியாய் வீழ்ந்து கொண்டிருந்த அதே நேரத்தில் பெருநிதிச் செல்வர் மேலே மாளிகைக்குள் தன் மகள் வானவல்லியிடம் மிக உற்சாகமாகப் பேசிக் கொண்டிருந்தார்.

''நீ நல்ல காரியம் செய்தாய் பெண்ணே! என் குறிப்பைப் புரிந்து கொண்டு நீ திரும்பி விடாமல் நிலவறைக்குள் இறங்கி வந்ததனால்தான் நான் இவ்வளவும் செய்ய முடிந்தது. சுருக்கமாகச் சொன்னால் நீதான் இன்று என்னைக் காப்பாற்றி யிருக்கிறாய்......''

''எங்களுக்காக நகைவேழம்பர் முத்துக்களைப் பொறுக்கிக் கொண்டிருந்த போது நீங்கள் நிலவறையிலிருந்து ஓசைப்

படாமல் வெளியேறுவதற்குமுன், 'நான் போகிறேன். நீங்களும் முத்துக்களைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு காலதாமதமின்றி உடன்மேலே ஏறி வந்துவிடுங்கள்' என்பதுபோல எனக்குச் சைகை செய்தீர்களே; அப்போதுதான் உங்கள் குறிப்பும் நோக்கமும் எனக்கு நன்றாகப் புரிந்தது அப்பா. நீங்கள் ஏதோ ஒரு காரணத்துக்காக அப்போது அந்த மனிதனிடமிருந்து விலகித் தப்பிச் சென்றுவிட எண்ணுகிறீர்கள் என்று நான் ஒருவாறு அனுமானித்துத் தெரிந்துகொள்ள முடிந்தது. என்னோடு வந்திருந்த தோழிப் பெண்களையும், அம்மாவையும் இழுத்துக்கொண்டு நான் படியேறி மேலே திரும்பி வருகிற வரை எனக்கும் பயம் தான். நாங்கள் எல்லாரும் மேலே வந்து சேர்ந்தவுடன் கதவருகே காத்திருந்த நீங்கள் நிலவறையை மூடிய பின்பு தான் எனக்கு நிம்மதியாக உயிர்ப்பு வந்தது அப்பா!''



''நிலவறைக்குள் நீங்கள் எல்லாரும் முத்துத் தேர்ந்தெடுக்க நுழைகிற வரை அங்கே எனக்கு உயிர்ப்பே இல்லை வானவல்லி! நான் எதையோ நினைத்து அந்தக் குருடனை நிலவறைக்குள் அழைத்துக்கொண்டு சென்றேன். கடைசியில் அது வேறு விதமாக மாறி என் உயிரையே நான் இழக்கும்படி நேரும்போலாகி விட்டது. இத்தகைய சந்தர்ப்பங்களில் அவனுடைய கோபத்தை அவன் இழக்கும்படி செய்ய வேண்டுமானாலும் அதைவிட அதிக மதிப்புள்ளவற்றையும் நான் அவனுக்காக இழந்து விடத் துணிவது போல அவன் எதிரே ஒரு போக்குக் காட்ட வேண்டும். அவன் ஆத்திரப்படும் போதுகளில் எல்லாம் நான் இப்படிப் போக்குக் காட்டித்தான் அவனுடைய ஆத்திரத்தைத் தணித்துப் பழையபடி அவனை என்னுடைய நன்றிக்கு அடிமையாக்கிக் கொள்வது வழக்கம். இன்றும் அதே முறையை மேற்கொள்ளத்தான் அவனை இந்த மாளிகையின் செல்வங்கள் எல்லாம் குவிந்திருக்கும் நிதியறையான நிலவறைக்குள் அழைத்துக் கொண்டு சென்றேன். ஆனால் இன்று அவனுடைய ஆத்திர நோய்க்கு என்னுடைய பழைய மருந்து பொருந்திக் குணம் தரவில்லை. என்னுடைய தந்திரங்களே தம் ஆற்றலில் நலிந்து போய் மிக நல்ல சமயத்தில் என்னைக் கைவிட்டு விட்டன: நான் விழிப்பாயிருக்கத் தவறி விட்டேன். 'நம்முடைய வழக்கமான பழைய தந்திரங்களில் அவற்றுக்கு ஆளாகிறவர்கள் சந்தேகப்படத் தொடங்கி விட்டார்கள் என்று அறியும் போதே நாம் புதிய தந்திரங்களுக்கு மாறிவிட வேண்டும்' என்று அரச தந்திரிகளுக்குச் சொல்லியிருக்கிற இரகசியத்தை என்னைப் போன்ற வாணிகர்களும் கடைப்பிடிக்கலாம் பெண்ணே! நான் எதற்காக இப்படியெல்லாம் சூழ்ச்சிகளைப் புரிந்து கொண்டும் சூழ்ச்சிகளுக்கு ஆளாகியும் துன்பங்களை அடைகிறேன் என்று புரியாமல் உங்களுக்கெல்லாம் என்மேல் சந்தேகம் உண்டாகலாம். ஆனால் என் வாழ்க்கை இவற்றில்தான் நடக்கிறது. இவற்றால்தான் நடக்கிறது. இவற்றால்தான் முடியவும் போகிறது'' என்று மகளிடம் உணர்ச்சி குமுறக் குமுறப் பேசினார் பெருநிதிச் செல்வர்.

அதுவரை எதிரே நின்று கேட்டுக் கொண்டிருந்த வானவல்லிக்கு இப்போது தந்தையாருடைய முகத்தைப் பார்ப்பதற்கே பயமாக இருந்தது. தான் அவரிடமிருந்து கேட்கக் கூடாததும், கேட்க வேண்டாததுமாகியவற்றைக் கேட்பதாக உணர்ந்து அஞ்சினாள் அவள். ஆனால் அவரோ நிறுத்தாமல் பேசிக்கொண்டிருந்தார்:

''சிறு வயதில் நீ கற்றிருக்கிற அறநூல்களும், நீதி நூல்களும் இவற்றையெல்லாம் பாவம் என்று உனக்குக் கற்பித்திருக்கும். ஆனால் உலகத்தில் தோன்றியிருக்கிற அறநூல்கள் எல்லாம் எவை எவைகளைப் பாவங்களாகச் சொல்லியிருக்கின்றனவோ அவைகளோடு மட்டும் உலகிலுள்ள பாவங்களின் எண்ணிக்கை முடிந்து விடுவதாகத் தெரியவில்லை. எத்தனை எத்தனையோ புதிய பாவங்கள் வளர்கின்றன பெண்ணே! நான் எல்லாவகைப் பாவங்களிலும் அழுந்தி நிற்கிறேன். இன்னும் விரும்பிச் செய்வதற்குப் புதிய பாவங்களைத் தேடிக்கொண்டே யிருக்கிறேன்; அப்படித்தான் என்னால் இருக்க முடியும்: ஆனால் இந்தக் குருடனைப் போல எனக்கே பாவங்களைச் செய்கிறவனை என்னால் மன்னிக்க முடியாது. உலகில் கழுத்து வரை பாவங்களில் அழுந்திக் கொண்டு நின்றாலும்-நான்தான் பிறரை

அழித்துக் கொண்டு நிற்க வேண்டும். என்னை யாரும் அழித்துவிட முயலக்கூடாது. இது என் வாழ்க்கையின் இரகசியம்..''

வெறி முற்றுவதுபோல் பேச்சு வளர வளரத் தந்தையின் முகம் கண்களில் குருதி உமிழ்ந்து கொண்டே எதிரே வந்து நிற்கும் பேயின் முகம்போல மாறித் தெரிவதைக் கண்டு வானவல்லி அங்கிருந்து உடனே ஓடிவிட வேண்டும் போல அவ்வளவு அதிகமாக அச்சமடைந்தாள். அவர் கூறிக்கொண்டு வருகிறவைகள் எல்லாம் தனக்கு எச்சரிக்கையா, பயமுறுத்தலா, அல்லது ஆத்திரத்தில் விளைகிற வெறும் பேச்சா என்று புரிந்து கொள்ள முடியாமல் மனம் குழம்பினாள் அவள். - இதற்கு முன்பு என்றும் அவளிடம் அவர் இப்படிப் பேசியதில்லை. இப்படித் தன்னிடம் பேசுவதில் அவருடைய பலம் தெரிகிறதா, பலவீனம் தெரிகிறதா என்பதும் அவளுக்குத் தெரியவில்லை. கேட்கிறவரைச் சிந்திக்க விடாத விரைவுடன் வெள்ளமாகப் பாய்ந்து வருகிற மூட்டுப் பேச்சாக இருந்தது அது. பேச்சு நிற்கிற இடைவெளியாக வாய்க்கும் சில கணங்களிலும் இடி யிடி யென்று கொடிய பேய்ச் சிரிப்புச் சிரித்தார் அவர். தன் தாயும்தோழிகளும் அந்தப்புரப் பகுதிக்குச் சென்றபோதே தானும் அவர்களோடு போய்விடாமல் அவரோடு தங்கியது தவறு என்று இப்போதுதான் வானவல்லி உணர்ந்தாள்.

அவர் எவனோ ஒரு ஊழியனை வரவழைத்துச் சோறும் நீரும் கொண்டு வரச்செய்து நிலவறைக் கதவை மெல்லத் திறந்து உள்ளே வைத்து விட்டு மூடிய போதும் அவள் அவரருகேதான் இருந்தாள். அடுத்துச் சிறிது நாழிகைக்குப் பின் உள்ளே நிலவறையில் சோற்றுமிடாவும் நீர்க் கலயமும் உடைபடுகிற ஓசையும், தொடர்ந்து வேறு ஓசைகளும் கேட்டபோதும் கூட அவள் அவரோடு தான் இருந்தாள். நிலவறையிலிருந்து அந்த ஓசைகள் மேலே ஒலி மங்கிய விதத்தில் கேட்கும் போதெல்லாம் தந்தையின் முகத்தில் உணர்ச்சிகள் மாறி வருவதையும் வானவல்லி கூர்ந்து கவனித்தாள். அவரைப் புரிந்துகொள்ள அவளால் முடியவில்லை. விதம் விதமாக மாறினார் அவர்.

''அடிபட்ட நாயாய் உள்ளே சிறைப்பட்டுக் கிடந்து உடம்பில் கொழுப்பு வற்றி எலும்பும் தோலுமாய்க் காய்ந்து போய் மறுபடி இந்த நிலவறையிலிருந்து வெளியேறும்போது, இவன் நான் விடுகிற மூச்சுக் காற்றில் தடுமாறி விழ வேண்டும். மறுபடி என்னிடம் ஆத்திரப்பட்டு என்னை எதிர்ப்பதற்கு இவனிடம் ஆத்திரமோ, வலிமையோ மீத மிருக்கக் கூடாது. அப்படிக் காய வைத்தால்தான் புத்திவரும் இந்தக் குருடனுக்கு!''



இவ்வாறு பேசிக்கொண்டே வந்த தந்தையார் தாம் நின்று பேசிக்கொண்டிருந்த இடத்தின் வாயில் நிலையருகே இருந்த தமது ஊன்றுகோலைப் பார்த்து விட்டு அதை எடுப்பதற்காகக் காலைச்

சாய்ந்துச் சாய்ந்து நடந்து விரைந்ததைக் கண்டு தானே எடுத்து வந்து முந்திச் சென்று அதை அவர் கையில் கொடுத்தாள் வானவல்லி. அதைப் பெற்றுக் கொள்ளும்போது அவருடைய கைகள் நடுங்கின. அப்படி நடுங்குவதை அவர் மறைத்துக்கொள்ள முயன்றும் வானவல்லி கூர்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டாள்.

''இந்த ஊன்றுகோல் ஒன்றுதான் நான் மெய்யாக நம்ப முடிந்த துணை பெண்ணே! சில சமயங்களில் மனிதர்களை மட்டும் நம்பிக்கொண்டு காலூன்றி நிற்க முடிவதில்லை. முதல் வசதி மனிதர்களைப்போல இதற்கு மனம் இல்லை. மனம் இருந்தால் இதுவும் எனக்கு எதிராக முயன்று ஏதாவது செய்து என் காலை இடறிவிட முயன்றாலும் முயலலாம்'' —என்று வானவல்லியிடம் சொல்லிக் கொண்டே வேறு புறமாகத் திரும்பி அந்த ஊன்றுகோலின் பிடியை மெல்லத் திருகினார் பெருநிதிச் செல்வர். அதுதான் சமயமென்று வானவல்லி அங்கிருந்து நழுவிட முயன்றாள். அவள் அங்கிருந்து வெளியேறிப் போய் விடுவதற்குத் தவிக்கிறாள் என்பதை ஏற்கெனவே தெரிந்துவைத்துக் கொண்டிருந்ததுபோல் 'இரு! போகலாம்' என்றார் அவர். தந்தையார் ஊன்றுகோலின் கைப்பிடியை ஏதோ செய்து கொண்டு தன் பக்கம் திரும்பிப் பார்க்காமலே இப்படிக் கூறியதைக்கேட்டபோது அவருடைய கட்டளையை மீறப் பயந்து அங்கேயே நின்றுவிடுவதா, மீறிப் போய்விடுவதா என்று சிந்தித்தபடி நின்ற இடத்திலேயே தயங்கினாள் வானவல்லி.



அப்போது அவரே ஊன்றுகோலின் பிடியைத் திருகி அழுத்திக் கொண்டு அவள் பக்கமாகத் திரும்பினார்.

''பெண்ணே! நில். நீ போவதற்கு ஒன்றும் அவசரமில்லை. சற்று முன்பு இந்த ஊன்றுகோலைப் போல மனமும் சிந்தனையும் இல்லாத பொருள்கள் யார் காலையும் இடறிவிடாமல் ஊன்றி நின்று கொள்ளத் துணை புரியுமென்று கூறினேனே. அதுவும் தவறான கருத்துத்தான். இப்படிப் பொருள்கூடச் சில சமயங்களில் நிற்கத் துணை புரியாது இடறி ஏமாற்றி விடுகின்றன. இதோ பார்!'' என்று கூறி, அந்த ஊன்றுகோலை வீசி எறிந்தார். அது பிடி வேறு தண்டு வேறாகக் கழன்று பிரிந்து விழுந்தது. அப்போது வானவல்லி சீற்றம் கொதிக்கும் அவர் முகத்தில் பாவங்களின் நிழலை எல்லாம் பார்த்தாள். (தொடரும்)




# பரிசீலனைக்குப் பின் விநியோகம்

மோட்டார் உறுப்புகள் உற்பத்தியாளர் நம் நாட்டில் பலர். உறுப்புகள் விநியோகத்தை மேற்கொள்ளுமுன், நாங்கள் ஒவ்வொரு உறுப்பையும் தரம், நயம், உழைப்பு முதலியவற்றிற்கு பரிசீலனை செய்து, பின்புதான் ஏற்றுக்கொள்கிறோம். இக்காரணத்தினால்தான், "டிவிஎஸ் விநியோகிக்கும் உறுப்பு, உழைப்பில் சிறந்தது" என்பது பழமொழிபோல், உலவுகிறது.

**நாங்கள் விற்பனை செய்யும் இந்தியாவில் தயாரித்த உறுப்புகளில் சில:**

'ஸ்டாண்டர்ட்' பாட்டரி; 'அல்லெட்' பல்புகள்; 'பெரோடோ' பிரேக் லைனிங்; 'பென்னர்' பான் பெல்டுகள்; 'டபின் லைப்' சேஸிஸ் பாகங்கள்; 'எச் அண்ட் டி' பிரேக் டிரம்கள்; 'மைகோ' பியூயல் இன்ஜெக்ஷன் பாகங்கள்: 'டிரான்கோ' (இந்தியன்) வால்வுகள்; 'கானரா' ஸ்பிரிங், லீவுகள்; QHL - RANE டை ராடு எண்டுகள் ; 'ஹெல்லா' ஹாரன்கள் (இந்தியன்)

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்.**

மதுரை-திருச்சி-திருநெல்வேலி-புதுக்கோட்டை-சேலம்-கோயமுத்தூர்




**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்**

மதராஸ்-பெங்களூர்-செகந்திராபாத்

**மதராஸ் ஆட்டோ சர்விஸ் பிரைவேட் லிமிடெட்**

மதராஸ்-பெங்களூர்

JWT/TVS-14996

# நினைவு

சரோஜா ராமமூர்த்தி

தபால்காரர் 'போஸ்ட்' என்று குரலை உயர்த்தி அழைத்து ஓர் ஐந்து நயா பைசா கார்டை என்னிடம் கொடுத்து விட்டு நகர்ந்தார். கார்டிலே இருந்த கையெழுத்து எனக்கு மிகவும் பழக்கமான எழுத்துத்தான். பம்பாயிலிருந்து என்னுடைய பாட்டி கடிதம் போட்டிருந்தாள். வெறும் அட்டைதான் என்றாலும், விலைமதிக்க முடியாத அன்பையும், பரிவையும் தாங்கி அந்தக் கடிதம் வந்திருக்கிறது. பாட்டி என்னுடன் நேரில் உட்கார்ந்து பேசுவதைப் போன்ற பிரமையை அந்த எழுத்துக்கள் கண்டிப்பாக எழுப்பக் கூடியவை. ஆனால், தபால்காரர் கடிதத்தைக் கொடுத்தவுடன் படிக்க முடியாதபடி எனக்கு வீட்டில் ஓரே அலுவல்கள். பள்ளிக்கூட அவசரம், ஆபீஸ் அவசரம் வேறு சேர்ந்து கொண்டன.

கடிதத்தை வாங்கிச் சமையலறை மாடத்தில் வைத்து




விட்டு என் அலுவல்களைக் கவனிக்கப் போய் விட்டேன். ஒன்பதரைக்கு வந்த கடிதத்தைப் படிக்க அவகாசமில்லாமல் ஒதுக்கி வைத்து விட்டு, சாப்பிட்டு முடித்தவுடன் வெற்றிலைத் தட்டுடன் கூடத்துக்கு வந்தவளை அலமேலு மாமி குசலம் விசாரிக்க வந்து விட்டாள்.

வேறொன்றுமில்லை. மாமி கதை எழுதுகிறாளாம். ஒன்று கூடப் பத்திரிகையில் இது வரையில் வெளிவரவில்லையாம். அறிந்தவர் எல்லோருமே கதைகள் நன்றாக இருப்பதாக 'சர்டிபிகேட்' கொடுத்திருக்கிறார்கள்.

ஆனால், இந்தப் பத்திரிகை ஆசிரியர்கள் மட்டும் கதைகளை வேண்டுமென்றே உடனே மறு தபாலில் திருப்பி விடுகிறார்களாம்! எப்படியும் தன்னுடைய ஒரு கதையாவது பத்திரிகையில் வரத்தான் வேண்டுமாம்.

கண்டிப்பாகவும், குழைவாகவும் அலமேலு மாமி தன்னுடைய குற்றச்சாட்டைக் கூறியவாறு நாலைந்து கதைகளை எனக்கு முன்னால் வைத்தாள்.

நோஞ்சான் குழந்தை மாதிரி ஒன்று இரண்டே பக்கத்தில் கசங்கிப் பரிதாபமாக இருந்தது. கதையைப் பிரித்துப் பார்த்தேன். நோஞ்சான் குழந்தைக்குத் தேவையான அத்தனை சத்துக்களும் இந்த நோஞ்சான் கதைக்குத் தேவையாக இருந்தன. நிதானமாகப் படித்துப் பார்த்து வைப்பதாகச் சொல்லி நோஞ்சான் கதையை வாங்கி வைத்துக் கொண்டேன். மாமியும் பரம திருப்தியுடனும், நம்பிக்கையுடனும் எழுந்து போய் விட்டாள்.

பதினொரு மணிக்கு அமைதி கண்டு விட்ட எங்கள் தெருவை எட்டிப் பார்த்து விட்டுத் தெருக் கதவைத் தாழிட்டுக்கொண்டு கடிதத்துடன் ஊஞ்



சலில் சாய்ந்து உட்கார்ந்து படிக்க ஆரம்பித்தேன். வெற்றுக் கடிதம் படிப்பல்ல. பாட்டியுடன் நேருக்கு நேர் பேசுவதாக எழுந்த கற்பனை வெள்ளத்தில் திளைத்துக் கடிதத்தை நான்கு தடவைகள் ஊன்றிப் படித்தேன்:

'சௌபாக்கியவதி லக்ஷ்மிக்கு, ஆசீர்வாதம். க்ஷேமம். க்ஷேமத்துக்கு எழுது. இப்பவும், நானும், உன் மாமா, மாமி, குழந்தையுடன் இந்தமாதம் இருபத்திரண்டாம் தேதி வாக்கில் சென்னை வந்து சேருகிறோம். கைக் குழந்தைக்குத் திருப்பதிக்கு முடி கொடுக்க வேண்டும். மற்றவை நேரில்.

இப்படிக்கு,
உன் அன்புள்ள பாட்டி
பாகீரதி அம்மாள்

பாட்டி வருகிறாள், பாட்டி வருகிறாள்! ஊஞ்சலில் சாய்ந்திருந்தவாறு என்னையே நான் மறந்திருந்தேன். அப்போது உள்ளத்தில் நினைவு மலர்களாக எத்தனை எத்தனை எண்ணங்கள் பூத்துக் குலுங்கின?

திடீரென்று நான் பத்து வயதுச் சிறுமியாக மாறி விடுகிறேன். காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதருக்குப் பிரும்ம உத்சவம் என்றும் என்னை அனுப்பும்படியும் இதே மணிமணியான கையெழுத்தில் அப்பாவுக்குப் பாட்டியிடமிருந்து கடிதம் வருகிறது. பள்ளிக்கூடம் விடுமுறை கிடையாதுதான். பங்குனியில் திருவிழா. பரீக்ஷை வந்து விடுமே என்று அம்மா வேண்டாமென்கிறாள். நானா கேட்கிறவள்? பிடித்தால் ஒரே பிடியாயிற்றே. எதிர்ப்புகளைச் சமாளித்துக் கொண்டு காஞ்சிக்குப் போய்ச் சேர்ந்து விடுகிறேன். இரட்டைக்கட்டு வீடு சன்னிதித் தெருவில் அமைந்திருக்கிறது. தெருவில் பெரிய தேர்க் கோலம் போட்டுச் செம்மண் பூசியிருக்கிறார்கள். வாசலில் இரண்டு பக்கமும் பெரிய திண்ணைகள். திண்ணைக்குக் கீழே பன்னீர் மரம். திண்ணையில் உட்கார்ந்து பார்த்தாலே விண்ணை முட்டும் கோபுரம். அதன் உச்சியில் நீல மின்விளக்கு;

எதிரே நாலு கால் மண்டபம்.

கோபுர வாயிலிலிருந்து தெருவை அடைத்து உயரமும், நீளமுமான பந்தல்கள் போட்டிருக்கிறார்கள். பந்தலுக்குள் வளையல் கடைகள், ரிப்பன் கடைகள், மாக்கல் மரச் சொப்புகள் (பிளாஸ்டிக் யுகத்துக்கு முந்தைய காலம்!) மரப்பாச்சிகள், கம்மர்கட்டு, என்னுருண்டை, வண்ண மிட்டாய்கள். அத்துடன் காஞ்சிபுரத்து மல்லிகைச் செண்டுகள் அடங்கிய புஷ்பக் கடைகள்.



காலையிலும், மாலையிலும் சுவாமிக்கும், அம்பிகைக்கும் அலங்காரம் செய்வதுபோல் எனக்கும் ராக்கோடி, குஞ்சலங்கள் வைத்துப் பின்னி விடுவாள் பாட்டி. தலை நிறைய மல்லிகை மணக்கும். கையிலே ஏகப்பட்ட காசு. ரிப்பன், பொம்மைகள், சொப்புகள் வாங்கிப் பைகளில் நிறைத்துக் கொள்வேன். நான் முழுதும் பந்தலில் சுற்றி விட்டு விளக்கு வைத்ததோ இல்லையோ, தூக்கம் கண்களைச் செருக வீட்டினுள் நுழைந்தவளைத் தலையில் இரண்டு குட்டுக் குட்டித் தயிர் சாதத்தை வாயில் உருட்டி உருட்டி அடைத்து விடுவாள் என் பாட்டி.

அப்புறம் எப்பொழுது தூங்கினேன் என்பதே எனக்குத் தெரியாது. எங்கோ கனவு உலகத்தில் பாண்டும், மேளமுமாக முழக்கிக் கொண்டு, 'டுமீல் டுமீல்' என்ற சத்தத்துடன் பேரிரைச்சலாய் ஏதோ வருகிறாற்போல் தோன்றும். சில்லென்று மூடியிருக்கும் என் இமைகளைத் தண்ணீரால் தடவி, ''லக்ஷ்மி, லக்ஷ்மி...சுவாமி கிளம்பி வரார், பார். எழுந்திருடி அசடு...உத்சவம் பார்க்க வந்தாயா? தூங்க வந்தாயா?'' என்று பாட்டி உலுக்கி எழுப்பி விடுவாள்.

எதிரே ஜகஜ்ஜோதியாக ஏகாம்பரநாதரும், காமாட்சியும் மாவடி நிழலில் அமர்ந்து ஊர்வலம் வருவார்கள். இன்று நினைத்தாலும் மெய் சிலிர்க்கும் காட்சி. இந்த நினைவு என்கிற ஒன்றை மட்டும் இறைவன் ஏற்படுத்தாமல் இருந்தானில் மனித வாழ்க்கையின் தடமே மாறி விட்டிருக்கும். பழைய இன்ப நினைவுகளில் புதிய துன்ப நினைவுகளைக் கரைக்க முடிகிறதல்லவா?

எல்லாவற்றையும் விட இறைவியின் திருக்கல்யாண விழா மிகவும் சிறப்பாக இருக்கும். காலையில் திட வைராக்கியத்துடன் ஒற்றைப் பூச்சரத்துடன் திருவாபரணம் ஏதுமின்றி அரனை நோக்கித் தவம் செய்யச் சம்பா நதிக்கரைக்குக் கிளம்பி விடுவாள். முகத்தில் அருளும், தெய்வீகக் காதலின் ஒளியும் சுடர அன்னையின் அருந்தவக் கோலம் என் மனத்தை வெகுவாக ஈர்த்த நினைவுகளில் ஒன்று. 'பாட்டி அன்று என்னை அந்த வயதில் இந்த அருங் காட்சியைக் காண அழைத்திராவிடில் இன்று அதை எண்ணி இறும்பூது எய்தும் வாய்ப்பை நான் கண்டிப்பாக இழந்திருப்பேன். காதலின் பெருமையும், அதன் தெய்வீகத் தன்மையும் தேய்ந்து வெறும் சொல் அலங்காரத்திலும், குதிப்பிலும் காதல் மலிந்து கடைச்சரக்காகி விட்ட இந்தக் காலத்தில் அந்த அரிய காட்சி என் மனத்தில் எப்படிப் பதியப் போகிறது?

இளமையில் பதிவாகிற எண்ணங்களின் எதிரொலிதானே வாழ்க்கை.

மறுபடியும் திருவிழா கழிந்து நான் ஊர் திரும்பியதும் பள்ளிப் படிப்பில் கவனம் சென்றதைவிட, காஞ்சிக் கோயில்களில் என் எண்ணங்கள் தேங்கி நின்றன. அங்கேயே ஆண்டு முழுதும் இருக்க வேண்டும் என்கிற ஆசை. அதற்கு விரைவிலேயே வாய்ப்பும் கிட்டியது. தாய் என்கிற செல்வத்தை நான் தொலைத்துவிட, தாயின் இடத்தில் பாட்டி அமர்ந்து என் முகத்தை ஆதரவுடன் தடவி அணைத்துக் கொண்ட நினைவு எக்காலத்திலும் பசுமையானது.

அந்த அணைப்பிலே அன்பு, கண்டிப்பு, கடமை ஆகிய பல சட்ட திட்டங்கள் ஊடுருவிச் சென்றன. 'தாய் இல்லாத பெண் தறிதலை' என்று யாரும் என்னைக் குற்றம் சொல்லக் கூடாதாம். பாட்டியின் கண்டிப்பு அது:

வைகறைப்பொழுதில் ஒருநாள் பாட்டி என்னை அவளுடன் எழுப்பி விட்டாள். பல் தேய்த்து முகம் கழுவிப் பொட்டு வைத்து, திருவிளக்கை ஏற்றி விட்டு, சமையலறையில் முன்னாள் தோய்த்த தயிர் ஆடையைக் கடைந்து வெண்ணெய் எடுக்க வேண்டும். ஆமாம்.....உத்தரவென்றால் உத்தரவுதான்.

அந்தப் பழக்கத்தில் இன்று கூடக் காலையில் கையில் பிசிறிய வெண்ணெயின் நடுவே பாட்டியின் முகம் பளிச்செனத் தெரிந்தது. தாழம்பூ நிறம், படிப்படியான நரைத்த கூந்தல், எடுப்பான நாசி, கண்டிப்பும் குழைவும் கொண்ட கண்கள். அவளைப்போல் நான் ஒன்றும் அழகியில்லை. அவள் என்னவோ நான் அவளைப் போல இருப்பதாகச் சொல்லிக் கொண்டிருந்தாள்.

'எங்கள் லக்ஷ்மிக்கு முகத்தில் நல்ல களை. அவளை வலிய வந்தே எவனாவது கல்யாணம் பண்ணிக் கொள்ளப்போகிறான்.' - பாட்டியின் ஜோசியம் இது.

பிற்காலத்தில் இவர் என்னை வலிய வந்து தேடி வந்து மணந்து கொண்டார். மாலையும் கழுத்துமாக நாங்கள் அவளை நமஸ்கரித்த போது அந்த அன்பு உள்ளம் மனங்கனிய வாழ்த்திய வாழ்த்துக்களின் பிரதிபலிப்பை நான் இன்று நிறைவோடு அனுபவித்து வருகிறேன்.

மாலை என் மகள் கிரிஜா பள்ளிக்கூடத்திலிருந்து வந்தாள். பறந்து கொண்டு சமையலறைக்குள் சிற்றுண்டிக்காக ஓடினாள். நான் அவளுக்கு முன்பாகச் சென்று, "இதோ பார்! பம்பாய்ப் பாட்டி இந்த மாசம் இருபத்திரண்டாம் தேதி வருகிறாளாம். வெண்ணெயை ரொட்டிக்குப் போட்டுக் கொள்ளாதே. நல்ல நெய்யாக உருக்கி வைக்க வேண்டும்...நமக்குக் கடையில் வாங்கிக் கொள்ளலாம்" என்றேன்.

அவள் உற்சாகத்துடன் வீட்டார் எல்லோரிடமும் செய்தியைச் சொல்லி விட்டாள்.

"பாட்டியா வருகிறார்? கடிதம் வந்ததா?" என்று கணவர் கேட்டவாறு வந்தார்.

"ஆமாம்."

"இனிமேல் இந்தக் தேவியின் தரிசனம் கிடைப்பதே அரிதாகிவிடும். பாட்டியோடு மாம்பலம், மயிலாப்பூர் என்று சுற்றிக் கொண்டே இருப்பாய். பம்பாயில் இருப்பவர்கள் சென்னைக்கு வந்தால் சென்னையையே விலைக்கு வாங்கி விடுவார்கள். பாக்குப்பொடி, காப்பிக் கொட்டையிலிருந்து சீயக்காய்ப் பொடி வரை வாங்கி மூட்டை கட்டத் தான் அவர்களுக்கும் பொழுதிருக்கும்."

நான் மௌனமாக இருந்தேன். பம்பாய்க்காரர்கள் வாங்கி வருகிற 'தூத் பேடா' மட்டும் இவருக்கு அலுக்காது. தூக்கு நிறைய இருந்தாலும், போக வர ஒரு கை பார்த்து விடுவார்.

பாட்டியும் தொடிக் கொருதரம் இவருக்கு உபசாரம் செய்தவாறு இருப்பாள்.

"ஆமாம், வருகிறவர்கள் வெறுமனே சென்னையுடன் போய் விடுகிறார்களா? இந்தத் தடவை மகாபலிபுரம் அழைத்துப் போக வேண்டும்" என்றார் இவர்.

"பார்க்கலாம். அவளுக்குத் தள்ளாமை வந்து விட்டது. நம்முடன் வர முடிகிறதோ என்னவோ?"

பாட்டி வருகிறாள் என்பதில் உள்ளூற ஏற்பட்டிருந்த மகிழ்ச்சியைப் போல் பத்து மடங்கு பயமும் ஏற்பட்டிருந்தது. காரணம், அவள் சமையலறையிலிருந்து வாசல் வரை ஒரு பார்வை பார்த்து என் குடும்ப நிர்வாகத்தை எடை போட்டு விடுவாள்.

'இதை இப்படி வைத்தால் எடுப்பாக இருக்கும்...அதை நீ சரியாகச் செய்யவில்லை.'

மாற்றங்களும், திருத்தங்களும் ஏற்றுக் கொள்ளக் கூடியவை. அவள் சொல்லித் திருத்தும் முறையிலே நான் அதை அப்படியே ஏற்றுக் கொண்டு விடுவேன். இந்தக் கடிதத்துக்கு முன்னால் வந்த கடிதத்தில் என் கதை ஒன்றைப் பற்றிச் சரியாக விமரிசனம் செய்திருந்தாள்.

'நீ நன்றாகத்தான் எழுதியிருந்தாய். இருந்தாலும், என்னுள்ளே கதையின் கருத்து நன்றாகப் பதியவில்லை. மனத்தின் நுட்பத்தைக் கதைக் கரு தொடவில்லை என்கிறேன். ஏதோ மேலெழுந்தவாரியாகப் படிப்பவர்களுக்குப் பிடிக்கும். சுமார்தான்.'

"ஊரெல்லாம் 'ஓஹோ' என்று புகழ்ந்த கதையைப் 'பூ' வென்று விட்டாரே உன்பாட்டி?"—இவர் கேட்டார்.

"சொல்லட்டும். சொல்லட்டும். அவள் சொன்னால் சரியாகத்தான் இருக்கும். எனக்கே அந்தக் கதை திருப்திகரமாக இல்லை. இப்படித் தைரியமாக அவளால்தான் சொல்ல முடியும்."

"இல்லையென்றால் நீதான் ஒத்துக் கொள்வாயா?" குறும்பு தவழக் கேட்டுப் புன்சிரிப்புடன் என்னைப் பார்த்தார்.

"நல்லதும் கெட்டதும் தனித்தனியாகப் புரிந்து கொள்ளவேண்டும் என்கிற வழியை அவள்தான் எனக்குக் கற்றுக் கொடுத்தவள்."

"நான் நன்றாக இல்லை என்றால் சரி என்றிருப்பாயா?"

நான் பதில் சொல்வதற்குள் தெருவில் புடவைக்காரர் வந்து நின்றார்.

"பம்பாய் அம்மா எப்போ வருவாங்க அம்மா! இரண்டு மூன்று புடவைகளுக்குக் கிராக்கி இருக்கும்னேக..."

"இருபத்திரண்டாம் தேதி வருகிறார்கள். அடுத்த நாள் வாருங்கள். பிடித்ததை எடுத்துக் கொள்ளட்டும்!"

அவர் போய்விட்டார்.

"அப்படியே உனக்கும் புடவை வரும்படி உண்டு. உன் பாடு தேவலே. பாட்டி ஒன்று. அத்தை ஒன்று என்று ஏகப்பட்ட வரும்படி!"

இவருக்கு ஏன் இப்படிக் குமைச்சல் பீறிக் கொண்டு வரவேண்டும்? பாட்டி வருகிறாள் என்றால் இவருக்கு வயிற்றெரிச்சல். இவரை நான் சரியாகக் கவனிக்க மாட்டேனாம். பாட்டியும் பேத்தியும் ஓயாமல் பல விஷயங்களை அலசித் தீர்ப்போமாம்.

"இரவும் பகலும் நீங்கள் ஓயாமல் என்ன பேசுவீர்கள்?" என்று கேட்டார்.

"இதெல்லாம் யாருக்கு நினைவிருக்கிறது? பேசி முடித்ததும் மறந்து விடுகிறது."

"நெஞ்சழுத்தக்காரி நீ—சொல்லா விட்டால் போயேன்."

அப்புறம் மனுஷன் நாலைந்து நாட்களுக்கு என்னுடன் பேசவில்லை.

என் எதிரே ஒவ்வொரு நாளும் விடிந்து மடிந்து வந்தன. தேதித் தாள்கள் இன்னும் வேகமாக ஓட வேண்டும் என்று ஆசைப்பட்டேன். பாட்டி வருகிறாள் என்கிற செய்தி என் நினைவில் எத்தனை எத்தனை ஆண்டுகளைப் பின்னோக்கி ஓட விட்டன? இதயத்தின் ஆழத்தில் புதையுண்டு கிடந்த பால்ய நினைவுகளை நிழற் படம் போல் கண்டு ஆனந்திக்கும் வாய்ப்பை ஒரு கடிதம் ஏற்படுத்திவிட்டது.

அன்று இருபத்திரண்டாம் தேதி. விடிந்து எழுந்ததும் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டு தேதித்தாளைப் பார்த்தேன். அதில் இருபத்தியொன்று இருந்தது. வேண்டுமென்றே இவர் என்னைப் பார்த்துச் சிரித்தவாறு தாளைக் கிழித்தெறிந்தார். நான் எதிர்நோக்கிய இருபத்திரண்டு என் கண்கள் முன்பாக மினுக்கி நின்றது.

மாலை ஆறு மணிக்குப் பம்பாய் எக்ஸ்பிரஸ் வருகிறது. வெந்நீர் போட வேண்டும்; கடக்கடச் சமைக்க வேண்டும். விருந்தாளிகளை வரவேற்கும் முறையில் எல்லாமே ஒழுங்காக இருக்க வேண்டும்.

வேலைகளை முடித்துக் கொண்டு கூடத்தில் கடிகாரத்தை எட்டிப் பார்த்தேன். ஐந்தரை ஆகியிருந்தது. இன்னும் குறைந்தது ஒன்றரை மணி நேரமாவது அவர்கள் வருவதற்கு ஆகலாம். நேரம் நெருங்க நெருங்க என்னுள்ளே ஒரு பரபரப்பு.

கணவர் 'சென்ட்ரலு'க்குப் போக டாக்ஸி அழைத்து வருவதாகச் சொல்லியிருந்தார். தெருவில் டாக்ஸியும் வந்து நின்றது. நான் உடுத்துக் கொண்டு வாசலுக்கு வந்ததும், 'தெருக் கோடியில் சைக்கிளில் தந்திக்காரர் வருகிறாரே, யார் வீட்டுக்கோ?' என்று தயங்கினேன்.

நேராக அவர் எங்கள் வீட்டுக்குத் தான் வந்தார். கணவர் கையெழுத்திட்டு வாங்கித் தந்தியைப் பிரித்துப் படிக்கும்போது அவர் முகமும், கைகளும் இலேசாகச் சிவந்து நடுங்கின.

"என்ன?"

"ஒன்றுமில்லே. உள்ளே போகலாம்."

ஒன்றுமில்லை என்கிற சொல்லினுள்ளே விரும்பத் தகாத ரகசியம் ஒளிந்திருக்குமோ என்னவோ?

"இங்கே வா இப்படி — தைரியமாக இரு. நேற்று பகல் உன் பாட்டி மாரடைப்பால் காலமாகி விட்டாள்!"

"என்ன? என்ன?" தந்தியை நடுங்கும் என் விரல்களால் பிரித்தபடி கேட்டு ஊடுருவிப் பார்த்தேன். தவறாக இருக்குமோ, வேறு யாருக்காவது வந்த தந்தியோ என்கிற நப்பாசை எனக்கு. காகிதத்தில் இருந்த நாலு வார்த்தைகளுக்கு இடையே அதே தாழம்பூ மேனியும், படிப்படியான நரைத்த கூந்தலும், எடுப்பான நாசியும், கண்டிப்பும் குழைவும் தோன்றும் கண்களும்—சில நாளாக நனவிலே பூத்த அந்த இன்ப நினைவுக்குள் இத்துன்ப நினைவு கரைந்து கண்கள் குளமாயின.

# வட்டமேஜை



## மகாநாடா? மகாநாடகமா?

பள்ளிச் சீரமைப்பு மகாநாடுகள் பல சென்ற சில ஆண்டுகளில் நடந்து மகத்தான விளம்பரம் பெற்றுள்ளன. ஒவ்வொரு பள்ளிக்கும் தேவையான மதிய உணவுப் பொருள்கள், பள்ளிப் பிள்ளைகளுக்கான சீருடைகள், போதனைச் சாதனங்கள் ஆகியவற்றை ஆங்காங்குள்ள மக்களிடமிருந்து வசூலித்தலே இத்திட்டத்தின் நோக்கமாகும். இம்மகாநாடுகள் நடத்தப்படும் முறையிலே ஆசிரியர்கள் படும் அல்லல்களையும் விளம்பரப் படுத்த வேண்டிய தருணம் வந்து விட்டது. மாநிலக் கல்வி இயக்குனர் மாவட்டக்கல்வி அதிகாரிகளுக்கு உத்தரவிட, அவர்கள் பள்ளி ஆய்வாளர்களைத் தூண்ட, ஆய்வாளர்கள் ஆசிரியர்களை அச்சுறுத்த அவர்கள் தத்தம் பள்ளிக்கான ''சீரமைப்புக் குழுக்களை'' அமைக்கின்றனர்; அதாவது கிராமத்திலுள்ள சில முக்கியமான நபர்களின் பட்டியல் ஒன்றைப் பள்ளி ஆய்வாளருக்கு அனுப்புகிறார்கள். இந்த 'முக்கியமான புள்ளிகளுக்கும்' மகாநாட்டுக்கும் உள்ள தொடர்பு அவ்வளவுதான். அப்பாவி ஆசிரியர்களேதான் கையில் வசூல் புத்தகத்துடன் வீடு வீடாக களம் களமாகச் சென்று வசூலை ஆரம்பிக்கின்றனர். ஆனால் எவ்வளவு வசூலிக்கமுடியும் என்பதைப் பற்றிக் கவலையே படாமல் 'அதிகார பூர்வமல்லாத' ஒரு குறைந்த பட்ச வசூல் தொகை ஒவ்வொரு பள்ளிக்காகவும் நிர்ணயிக்கப்பட்டு அப்பள்ளியின் தலைமையாசிரியருக்கு அறிவிக்கப்பட்டு விடுகிறது. (இதை நிர்ணயிப்பது யார் என்பது ஆண்டவனுக்குத்தான் தெரியும்.) இத்தொகையைத் தலைமை ஆசிரியரும், இதர ஆசிரியர்களும் எங்கிருந்து எப்படிச் சேகரிப்பது? எனவே இதுவரை வசூலில் இருந்த கவனத்தில் ஒரு பெரும் பகுதியைக் கணக்குத் 'தயாரிப்பதில்' செலவிட வேண்டி வந்துவிடுகிறது. இந்நிலையில் பள்ளிப் பிள்ளைகளின் பெற்றோர்கள் அவரவர்களுடைய குழந்தைகளுக்குத் தைக்கும் ஒரு ஜதை சட்டை நிஜாரைப் பள்ளிக்கு அனுப்பும்படி கேட்டு வாங்கி அதைச் சீருடை 'நன்கொடை'யில் கணக்குக் காட்டுவதைத் தவறென்று சொல்ல முடியுமா என்ன? அல்லது ஏற்கெனவே பள்ளியிலிருந்த மேசை, நாற்காலி கரும்பலகை இவற்றுக்குப் புத்துயிரளித்து அவற்றின் மூலக்கிரயத்தையும் வசூல் தொகையாகக் காட்டுவதுதான் குற்றம் என்று கூற முடியுமா? ஏழை ஆசிரியர்களின் பொருளாதார நிலையை உணர்ந்த எவரும் அவர்கள் மீது இப்படிப் புகார் சுமத்த நிச்சயமாக முன் வரமாட்டார்கள்; கூடவும் கூடாது! எய்தவனிருக்க அம்பை நொந்து என்ன பயன்?

''பள்ளிச் சீரமைப்பு மகாநாடுகள்'' என்னவோ வெற்றிகரமாக நிறைவேறிவிடுகின்றன! சின்னஞ்சிறு ஊர்களும்கூடக் கல்வியின் பெருமையை உணர்ந்து ஆயிரக் கணக்கான ரூபாய் செலவிடும் உயர்நிலைக்கு வந்து விடுகின்றன! கல்வி இயக்குனர் நூற்றுக் கணக்கான மாணவ மாணவிகளுக்குச் சீருடை வழங்கி விடுகிறார்! ஆய்வாளரும், மாவட்டக் கல்வியதிகாரியும் இயக்குனரின் வாழ்த்துக்களைப் பெறுகின்றனர்! தமிழ்நாடு இந்தியாவிலேயே பெருஞ் சிறப்பு எய்திப் பிரதமரின் பாராட்டைத் தட்டிக் கொள்கிறது! இதெல்லாம் பத்திரிகையில் வெளியாகும் செய்திகள்: வெளியாகாத செய்திகளாவன: ஆசிரியர்கள்...மாத ஊதியத்தை இழந்தது; மாணவர்கள்...பாடங்களை இழந்தது; மொத்தத்தில், நன்னெறிகளைப் போதிக்க வேண்டிய ஆசிரியர் குழாம் தப்புக் கணக்குகளில் இறங்கிச் ஸ்வதர்மத்தை இழந்தது.

குளித்தலை
17-12-61 — சாரதா கிருஷ்ணமூர்த்தி

## கைத்தொழிலாசிரியர் கதி

அரசாங்க உத்தரவுப்படி 1-6-60ந் தேதி முதல் தகுதியுள்ள ஆசிரியர்களுக்கு, அவர்கள் ஆரம்பப் பள்ளி, உயர்தர ஆரம்பப் பள்ளி, உயர்நிலைப்பள்ளி இவற்றில் எதில் வேலை செய்தாலும் ஏற்றத் தாழ்வு இல்லாமல் ஒரே மாதிரியாகச் சம்பளம் வழங்கப்படுகிறது; ஆனால் ஒரே கல்வி யோக்கியதாம்சம் உடைய கைத்தொழில் ஆசிரியர்களுக்கு மட்டும் உயர்நிலைப் பள்ளிகளில் அதிகச் சம்பளமும், ஆரம்ப உயர்நிலைப் பள்ளிகளில் ஒரு சிலவற்றில் மிகக் குறைந்த சம்பளமும் வழங்கப்பட்டு வருகிறது. இது விஷயமாக மேல் இடங்களுக்குப் பல முறை விண்ணப்பித்தும் கேட்பாரில்லை.

இருகை
22-12-61 — பொ. கப்பு

## கண்டியூர் கண்ட கூட்டுறவு

தஞ்சை மாவட்டத்தில் தீவிர விவசாய அபிவிருத்தித் திட்டத்தை அமுலாக்கி உற்பத்தியை அதிகப் படுத்துவதாகப் பறைசாற்றி வரும் சர்க்கார், ஆங்காங்கு உள்ள கூட்டுறவு விற்பனை சங்கங்கள் காலா காலத்தில் உரங்களை விநியோகம் செய்யச் சரியான ஏற்பாடு செய்யவில்லை. தஞ்சை தாலுக்கா கண்டியூர் கூட்டுறவு விற்பனை சங்கத்தின் கீழுள்ள ஏழு கிராமங்களைச் சேர்ந்த சுமார் 4000 ஏக்கர் நிலங்களுக்கு என்று உரம் கிடைக்குமோ தெரியவில்லை. சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தந்தி கொடுத்தும் பலனில்லை.

கண்டியூர்
20-12-61 — டி. சோமு

## சொல்ல மறந்தார்கள்!

மீண்டும் ஆட்சிக்குவந்தால் எதைதையெல்லாமோ செய்வோம் என்று தேர்தல் பிரசாரம் செய்யும் காங்கிரஸ்காரர்கள் தாங்கள் நிச்சயமாகச் செய்யவிருக்கும் ஒரு விஷயத்தை மட்டும் மறந்து விட்டார்கள். அதாவது தேர்தல் முடிந்ததும் நமது மத்திய சர்க்கார் ஏறத்தாழ

## கல்கி
### சந்தா விகிதம்

| | ஒரு வருஷம் ரூ. ந பை | ஆறு மாதம் ரூ. ந பை |
|---|---|---|
| இந்தியா இலங்கை | 15—00 | 7—50 |
| பர்மா மலேயா வெளி நாடுகள் | 18—00 | 9—00 |

தனிப் பிரதி விலை 30 நயா பைசா

சந்தா தொகை முன்னதாக அனுப்பப்பட வேண்டும். வி.பி.பி. கிடையாது. இலங்கை நேயர்கள் மட்டும் வி.பி.பி. மூலம் சந்தா தொகையைச் செலுத்தலாம்.

மானேஜர், கல்கி காரியாலயம், சென்னை-10

ஏழுநூறு கோடி ரூபாய்க்குப் புதிய வரிகள் விதிக்கப்போகிறது. நமது தமிழ்நாட்டுச் சர்க்காரும் புதிதாக சுமார் 35 கோடி ரூபாய்க்கு வரி விதிக்கப் போகிறது. இவை தவிர வெளி தேசங்களிலிருந்து எத்தனையோ கோடிரூபாய்கள் கடனும் வாங்கப் போகிறது. எல்லாம் திட்டம் நிறைவேறுவதற்காகத்தான். 'ஆன முதலில் அதிகம் செலவானால் மானம் அழிந்து மதி கெட்டு...' என்ற மூதுரைதான் காங்கிரஸ் ஆட்சியை எண்ணுகையில் நினைவு வருகிறது.

வாணியம்பாடி
22-12-61 — வி. என். தத்தப்பன்

### செல்வர் செல்வாரா?

இராமநாதபுரம் தொகுதி சென்னை சட்டசபை ஸ்தானத்துக்குக் காங்கிரஸ் அபேட்சகராக இராமநாதபுரம் ராஜா ஸ்ரீ ஷண்முக ராஜேசுவர சேதுபதி அவர்களை நிறுத்தியிருக்கிறார்கள். 1957-ம் வருஷம் தேர்தலின் போது பல காரணங்களைக் குறிப்பிட்டு அவரைக் காங்கிரஸ் அபேட்சகராக நிறுத்தி வைக்க மறுத்த அதே காங்கிரஸ் இன்று அவரை நிறுத்தியிருக்கிறதென்றால், அது செல்வத்தையும் சமூக அந்தஸ்தையும் காட்டி மக்களை மயக்கச் செய்வதில் அக்கட்சியின் நம்பிக்கை வளர்ந்து வருவதற்கு ஓர் அத்தாட்சியேயாகும். இதற்காக வேனும், இந்தத் தேர்தலில் பணபலமில்லாத வேறோர் அபேட்சகரைத் தேர்ந்தெடுத்துத் தங்கள் நாணயத்தை நிலைநாட்ட வேண்டியது தொகுதி மக்களின் கடமையாகும்.

இராமநாதபுரம்
16-12-61 — க. முத்துராமலிங்க ஆச்சாரி

### உள்ளதும் போச்சு!

சென்னை ராஜ்யத்தில் அரசாங்க வசதி பெறும் ஆரம்பப் பள்ளிகளின் நிர்வாகத்துக்காக அப்பள்ளிகளுக்குச் சர்க்கார் மானியமாக இதுவரை பதினைந்து சதவிகிதம் வரையில் செலவுத் தொகை அளிக்கப்பட்டு வந்தது. ஆனால் இப்போது 1960-ம் ஆண்டு ஜூன் மாதம் முதல் டிசம்பர் மாதம் வரை பத்து சத விகிதத்துக்கு மேல் உபரியாகக் கொடுக்கப்பட்ட மான்யத் தொகையை உடனே திருப்புமாறும், இனி நிர்வாக மானியம் பத்து சத விகிதத்துக்கு மேல் வழங்கக் கூடாது என்றும் சர்க்கார் உத்தரவிட்டிருக்கிறது. (ஜி. ஓ. எண்: 356; தேதி: 16-2-1961.) தாங்கள் முன்பு வாங்கிய பணத்தைத் திரும்பவும் கட்டுவதென்பது, ஏற்கனவே பல இன்னல்களுக்கு ஆளாகியுள்ள நிர்வாகிகளுக்கு மிகவும் சிரமமாக இருக்கும். மேலும், நிர்வாக மானியங்கள் பதினைந்து சத விகிதமும், திறமை காட்டும் பட்சத்தில் மேலும் ஐந்து சத விகிதம் மானியமும் கேட்டுக் கொண்டிருக்கும் இக்காலத்தில் முன்பு கிடைத்ததையும் குறைப்பது வருந்த வேண்டியதாகும்.

குடந்தை
16-11-61 — வெ. பிச்சமணி

### பம்பாய்த் தமிழரின் உடனடித் தேவை

பம்பாய் நகரில் தமிழ் மக்கள் நிறுவியுள்ள சமூக, மத, கலாச்சார ஸ்தாபனங்கள் பல உள்ளன. இவற்றில் பல, சொந்தக் கட்டடம் எழுப்புவதற்கான முயற்சிகளில் ஈடுபட்டிருக்கின்றன. தமிழ் நூல் நிலையம் முதலியன நிறுவவும் அவை நன் முயற்சி எடுத்து வருகின்றன. இவைகளை வரவேற்க வேண்டியதே. என்றாலும் இந்த நூல் நிலையங்களின் நோக்கம் நிறைவேறுவதற்குத் தமிழ்க் குழந்தைகள் யாவரும் தமிழ் அறிவு படைத்திருக்க வேண்டியது அவசியமல்லவா? பம்பாயில் தமிழ்க் குலக் குழந்தைகள் தாய்மொழிப் பயிற்சி பெறப் போதிய பள்ளிகள் இல்லை. எனவே, பம்பாயிலுள்ள தமிழர் சங்கங்கள் தமிழ்க் கல்வி அளிக்கும் பல பள்ளிகளையும் எழுப்ப ஆவன செய்ய வேண்டியது அவசியமாகும். இவ்வாறு பள்ளிகள் நிறுவ அவை முன் வந்தால், பம்பாயிலுள்ள தமிழ் சமூகம் அவர்களுக்கு என்றென்றும் கடமைப்பட்டிருக்கும்.

பம்பாய்
12-12-61 — ஆர். எஸ். மணன்

### குட்டை உடைப்போம்!

விருத்தாசலம் தாலுக்கா ஏந்தல் என்னும் கிராமத்தின் பாசன ஆதாரமான பண்டாரத்தான் குட்டையை ரூ. 9000 மதிப்பீட்டில் மராமத்து செய்வதற்கு 1949-ல் அங்கீகாரம் அளிக்கப்பட்டது. ஆனால் பன்னிரண்டு ஆண்டுகளான பின் இன்றும் அத்திட்டம் நிறைவேற்றப்படவில்லை. முறையீடுகள் பல செய்தும் பலன் இல்லை. எங்கள் கிராமத்துக்கு எவ்வித நன்மையும் செய்யாதவர்கள் தேர்தலின்போது எந்தத் தைரியத்தில் வோட்டுக் கேட்க வரப் போகிறார்கள் என்பதுதான் புரியவில்லை.

ஏந்தல்
12-12-61 — பி. பெருமாள்

# ஈறு உபாதை மற்றும் பற்சிதைவிலிருந்து

## குணமடைந்ததைப்பற்றிய

# வியக்கத்தக்க செய்திகள்

தானாகவே விரும்பி எழுதப்பட்ட அத்தாட்சிக் கடிதங்கள்

## போர்ஹான்ஸ்

பற்பசையின் பிரத்தியேகமான மதிப்பை நிரூபிக்கின்றன.

**"எனக்கு இப்போது 55 வயதாகிறது.**

என்னுடைய எல்லாப் பற்களும் சீராகவே இருக்கின்றன. ஆனால் 1943-ல் என்னுடைய இரண்டு பல்வரிசைகளிலும் உள்ள முன்புற மற்றும் பக்கவாட்டிலுமுள்ள பற்கள் அசையத் தொடங்கின. அவை விழுந்துவிடுமென்றே நான் நினைத்தேன். 1943-ல் ஒரு நாள் போர்ஹான்ஸைப்பற்றிய குறிப்புகளைக் கண்டேன். நான் அதை உபயோகிக்கத் தொடங்கினேன். இப்போது போர்ஹான்ஸ் என் பற்களைக் காப்பதுடன் அவற்றை வலுவுள்ளதாகவும் செய்திருக்கிறதென்பதைக் கூற மகிழ்கிறேன்."

---

**"நான் எப்பொழுதும் போர்ஹான்ஸையே குறிக்கிறேன்.**

பற்கள் அல்லது ஈறுகளிலுள்ள கோளாறுகளுக்காக என்னிடம் சிகிச்சைபெறுபவர்களும் எப்பொழுதும் அதற்காக நன்றி கூறுகின்றார்கள். சிகிச்சை பெறும் குழந்தைகளைக்கூட போர்ஹான்ஸ் உபயோகிக்கும்படி நான் சிபார்சு செய்கிறேன். மேலும் என்னுடைய ஆஸ்பத்திரிக்கு வருபவர்களில் பலர் அவர்களின் குழந்தைகளுக்கும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள்."

---

**"நான் மிகச் சிறந்த பலனை அடைந்திருக்கிறேன்.**

போர்ஹான்ஸ் உபயோகிப்பதால், என் தகப்பனார்மூலம் நான், போர்ஹான்ஸ் ஈறுகளுக்குப் பலனளிக்கக் கூடியது என்று கேட்டிருக்கிறேன். ஆதலால், எனக்கு ஈறுகளில் உபாதை ஏற்பட்டவுடன், என் தந்தையின் புத்திமதிப்படி போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கினேன். அன்றிலிருந்து இன்றுவரை போர்ஹான்ஸையே உபயோகித்து வருகிறேன்."

**போர்ஹான்ஸ்**

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.




GEOFFREY MANNERS & CO., LIMITED

# கவர்ச்சி

எஸ்ஸார்ஸி

"ரேவதி!....." — மூர்த்தியின் குரல் சமையல் அறையை எட்டியது. "இதோ வந்துவிட்டேன்" என்று ரேவதி விரைந்து வந்தாள். மூர்த்தி சிரித்த முகத்துடன் தன் கையில் இருந்த பொட்டணத்தை அவளிடம் கொடுத்தான்.

"என்ன இது?...." ரேவதியின் முகம் வியப்பில் மலர்ந்தது.

"நமக்கு இந்த வருஷம் தீபாவளி இல்லை அல்லவா? அதற்கு வட்டி போட்டுப் பொங்கலைக் கொண்டாடலாம் என்று...."

ரேவதி பொட்டணத்தைப் பிரித்தாள். குழந்தைகளுக்கு 'ரெடிமேட்' உடைகள்; மூர்த்திக்கு வேட்டி, துண்டு; அப்புறம்.... கண்ணைப் பறிக்கும் வண்ணச் சேலைகள் இரண்டு!

ரேவதியின் கண்கள் மலர்ந்தன. இதழ்கள் விரிந்தன; முகம் சந்திர மண்டலம் போல் பிரகாசித்தது. அந்தக் குதூகல உணர்வின் நடுவே அவள் முகத்திலே பளிச்சிட்ட கேள்வியை மூர்த்தி கவனித்தான்.

"என்ன ரேவதி! ஸெலக்ஷன் எப்படி?"

"கேட்க வேண்டுமா? உங்கள் கைதான் தேர்ந்த கை என்று தீர்ந்திருக்கிறதே! ஸெலக்ஷன் விஷயத்தில் நவ நாகரிகப் பெண்கள் எல்லாரும் உங்களிடம் பிச்சை வாங்க வேண்டுமே!" என்றாள்.

"முகஸ்துதி இருக்கட்டும்; சேலைகள் எப்படி சொல்லு?"

"பிரமாதம்! பிரமாதம்!....... ஆனால்......"

"உம். ஆனால்?"

"இரண்டு புடவைகள் எதற்கு?"

"இரண்டும் எனக்குப் பிடித்தன; எடுத்து வந்தேன். உனக்கு எது பிடிக்கிறதோ அதை எடுத்துக் கொள்ளலாம். இந்தச் சாக்லேட் கலர் புடவை .."

"தேவாவை நினைப்பூட்டுகிறது!"

ரேவதி பளிச்சென்று இப்படிச் சொன்னதும் மூர்த்தி மூக்கின் மேல் விரல் வைத்து வியப்பே வடிவானான்.

"நம் கல்யாணத்தின் போது முதல் முதலாக நான் தேவாவைப் பார்த்த சமயத்தில் அவள் இதே புடவை மாதிரிதானே கட்டிக் கொண்டிருந்தாள்? அந்தத் தோற்றம் என் மனத்தில் அப்படியே பசுமையாகப் பதிந்திருக்கிறதே!" என்றாள் ரேவதி.

மூர்த்தி சிரித்தான். "அவள் தோற்றம் மட்டும்தானா உன் மனத்தில் பசுமையாகப் பதிந்தது?" என்று கேட்டான்.

"ஹூக்கும். உங்களுக்கு வேறே வேலை என்ன? அதுதான் ஆடாத ஆட்டமெல்லாம் ஆடி, எல்லாரையும் ஆட்டி வைத்து விட்டீர்களே! திரும்பத் திரும்ப அதை...."

"எங்கே, இதோ பார். இப்படி என்னைத் திரும்பிப் பார். ஆட்டி வைத்தது உங்களை நானா, என்னை நீங்களா?"

ரேவதி உடம்பைச் சிலிர்த்துக் கொண்டாள். அவள் கையில் இருந்த சேலைகள் நழுவி, பெஞ்சியில் விழுந்தன.

தெருவில் சுப்பராமன் குரல் கேட்டது; மூர்த்தி சென்றான். இருவரும் ஏதோ பேசிக் கொண்டே நடந்தார்கள்.

ரேவதி பெஞ்சியில் அமர்ந்து சுவரில் சாய்ந்தாள். அவளைச் சுற்றி ஜவுளி வகைகள் இருந்தன. அவள் மனத்தைச் சுற்றி நினைவு அலைகள் எழுந்தன.

*

மூர்த்திக்கும் ரேவதிக்கும் திருமணம் நடந்தபோது அவனுக்கு இருபத்தெட்டு; அவளுக்குப் பதினெட்டு. அவன் சுற்றமற்றவன்; தாய் நோய்வாய்ப்பட்டுக் கிடந்தாள். ஆகவே திருமணக் காலத்தில் உறவினர் என்று யாரும் அவனோடு வரவில்லை. இரண்டு மூன்று நண்பர்கள்; வனமோகினி போல் தேவா — இவர்கள் மட்டுமேதான் வந்தனர்

"யார் இந்தப் பெண்?" — ஒவ்வொருவரும் இப்படி நினைத்தார்கள்; ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டார்கள். அவள் மூர்த்தியின் உறவினள் அல்லள் என்பதை அனைவருமே அறிந்திருந்தனர். அதனால் அவரவர்களும் என்ன என்னவோ பேசிக் கொண்டார்கள்.

தேவா அழகிதான்; அபூர்வ அழகி என்று சொல்ல முடியாது. அவள் ஏழை என்பதை அவளுடைய அணிகளும் ஆடைகளும் எடுத்துக் கூறின. ஆனால் அவளிடம் நிறைந்திருந்த கவர்ச்சி! நாகரிகமாக, நாசுக்காக அவள் அலங்கரித்துக் கொண்டிருந்த முறையும், நீள் விழிகளும், முல்லைச் சிரிப்பும், சொல்லின் இனிமையும், ஒய்யார நடையும் அனைவரது மதியையும் கிறங்க வைத்தன.

திருமணம் நிகழ்ந்த ஊருக்கு அருகே உள்ள சிறு நகரத்தில் தான் அப்போது மூர்த்தி இருந்தான். தேவாவும் அங்கேதான் இருந்தாள். கல்யாணத்தில் கூடியிருந்தவர்களில், இருவரையும் சிறிது அறிந்தவர்களும் சிலர் இருந்தார்கள். அவர்கள் அழகாகக் கதை கட்டி அங்கே பரவ விட்டார்கள். வம்பிலே ருசி உடையவர்கள் எந்தக் காலத்தும் எந்த இடத்தும் இருக்கத்தானே இருக்கிறார்கள்

"உறவு இல்லை என்கிறீர்கள்; அவனை 'அண்ணா' என்று அழைக்கிறாளே!"

"இம்மாதிரி நபர்களுக்கு எல்லாருமே 'அண்ணாக்கள்' தான்!"

"மிக மிக ஒட்டிப் பழகுவது பார்ப்பதற்கு நன்றாக இல்லையே!"

"இதனாலெல்லாம் தப்புச் சொல்லி விட முடியுமா?"

"என்னமோ, சீதாராமன் நல்லவர்; அவர் பெண்கள் அடக்கத்தின் இருப்பிடம்; பாவம், இந்தப் பெண் ரேவதி கண்ணைப் பிசையாமல் நன்றாக வாழ வேண்டும்."

இம்மாதிரி பேச்சுக்கள் எங்கும் பரவாமல் இருக்குமா? ரேவதி செவிக்கும் எட்டியது; அவள் திகைத்தாள்;

இரவு நிச்சயதாம்பூலம் நிகழ்ந்தது. ரேவதி புத்தாடை தரித்த போது தேவா உதவ வந்தான். பின்னர், தேங்காய், பழம், தாம்பூலம், புஷ்பம், மஞ்சள் குங்குமம் முதலியவற்றை அவன் தான் ரேவதியின் மடியில் கட்டினான். சாக்லேட் வண்ணப் புடவையை உடுத்து, அன்பு மொழிகளும், மலர்ச் சிரிப்புமாய் அருகே நின்ற தேவாவை ரேவதி ஊடுருவினாள். களங்கமற்ற தேவாவின் கண்கள் ரேவதியின் உள்ளத்தைக் கவர்ந்தன. 'சே! இவள் நிர்மலமானவளாகத்தான் இருக்கமுடியும்' என்று எண்ணிக்கொண்டான்.

முகூர்த்தம் நடந்தது. இன்பக் கிளுகிளுப்பிலே திளைத்துக் கொண்டிருந்ததால் தேவா சம்பந்தமாக உறுதியாக அவள் மனத்திலே எவ்வித அபிப்பிராயமும் ஏற்படவில்லை. ஆயினும் தன் கணவரை அவன் அநாயாசமாகத் தொடுவது பிடிக்கவில்லை. அவன் அவளுக்கே உரியவன் அல்லவா?

"இதெல்லாம் என்ன விளையாட்டு! கர்நாடகம்!"

"அதுவும் குழந்தைகள் செய்தால் நன்றாகத்தான் இருக்கும்...."

தேவாவின் போக்குப் பிடிக்காதவர்கள், மூர்த்திக்குக் கேளாதபடி, தேவாவுக்குமட்டும் கேட்கும்படி கூறித் தங்கள் ஆத்திரத்தை வெளியிட்டுக் கொண்டார்கள். தேவாவின் முகம் கன்றிவிட்டது. மூர்த்தி அதைக் கண்டான்; ஒருவாறு சமித்தான். மாலைக்குள் அவன் நிலைமை மாற்றி விட்டான்.

மாலையில் நலுங்கு நடந்தது. காலையில் நாத்தனாரின் ஸ்தானத்தில் தாலி முடித்தது போலவே மாலையில் நலுங்கின் போதும், நலுங்குப் பொருள்களை எடுத்துக் கொடுத்தான் தேவா. அவன் என்ன சொன்னானோ அதன்படியெல்லாம் நடந்து கொண்டான் மூர்த்தி. பரிகாசமும் சங்கேத மொழிகளுமாய் ஒரே கோலாகலம். பெண்களில் சிலருக்கு மட்டுமே இந்நிலை பிடித்தது. மற்றவர்கள் எழுந்து போய் விட்டார்கள். தேவா



கொண்டு சந்தடியின்றி அங்கிருந்து அகன்றான்:

அட கடவுளே! தூய அன்புக்கு இந்தச்சமூகத்தில் இடமே இல்லையா? ஆணும் பெண்ணும் தூய நினைவோடு நெருங்கிப் பழகினால் அங்கே களங்கத்தான் இந்தச் சமூகத்துக்குத் தோன்றுமா?...

'ஒரு வேளை...எங்கள் பழக்கம் பிறர் கவனத்தைக் கவரும்படியாக இல்லையே. எப்போதும் உள்ளபடிதானே பழகுகிறோம்? பிறருக்காக அதைக் குறைத்துக் கொண்டால் மற்றவர்களுக்கு விரசம் தட்டாமல் இருக்கலாம்: ஆனால்...எங்கள் உள்ளங்களிலே கள்ளம் புகுந்து விடாதா?...'




வைச் சற்றுப் பாடும்படி பகட்டுக் கொண்டான் மூர்த்தி. 'நாம் இல்லே வேண்டா விருந்து' என்கிற நினைப்பை ஒதுக்கி மிக நல்ல கீர்த்தனைகளில் இரண்டு பாடினான். தேவா. தனுங்கு, பத்தியம், சினிமாப் பாட்டு முதலியவற்றைப் பாடினான். இனிய குரலில் எழுந்த நல்லிசையாக ஒலித்தது பாட்டு. கேட்டு ரசிப்பவர்தான் இல்லை.

ஏழு மணி சுமாருக்கு ஏதோ அலுவலாகப் புறக்கடைப் பக்கம் போனான் மூர்த்தி. மாட்டுக்கொட்டிலில் பேச்சுக் குரலும் யாரோ விம்மும் ஒலியும் கேட்டன.

"வீணுக்கு அழாதேடி ரேவதி. உன் தலையிலே இப்படி எழுதியிருக்கிறது. உன் அப்பாவுந்தான் மூன்று வருஷங்களாய் அலையாத இடமெல்லாம் அலைந்தான் படாத பாடெல்லாம் பட்டான். பிராப்தம் இப்படி இருக்கிறது. இப்போது நாலு பேர்கள் நாலும் சொல்கிறார்கள். முன்பே தெரிந்திருந்தால்.... உம். அந்தக் குட்டி அவனை எப்படித்தான் ஆட்டி வைக்கிறாள்! அவன் சட்டையைக் கழற்றினால் அவள் கையை நீட்டுகிறாள். அவனும் கொடுக்கிறான். முகம் துடைத்துக் கொள்ள அவன் துண்டை அவள் உபயோகிக்கிறாள். அவன் பெட்டியைத் திறக்கவும் பணங்காசு வரவு செலவுகளைச் செய்யவும் அவளுக்கு அதிகாரம் இருக்கிறது. அவன் நாலு பேர் எதிரிலேயே இப்படியென்றால் தனிமையில் எப்படி என்று எண்ணிப் பார்க்கவே நெஞ்சு நடுங்குகிறதடியம்மா. சதா காலமும் இவன் அவள் வீட்டிலேயேதான் கிடப்பானாம். இருவரும் சேர்ந்து வேலை போ இன்றி ஊர் சுற்றுவார்களாம். என்னவோ போ. உன் அழகுக்கும் அறிவுக்கும் காரியம் செய்கிற விதரணைக்கும் செல்வமாக நீ வளர்ந்ததற்கும்..."

"பெ..ரி..ய..ம்..ம..ா..!......"

இதற்கு மேல் அங்கே நின்றுகொண்டிருக்க மூர்த்திக்குப் பிடிக்கவில்லை. கோபம் எரிமலையாகத்தான் வந்தது. பாடுபட்டு அடக்கிக் மூர்த்தியிடம் கலகலப்பு மறைந்தது. "என்ன அண்ணா? ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள்?" என்று தேவா பல தடவைகள் தொணதொணத்து விட்டாள். "ஒன்றும் இல்லை. சும்மா இரு..தலையை வலிக்கிறது!" என்று படுக்கையில் சாய்ந்தானவன். அந்தப் பெண் தேவா என்ன செய்தாள் தெரியுமா? பெண் வீட்டாரிடம் ஓடினாள். 'அண்ணாவுக்குத் தலைவலி: மருந்து இருந்தால் கொடுங்கள்' என்று பெற்று வந்தாள். மூர்த்தியின் பொட்டுக்களில் தேய்த்தாள். அவனுக்கு இதமாயிருந்தது. மருந்து கொடுத்தவர் பின்னோடு நாலு பேர்களை அழைத்து வந்தார். அந்தக் காட்சியை அவர்களுக்குக் காட்டி அழைத்துச் சென்றார்.

இதன் பின்னர் இரு தரப்பிலும் யாருக்கும் எதுவும் ரசிக்கவில்லை. 'காமா சோமா' என்று காரியங்கள் நடந்தன. பொழுது மந்தமாக ஓடிற்று.

மூர்த்தி ஊருக்குப் புறப்பட்டான். அவனுடனேயே ரேவதியை அனுப்பி வைக்க ஏற்பாடு ஆகியிருந்தது. மூர்த்தி அதை மறுத்து விட்டுக் கிளம்பினான். இந்த மறுதலுக்கு எல்லாரும் வேறு விதமாகப் பொருள் கொண்டார்கள் — தங்கள் போக்கில்.

வண்டி புறப்பட்டது. "எப்பொழுது கொண்டு விட வேண்டும் என்று கடிதம் எழுதுங்கள்" என்றார் சீதாராமன்.

"கடிதம் எதற்கு? உங்கள் எல்லாருடைய மனமும் என்று தெளிகிறதோ அன்றுகொண்டு வந்து விடலாம்" என்றான் மூர்த்தி.

வண்டி சென்றது. எல்லாரும் திரும்பிப் போய் விட்டனர்.

ஆறு மாதங்கள் ஓடி மறைந்தன. சீதாராமனின் கடிதங்களுக்கு மூர்த்தியிடமிருந்து நேரான பதில் இல்லை. ரேவதியை எழுதத் தூண்டினார்கள். எழுதினான். "நான் நல்லவன். என் தேவா நல்லவள். இல்லை என்பது உன்னைச் சார்ந்தவர்களின் அபிப்பிராயந்



# கயிற்றுத் தளவிரிப்புகள்
(COIR CARPETS)

# உபயோகித்து உங்கள் வீடுகளை அழகுமிக்கதாக ஆக்குங்கள்

கயிற்றுத் தளவிரிப்புகள் விரிக்கப்பட்ட அறைகளில் வசிப்பது மனமகிழ்ச்சி ஊட்டுகிறது. கயிற்றுத் தளவிரிப்புகள் கவர்ச்சி கரமானவை. நீடித்து உழைப்பவை. கண்கவர் வர்ணங்களில் கிடைக்கின்றன. ஒரு கயிற்றுத் தளவிரிப்பிற்காகச் செய்யப் படும் முதலீடு லாபகரமானது. உங்கள் பணத்திற்குரிய சிறந்த பயனை நீங்கள் பெறுகிறீர்கள்.

உங்களுக்கு அருகிலுள்ள காயர் போர்டு ஷோரூமில் உள்ள உன்னத ரகங்களைப் பார்வையிடுங்கள்.

# காயர் போர்டு

## ஷோரூம் & ஸேல்ஸ் டிபோ

- 5, ஸ்டேடியம் ஹவுஸ், சர்ச்கேட், பம்பாய்.
- 16-A, ஆசப் அலி ரோடு, புது டெல்லி-1. போன்: 26988
- 1/155, மவுண்ட் ரோடு, மதராஸ்-2. போன்: 85787.
- 1-A, மஹாத்மா காந்தி ரோடு, பெங்களூர்-1. போன்: 70216.
- 22, லைடன் தெரு, (வாசல் பார்க் தெருவில்) கல்கத்தா-16. போன்: 44-5287.

**காயர் போர்டு** (இந்திய அரசாங்கம்) எர்ணாகுளம்



# வேப்பம் சக்தி இணையற்றது

2,000 வருட காலமாக இதன் கிருமிநாசன சக்தி நிரூபிக்கப்பட்டு இருக்கிறது.




**நீம்** டூத் பேஸ்ட்

வேப்பம் குச்சியின் அற்புத கிருமி நாசன சக்தியும், பல் சுகாதாரத்திற்கான நவீன பொருள்கள் அடங்கிய ஒரே பற்பசை.

தி கல்கத்தா கெமிகல் கம்பெனி லிமிடெட், கல்கத்தா-29.
தென் இந்திய ஆபீஸ்: 3/149, பிராட்வே, மதராஸ்-1



# தொழில் முன்னேற்றமே தேசிய வளம்

எங்களது நிறுவனத்தில் பிக்செட் டிபாசிட்டுகளில் மூலதனம் செய்து நிறைய சம்பாதியுங்கள்.

இத்தகைய டெபாசிட்டுகளுக்கும் அதற்கான வட்டிக்கும் நிபந்தனை எதுவுமின்றித் தமிழக அரசு உறுதி அளிக்கிறது.

எங்கள் பிக்சட் டிபாசிட்டுகளின் பேரில் கீழ்க்கண்டவாறு வட்டிகள் அளிக்கிறோம்:

| | | |
|---|---|---|
| . | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு ... ... | 4¼ % |
| 2 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு ... ... | 4½ % |
| 3 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு ... | 4¾ % |
| 4 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு ... ... | 5 % |
| 5 | வருடத்திலிருந்து 20 வருடம் வரை வருடம் 1க்கு ... ... | 5¼ % |

மற்ற விவரங்களுக்கு எழுதவும்: எஸ். ராஜரத்தினம், காரியதரிசி



## தி மதறாஸ் இண்டஸ்டிரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிமிடெட்

38, ஒயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14

MIIC-4-9A

நீயும் அந்தக் குட்டையில் ஊறிய மட்டை தானே? 'முன்பே தெரிந்திருந்தால் இந்தச் சம்பந்தத்தை நிறுத்தியிருக்கலாம்' என்றாள் உன் பெரியம்மா. நானும் அதையே தான் திருப்பிச் சொல்ல வேண்டியிருக்கிறது. விவேகம் இல்லாத உங்களோடு உறவாட எனக்குப் பிடிக்கவில்லை'' என்று மூர்த்தி பதில் எழுதினான். அதைக் கண்டு ரேவதி வாய் விட்டு அழுதாள். பிடிவாதம் செய்து கணவன் இல்லத்துக்குப் புறப்பட்டு விட்டாள்.



''குழாய் ஒழுகிக் கொண்டிருந்தால் நீங்கள் அதை எப்படி நிறுத்துவீர்கள்?''
''ஒரு 'வாஷர்' போட்டு நிறுத்தி விடுவேன். ஏன் கேட்கிறாய்?''
''ஒன்றுமில்லே. என் தம்பி மூக்கு எப்பப் பாத்தாலும் ஒழுகிண்டிருக்கு. அதுக்குத்தான்!''

**வா**சலில் வண்டி வந்து நின்றது. மூர்த்தி தெருத் திண்ணையில் அமர்ந்து யாருடனோ பேசிக் கொண்டிருந்தான். சீதாராமனைக் கண்டதும், ''வாருங்கள்'' என்று தலையசைத்து வரவேற்று விட்டு நண்பரோடு பேச்சைத் தொடர்ந்தான். சீதாராமனும் திண்ணையில் அமர்ந்து கொண்டார். ரேவதி, உடல் நடுங்க, கால்கள் தடுமாற, நெஞ்சு 'பக் பக்' என்று அடித்துக்கொள்ள மெல்ல நடந்து உள்ளே சென்றாள்.

முற்றத்திலே தேவா, மூர்த்தியின் தாயினுடைய புடவையை உலர்த்திக் கொண்டிருந்தவள் கிழவி வாந்தியெடுக்கும் சத்தம் கேட்டுக் கூடத்துக்கு விரைவாக ஓடினாள். ரேவதி இதையெல்லாம் பார்த்துக்கொண்டே உள்ளே போனாள்.

பாகீரதி வாந்தியெடுத்து விட்டு ஆசுவாசத்துடன் கண்ணை மூடிச் சுவரில் சாய்ந்து கொண்டிருந்தாள். அருகில் காலடி ஓசை கேட்டதும் தேவா நிமிர்ந்தாள். உடனே அவள் முகம் முழு மதியாய்ப் பிரகாசித்தது. ''அம்மா, அம்மா, கண்ணைத் திறந்து இங்கே பாருங்களேன்!'' என்று குரலில் மகிழ்ச்சி கொந்தளிக்கக் கூவினாள்.

பாகீரதி கண்ணைத் திறந்தாள். எதிரே பொற்சிலையைக் கண்டாள். ரேவதி மாமியாரை வணங்கினாள்.

''இந்த அண்ணாவுக்கு இப்படித்தான் புத்தி புகட்ட வேண்டும்!''

''மகாராஜியாய் ஆயிரங்காலம் வாழ வேண்டும். உம்...வாசலில் அவன் இல்லையா?.....குரல் கொடுக்கப்படாதா? சுற்றிக் கொட்ட வேண்டாமா?...'' என்று கேட்டாள் பாகீரதி.

''அதனால் என்ன அம்மா! முற்றத்தில் நிறுத்தி இப்போது அதைச் செய்து விடுகிறேன்'' என்று பரபரப்புடன் தேவா மஞ்சள் நீரைக் கரைத்தாள்.

'நான் இருந்து புரிய வேண்டிய பணிவிடைகளையெல்லாம் இவள் செய்கிறாள்' என்று ரேவதி மனம் குன்றினாள்.

''பானகம் கரைத்துக் கொண்டுவா. துளி எள்ளும் வெல்லமும் கொண்டு வா'' என்றாள் பாகீரதி. மருமகளின் எழில் தோற்றத்தால் அவள் உள்ளத்தில் நிறைந்த மகிழ்ச்சி அவளுக்குப் புதிய தெம்பைக் கொடுத்தது.

''அம்மா ரேவதி, இந்தப் பெண் தேவா என் வயிற்றிலே பிறக்கவில்லை. ஆனால் பெரும்பாலும் இங்கேதான் வளர்ந்தாள். இரண்டு வயதுக் குழந்தையிலிருந்து உன் கணவன் இவளைத் தூக்கி, எடுத்து வளர்த்தவன்; ஊரார் கண்ணுக்கு இவள் பெரிய பெண்ணாகத் தோன்றலாம்; எங்களுக்கு இன்னமும் குழந்தைதான். நீயும் அவளிடம் அன்பாய் இரு அம்மா!''

ரேவதி அந்தப் பொன்மொழிகளைச் சிரம் தாழ்த்தி ஏற்றுக் கொண்டாள். தேவா அவளைப் பார்த்துச் சிரித்தாள்

சீதாராமன் கடைவீதிக்குப் போய் வருகிறேன் என்று கூறிப் போனார். மூர்த்தி உள்ளே வந்தான். மனைவியின் தோற்றமும் வருகையும் அவன் உள்ளத்தில் குதூகலத்தை நிறைத்திருந்தாலும் பாடுபட்டு, வேண்டுமென்று முகத்தை 'உர்'ரென்று வைத்துக் கொண்டு உள்ளே வந்தான். ரேவதி அவனை வணங்கினாள். அவன் அதைப் பொருட்படுத்தாமல் அப்பால் சென்றான். அதைக் கண்ட தேவா ஓடி வந்தாள். ''மிகவும் நன்றாயிருக்கிறது அண்ணா உங்கள் போக்கு: தென்னைமரத்தில் தேள் கொட்டிற்றாம்; பனைமரத்தில் நெறி

கட்டித்ரும். வழியோடு போகிறவர்கள் செய்கிற தவறுகளுக்கெல்லாம் மதனியா பொறுப்பாளி?'' என்று பொரிந்தாள்.

''ஏன் இவளுந்தான் மாட்டுக் கொட்டிலில் விம்மினாள்.''

''கனாப்பார் கரைத்தால் கல்லும் கரைகிறது!'' என்றாள் தேவா சமாதானமாக.

''சரி சரி. இங்கே அம்மா எதிரில் ஒன்றும் வேண்டாம்.''

மூர்த்தி அப்பால் சென்றான். தேவா ரேவதியைத் தாண்டினாள்; ரேவதி மூர்த்தியிடம் சென்றாள். மீண்டும் அவனை வணங்கி எழுந்து ''என்னை மன்னித்து விடுங்கள்'' என்று கூறினாள்.

மூர்த்தியின் மனம் இளகிற்று. மனைவியை அணைத்துக் கொண்டான். நீர் துளும்பும் அவள் கண்ணைத் துடைத்தான்.

''ரேவதி! தேவாவைத் தவறாக நினைக்காதே. பிறந்த உடனே தாயை இழந்த அந்தத் துர்ப்பாக்கியசாலியை உன் மாமியார்தான் வளர்த்தாள். சென்ற ஆண்டில் தகப்பனாரும் போய் விட்டார் என் முயற்சியிலே படித்தாள். சென்ற மாதம் தான் நகரசபையில் வேலை கிடைத்தது. அங்கே வேலை பார்த்து வருகிற என் நண்பன் சங்கரனுக்கும் இவளுக்கும் விரைவில் திருமணம் நடக்கும். நீ அவளை உன் தங்கையாகப் பாவிக்க வேண்டும்.'' அவன் நாத் தழுதழுத்தது.

''அம்மா குறிப்பாக எல்லாம் சொன்னார்கள்'' என்றாள் ரேவதி.

சிரித்த முகத்துடன் அவர்கள் வெளிவந்த போது தேவா, ''அப்பாடா! இப்போதுதான் என் மனம் நிம்மதி பெற்றது'' என்றாள்.

சீதாராமன் உணவருந்தி ஊருக்குக் கிளம்பினார். பெண் தனிமையில் குறிப்பாகச் சொன்ன சில சொற்களிலிருந்து அவர் மனத்தில் இருந்த பளு நீங்கி நிம்மதியாக ஊருக்குத் திரும்பிச் சென்றார்.

அடுத்த மாதம் தேவா-சங்கர் திருமணம் நிறைவேறிற்று.

மார்கழி முடிகிற சமயம் சீதாராமன், ரேவதிக்குக் கனுச் சீர் கொண்டு வந்தார். மூர்த்தி வீட்டுக் கூடத்தில் முன்னரே நிறைந்திருந்த சீர் வகைகளைப் பார்த்து அவர் திகைத்தார். மூர்த்தியும் ரேவதியும் அந்தச் சீர் வகைகளுடன் தேவா வீட்டுக்குப் புறப்படப் போவதை அறிந்து வியந்தார்; மகிழ்ந்தார்.

''என்ன ரேவதி, ஒரேயடியாகச் சிந்தனையில் ஆழ்ந்து போய் விட்டாயே!'' என்று சிரித்தபடி கேட்டுக் கொண்டே மூர்த்தி வீட்டினுள்ளே வந்தான். ரேவதி நெடுமூச்செறிந்தாள்.

''இந்தச் சாக்லேட் கலர் புடவையைத் தேவாவுக்கு.....''

''அட என்ன ஒற்றுமை!.......என் மனத்தில் கூட.........''

''ஏனென்றால்.......பண்டிகைகளுக்கு நாம் கணிசமாக அவளுக்கு எதுவுமே செய்யவில்லை. மேலும்.....இப்போது அவள் உண்டாகியிருக்கிறாள்.....''

''அது சரி. சங்கர் போன மாதம் கோயம்புத்தூருக்கு மாற்றலாகிப் போனான். தேவாவும் போயிருக்கிறாளோ, இல்லை; இங்கே பாலூரில்தான் இருக்கிறாளோ! பார்சல் செய்தால் பொங்கலுக்கு.....''

''நீங்கள் நானே பாலூருக்குப் போய்க் கொடுத்து விட்டு வந்து விடுங்களேன்.''

''ஆபீசில் இப்போது லீவு கிடைக்காது ரேவதி!''

வாசலில் வண்டி வந்து நின்றது. இருவரும் சாளரத்தின் வழியே நோக்கினார்கள். என்ன அதிசயம்! தேவா இறங்கி உள்ளே வந்தாள். மகிழ்ச்சியில் ரேவதி அவளை இறுகத் தழுவிக் கொண்டாள்.

''அவரிடமிருந்து இன்றுதான் கடிதம் வந்தது அண்ணா. அடுத்த மாதம் தானேயாம். 'முடிந்தால் பொங்கலுக்கு வருகிறேன். தற்போது என்னிடம் பணம் இல்லை. அண்ணா மூலம் கடனாக ஒரு புடவை எடுத்துக் கொள்' என்று எழுதியிருக்கிறார்.''

ரேவதி உள்ளே போனாள். தட்டில் மஞ்சள், குங்குமம் தாம்பூலம் இவற்றுடன் புடவையை வைத்து எழுந்து வந்து, ''கடனாக வேண்டாம்; முதலாகவே இருக்கட்டும்'' என்று சிரித்தபடி தேவாவிடம் கொடுத்தாள். அவள் விழித்தாள். ரேவதி, ''இந்தப் பொங்கலுக்கு இது உன் அண்ணா உனக்கு அளிக்கும் கனுச்சீர்'' என்றாள். பிறகு கணவனும் மனைவியும் போட்டி போட்டுக் கொண்டு சற்று முன் நிகழ்ந்ததையெல்லாம் சொன்னார்கள். உணர்ச்சி வசப்பட்ட தேவா பொற்சிலையாய்க் காட்சி தந்தாள்.

அவ்விடத்துச் சூழலில் அன்பு மணம் நிறைந்து கமழ்ந்தது.




## குறிஞ்சி மலர்

பிரமன் கோடிக்கணக்கான உயிர்களைப் படைக்கின்றான். நல்லவர்களும், கெட்டவர்களும் கலந்து தான் பிறக்கிறார்கள்.

பிரமனுக்கும், எழுத்தாளனுக்கும் அதிகமான வித்தியாசமில்லை அல்லவா? இருபதாம் நூற்றாண்டில் ஆயிரக்கணக்கான நாவல்கள் பிறந்து தினந்தோறும் வளர்கின்றன. ஆனால் குறிஞ்சி மலரைப் போன்ற நாவல்கள் அபூர்வமாகத்தான் பிறக்க முடியும்.

'குறிஞ்சி மலர்' நாவல் பண்புக்கு உறைவிடமானதொரு புதுமையான இலக்கியச் செல்வம்.

கதைக்கு நிலைக்களங்கள் சங்கங்கள் வளர்த்த தமிழ் மதுரை மாநகரம், தெய்வ மணங் கமழும் திருப்பரங்குன்றம், இயற்கை அன்னை கொலுவீற்றிருக்கும் கோடைக்கானல் மலை ஆகியவை. தமிழ்நாட்டிலிருந்து நீண்ட தொலைவில் போய் வாழ்ந்து வளர்க்கும் தமிழுக்காக உயிரைக் கொடுக்கும் தமிழ் மக்கள் வாழும் இலங்கை கலைகளுக்கு இருப்பிடமான கல்கத்தா நகரம் ஆகிய பகுதிகளும் இந்த நாவலின் துணை நிலைக்களன்களாக வருகின்றன. வர்ணனைகளுக்கு ஒரு சட்ட திட்டம் உண்டு. ஆசிரியர் இந்த இடங்களின் அழகு இயற்கை வர்ணனைகளை வெகு ரசமாகவும் அலுப்புத் தட்டாமலும் சித்திரித்திருக்கிறார்.

அடுத்தபடியாகக் கதாபாத்திரங்கள் எல்லோரும் நம்மிடையே உலவி உயிர் பெற்று வாழ்கின்றார்கள்.

நம் தமிழ் நாட்டில் சீலவதிகளாக வாழ்ந்த ஔவையாரின் கல்வி அறிவும், மணிமேகலையின் ஞானமும் சோதியாய் நின்ற கண்ணகியின் வீரமும் பக்தியின் வடிவாய் வாழ்ந்த காரைக்கால் அம்மையாரின் பக்தியும் கன்னிகையாக வாழ்ந்து உலக இன்பத்தைத் துறந்த திலகவதியின் தியாகமும் பூரணமாகச் சேர்ந்து உருப்பெற்ற ஒரு கதா பாத்திரம் தான் கதாநாயகி பூரணி. மிகவும் பொருத்தமான பெயர்.

நேர்மை, வாய்மை, தூய்மை இந்த வார்த்தைகளுக்குப் பொருளாகவிளங்குகிறான் அரவிந்தன். பூரணியின் அரிய குணத்துக்கும் வறுமையிலும் செம்மையாக வாழ்ந்த அவளுடைய உயர்ந்த நோக்கத்துக்கும் மூன் ஆதாரமாக நினைவில் மட்டும் தோன்றும்படி சித்திரிக்கப்பட்டுள்ள அழகிய சிற்றம்பலம்—பூரணியின் குண சித்திரத்துக்கு மெருகூட்ட வருவதுபோல் கதையில் வரும் பெருந்தன்மை வாய்ந்த மங்களேசுவரி அம்மாள் — நியாய புத்தியும் நிலையில்லாத ஆனால் கபடமற்ற மனமும் கொண்ட முருகானந்தம், வளமான இளமையோடு துறுதுறு வென்று சுற்றிவரும் வசந்தா—என்று இப்படி ரத்தினங்களைத் தேர்ந்த பொற்கொல்லர் பொறுக்கி நல்ல ஆபரணத்தில் வைத்துக் கட்டுவதுபோல் கதாபாத்திரங்களை அமைத்திருக்கிறார் ஆசிரியர்.

ஆசிரியர் ஒவ்வொரு அத்தியாயத்தின் ஆரம்பத்திலும் ஒரு பாடலை (தாமே எழுதியவையும் பிறரால் எழுதப் பெற்றவையும்) எடுத்தாண்டிருக்கிறார். அந்தப் பாடல்கள் கதைக்குப் பொருத்தமாக இருப்பது மட்டுமல்லாமல் வாசகர்களுக்கு இலக்கிய உணர்வை ஊட்டுவனவாகவும் அமைந்திருக்கின்றன.

கதையின் தமிழ் நடையைப்பற்றிச் சொல்லும்போது இந் நாவலில் தமிழ்த்தாய் தன்னுடைய பூரண அழகுடன் நிறைந்து நின்று விளையாடுகிறாள் என்று தோன்றுகிறது. தமிழ் மொழியே ஆசிரியருக்குத் துணை நிற்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

நாவலில் அங்கங்கே கருத்தாழம் நிறைந்த வசனங்கள் நிரம்ப உள்ளன.

"முள்ளோடு பிறக்கிற செடிக்கு அந்த முள்ளே பாதுகாப்பாகிறமாதிரி இப்போது எனக்கு இருக்கிற ஆதரவு என் கவலைகள் மட்டும்தான்." "மனிதர்களின் சிறுமைகளையும், தொல்லைகளையும் பார்த்துப் பார்த்து உள் ஞானக் கண்கள் மலரப் போகின்றன."

"குற்றங்களை மறைவாகச் செய்து கொண்டு வெளியார் மெச்சும்படி செல்வனாக வாழ்வதை விடக் கேவலமான உழைப்பாளனாகும் வெளிப்படையான ஏழையாக வாழ்ந்து விடுவது எவ்வளவோ சிறந்தது." இப்படி இன்னும் பலப்பல.

பூரணியின் தந்தை மரணமடைந்த பின்பு வறுமையான குடும்ப நிலை, அதை எதிர்த்துப் போராடிய அவள் துணிவு, வறுமையிலும் செம்மையான அவளது வாழ்வு, அரவிந்தனுடன் சந்திப்பு, கோடைமலைவாசம் தெய்வீகக் காதல் தேர்தல் அமளிகள், இப்படி இக் கதையில் வருகிற சம்பவங்கள் அனைத்தும் இயற்கையாக நன்கு எழுதப்பட்டிருக்கின்றன.

பூரணியின் புனித நினைவில் அவள் கைவிளக்குடன் உயர உயரச் சென்று கொண்டிருப்பதையும் அவளைச் சுற்றிலும் அனுதாபத்துக்குரிய மக்கள் கூட்டம் பெருகி நிற்பதையும் அவளே அரவிந்தனிடம் சொல்லுகிறாள். அதைக் கேட்ட அரவிந்தன் "மற்ற ரோஜா, மல்லிகைப் பூக்களைப் போல் தினமும் மலரும் மலரல்ல பூரணி. சூடிக்கொள்ள முடியாத உயரத்தில் மலர்ந்துள்ள மலர் அவள். பூத்திருக்கும் குறிஞ்சி மலரே பூரணி" எனக் கருதும் போது நம் உள்ளம் உருகுகிறது.

நாட்டில் மலிந்து வரும் குற்றங்களையும், குறைகளையும் நீக்கப் பூரணியைப் போன்ற பெண் தேவை. தமிழ் நாட்டில் பழைய கலை முறைப் பெண்கள் நெஞ்சில் ஈரமும் வீரமும் நிறைந்து வாழ்ந்ததை இன்றும் நிலைவு படுத்தப் பூரணிகள் தேவைதான்.

இந்த நாவலில் பூரணியின் வாயிலாக ஆசிரியரின் ஆழ்ந்த இலக்கியச் சுவையையும் அருமையான கருத்துக்களையும் அறிகிறோம்.

முடிவு எதிர்பாராதது. ஆனால் கதாநாயகி பூரணியின் தூய வாழ்க்கை அரவிந்தனோடு உள்ளத்தால் மட்டும் ஒன்றுபட்டு வாழ்ந்த அமர வாழ்க்கையாக நிறைவு பெறுமாறு ஆசிரியர் அரவிந்தனை இயற்கை எய்தச் செய்கிறார். மனித இயல்புக்கு ஏற்ப அந்தப் பகுதியை எழுதும்போது ஆசிரியரும் கண்ணீர் சிந்தித்தான் இருப்பார். நாமும் கண்ணீருடன் தான் முடிவைப் படித்தோம். இதயத்தைத் தொடும் கதையின் முடிவு கதை முழுவதையுமே நம் மனத்தைவிட்டு அகலாமல் பதியச் செய்து விடுகிறது.

உண்மையைச் சொன்னால் இந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் குறிஞ்சி மலரைப் போன்ற ஒரு நாவல் பிறக்கவில்லையென்று தான் சொல்ல வேண்டும். கல்கியில் இந்தக் கதை வரும் போது ஆயிரமாயிரம் வாசகர்கள் படித்து உருகினார்கள்; மகிழ்ந்தார்கள். மறுபடியும் புத்தக வடிவில் படிக்கும்போது கூடக் கதையில் ஒன்றி விடுகிறோம். ஒவ்வொரு முறையும் புதுப் புது அழகையும், கருத்தையும் அநுபவிக்கிறோம்.

அழகான முகப்புப் படத்துடன் திருத்தமான அச்சுப் பதிப்பில் புத்தகமே அழகியதொரு குறிஞ்சி மலர்க் கொத்துப் போல் சிறப்புற அமைந்திருக்கிறது. —வசுமதி ராமசாமி

ஆசிரியர் நா. பார்த்தசாரதி (மணிவண்ணன்) வள்ளுவர் பண்ணை வெளியீடு, 137 பிராட்வே. சென்னை-1; விலை ரூ. 10.00;

## விடை தெரியுமா ?
## பலவகை விளையாட்டுகள்

ஓய்வுநேரத்தை வேடிக்கையாகக் கழிக்கப் புதிர் போடுவது ஒரு ரசமான விளையாட்டு. புதிர்களுக்கு விடைகாண முயலும்போது சிந்தனை சக்தி வளருகிறது. மூளைக்கு வேலை ஏற்படுகிறது. புத்திக் கூர்மையும் நுண்ணிய அறிவும் வளர ஏதுவாகிறது. இந்தப் புத்தகத்தில் 31 கணக்குகள் புதிர்களாகத் தரப்பட்டிருக்கின்றன. முயன்று பார்த்தபிறகு சரி பார்த்துக் கொள்ளப் பின்னால் விடையும் தரப்பட்டிருக்கிறது.

மைதானத்தில் ஆடும் விளையாட்டுகளைத் தவிர வீட்டினுள் உட்கார்ந்தபடியே விளையாடும் முப்பது விளையாட்டுக்களைத் தமிழ்நாட்டுக் குழந்தைகளுக்கு இந்தப் புத்தகத்தில் வழங்கியிருக்கிறார் இதன் ஆசிரியர். படிப்பதைவிட விளையாடிப் பார்த்து மகிழ வேண்டியவை.

தொகுத்தளிப்பவர்: குழந்தை; வெளியீடு, தமிழகம், 59, பிராட்வே, சென்னை-1. விலை: ஒவ்வொன்றும் ரூபாய் ஒன்று.

## திங்களோ திங்கள்

காதலர், கவிஞர், கதாசிரியர் எல்லோராலும் கொண்டாடப்படும் ஒருபொருள் சந்திரன். இருளை அகற்றி இன்ப ஒளியை ஊட்டும் சந்திரனைப் பற்றிப் பல சுவையான செய்திகளை முதியோர் இலக்கியத்துக்காகப் படைத்திருக்கிறார் இதன் ஆசிரியர். ஒவ்வொரு விஷயத்தையும் கதைகளாலும் பல உதாரணங்களாலும் விளக்கிக் கொண்டு போகும் ஆசிரியரின் முறை பாராட்டும்படியாயிருக்கிறது. சந்திரமண்டலத்துக்குக் குடியேறத் திட்டம் வகுக்கும் இந்தக் காலத்தில் முதியோர் கல்விக்குப் பயன்படும்வகையில் இந்நூலை எளிய முறையில் வெளியிட்டிருக்கும் ஆசிரியரைப் பாராட்ட வேண்டும்; பாராட்டியும் விட்டார்கள். இந்திய அரசாங்கத்தாரின் பரிசு பெற்ற நூல் இது!

ஆசிரியர்: ப. குணசேகர், வெளியீடு: மெர்க்குரி புத்தகக் கம்பெனி, ராஜ வீதி கோயமுத்தூர்-1. விலை 80 ந. பை.

## பாலர் பூங்கா

குழந்தைகளுக்காக எழுதப்பட்ட பல சிறந்த பாடல்கள் இந்தப் புத்தகத்தில் இடம் பெற்றிருக்கின்றன. ஆசிரியர் இளம் உள்ளங்களை உணர்ந்து எளிய நடையில் எழுதக் கூடியவர் என்பதை இந்தப் புத்தகத்திலுள்ள பாடல்கள் சொல்லுகின்றன. இதோ உதாரணத்துக்கு ஒரு பாடல்.

கத்திப் பாயும் உப்பு நீரின்
  கடலில் முத்து உண்டு
கொத்திக் கொல்லும் பாம்பின் கொடிய
  நஞ்சில் ரத்தினமுண்டு
குத்தும் முள்ளின் செடியின் அழகு
  குலுங்கும் ரோஜா உண்டு
எத்தித் திரிவோர் இதயந்தன்னில்
  ஏனோ இரக்கம் இல்லை ?

பாடல்களுக்கு ஏற்ற படங்கள் புத்தகத்தை அழகுபடுத்துகிறது.

ஆசிரியர்: பாரதன், வெளியிட்டோர் தமிழ் நிலையம், புதுக்கோட்டை விலை: ரூபாய் ஒன்று.

## இரு சகோதரர்கள்

திரு கு. அழகிரிசாமி அவர்களின் சிறுகதைகளிலுள்ள நயமான தன்மையைத் தமிழ் மக்கள் பல ஆண்டுகளாக அறிவார்கள்.

விதம் விதமான மையக் கருத்துள்ள சிறந்த சிறுகதைகளைத் தமிழுக்கு அளித்துள்ள அழகிரிசாமி அவர்களின் புதிய சிறுகதைத் தொகுதியே இரு சகோதரர்கள்.

அழகிரிசாமியின் எல்லாக் கதைகளிலும் ஒரு மனத்தத்துவ உண்மை அல்லது நயம் பொருத்தப்பட்டிருக்கும். அது வாசகனுடைய மனத்தைத் தொடுவதாகவும் இருக்கும். இத்தொகுதியில் உள்ள சந்திப்பு, சொல்லும் பொருளும் ஆகியவை மனத்தை உருக்கி உணர்ச்சி வசப்படுத்தும் இயல்புள்ளவை.

'பெருமாள் ஏழையில்லை' என்பது மெல்லியல் நகைச்சுவையில் சிறந்த கதை. முதற் கதை பிரச்னைக்குரிய அமைப்பைக் கொண்டது. ஆனால் வாழ்க்கையில் இல்லாத பிரச்னை அல்ல. தரிசனம், மலைப்பால், காதல் பிரச்னை, இரண்டு கணக்குகள், நல்லவன் ஆகிய பிற கதைகளும் சிறந்தவை. தமிழ் மக்கள் சிறந்த ஆசிரியரின் இந்தக் கதைத் தொகுதியைப் படித்துப் பயனடைவார்கள் என்று நம்புகிறோம்.

வெளியீடு: தமிழ்ப் புத்தகாலயம், சென்னை-14. விலை ரூ. 2.

Printed & Published by R. Ananthana rayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

## டாக்டர்கள் மில்க் ஆப் மக்னீஷியாவையே சிபாரிசு செய்கிறார்கள் — மிதமாக பேதி ஆவது, அமிலத்தை எதிர்த்து பூர்ண நிவாரணமளிப்பதில் சக்தி வாய்ந்தது.




உலகத்திலுள்ள ஆயிரக்கணக்கான டாக்டர்களையும், சிசு வைத்திய நிபுணர்களையும், பிரசவ வைத்தியர்களையும், ரண சிகிச்சை வைத்தியர்களையும் "நீங்கள் உங்கள் நோயாளிகளுக்கு பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியாவை சிபார்சு செய்கிறீர்களா?" என்று கேட்டதற்கு அவர்களில் அனேகர் "ஆம்!" என்று பதிலளித்தார்கள்.

ஆம், குழந்தைகளுக்கும், பிரசவம் மற்றும் ரண சிகிச்சை பெற்ற நோயாளிகளுக்கும் கூட பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா மிகவும் பலன் தரக்கூடியது என்று டாக்டர்கள் கருதுகிறார்கள்.

இதில் ஆச்சர்யமொன்றுமில்லை!

பேதி மருந்து ஆகவும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா நிதானமாகவும், செம்மையாகவும், இதமாகவும் வேலை செய்கிறது; ஜீரண உறுப்புகளை பலவீனப்படுத்துவதில்லை. அமிலங்களை அடக்கும் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வயிற்றுக் கோளாறு, வாயு, நெஞ்செரிச்சல் மற்றும் மலச்சிக்கலுடன் வரும் இதர அமில உபாதைகளிலிருந்தும் நிவாரணமளிக்கிறது.

எந்தவிதமான பேதி மருந்தும் இம்மாதிரி சுகமான பரிபூர்ண நிவாரணமளிக்காது!

உங்கள் டாக்டரைக் கேளுங்கள்! ஒவ்வொரு வீட்டிலும் கட்டாயம் இருக்கவேண்டியது

# பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா

REGD. TRADE MARK




இரைப்பையில் மித மிஞ்சிய அமிலத்தால் ஏற்படக்கூடும் அஜீரணத்திலிருந்து உடனடியாக நிவாரணம் பெற எங்கும், என்றும் இன்பமான, இனிப்பான பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா வில்லைகளை உட்கொள்ளுங்கள். 4 வில்லைகள் கொண்ட கையடக்கமான பாக்கெட்களிலும், 75, 150 கொண்ட புட்டிகளிலும் கிடைக்கும்.




பூரண விநியோகஸ்தர்கள்:

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் பிரைவேட் லிமிடெட்.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon